திலு, ஒரு கைம்மாறு – (செய்யக்கூடிய) ஒரு ப்ரத்யுபகாரத்தை, மாய னும் காணகில்லான் – எம்பெருமானும் கண்டறிவதற்கு முடியாதவனுவன்; (ஆதலின் நாம்), போற்றி உகப்பதும்– (ஆசார்யனைப்)புகழ்ந்து மகிழுவதும், புந்தியில் கொள்வதும் – மனத்தில் த்யானிப்பதும், போந்து புகழ் சாற்றி வளர்ப்பதும் – நிறைந்துள்ள கீர்த்தியைப் பறைசாற்றி (மேன்மேலும்) வருத்திசெய்வதும் (ஆகிய இவையெல்லாம்), முன்னம் பெற்றதற்கு – (நாம் ஆசார்யனிடமிருந்து) முன்பு பெற்ற உதவிக்கு, சற்று அல்லவோ– மிகவும் ஸ்வல்பமன்றோ ?

கருத்து — ஆசார்யன் சிஷ்யனுக்குச்செய்யும் உதவிக்கு ப்ரத்யுபகாரம் ஒருபோதும் செய்யமுடியாது 38

78 முன்பெற்ற ஞானமு மோகந் துறக்கலு மூன்றுரையிற்
றன்பற்ற தன்மையுந் தாழ்ந்தவர்க் கீயுந் தனித்தகவு
மன்பற்றி நின்ற வகையுரைக் கின்ற மறையவர்பாற்
சின்பற்றி யென்பயன் சீரறி வோர்க்கிவை செப்பினமே 39

[ பாசுரம் 39, 40– நிகமநாதிகாரம் ]

உரை — மன் பற்றி நின்ற வகை – மன்னனுகிய பகவானை (சசரண மாக) பற்றி உயர்ந்து நின்ற ப்ரகாரத்தை, உரைக்கின்ற மறையவர்பால்– உபதேசிப்பவர்களும் வேதார்த்தங்களை அறிந்தவருமான ஆசார்யர்கள் பக்கல், சீர் அறிவோர்க்கு – சிறந்த அறிவைப் பெற விரும்பும் அதிகாரி களுக்கு, முன் பெற்ற ஞானமும் – முன் ஆசார்யனிடமிருந்து பெற்ற விவேகமும், மோகம் துறக்கலும் – கலக்கம் தெளிதலும், மூன்று உரை யில் – ரஹஸ்யம் மூன்றில், தன் பற்று அது அன்மையும் – (பகவானுக்கே சேஷமாகித்) தன் ஸ்வாதந்த்ர்யம் இல்லாமையும், தாழ்ந்தவர்க்கு ஈயும் தனித் தகவும் – வந்து பணிந்தவர்க்கு உபதேசிக்கக் காரணமான நிகரற்ற கருணையும் (ஆகிய), இவை செப்பினம் – இந்த விஷயங்களை (இப்ப்ரபந்தத் தில்) வெளியிட்டோம். (இதை அநுபவிக்காமல்) சின் பற்றி என் பயன் ? – அற்ப விஷயங்களில் ஈடுபட்டு என்ன பயன் ?

கருத்து — ஆசார்யர்களிடம் உபதேசம் பெற்று விவே கம் பெறவிரும்புமவர்களுக்கு இந்த க்ரந்தத்தில் கண்ட விஷயங்கள் மிகப் பயன்படும் 39

79 செப்பச் செவிக்கமு தென்னத் திகழுஞ் செழுங்குணத்துத்
தப்பற் றவருக்குத் தாமே யுகந்து தருந்தகவா
லொப்பற்ற நான்மறை யுள்ளக் கருத்தி லுறைத்துரைத்த
முப்பத் திரண்டிவை முத்தமிழ்ச் சேர்த்த மொழித்திருவே. 40

உரை — சேழம் குணத்துத் தப்பு அற்றவருக்கு — சிறந்த குணங்களில் வழுவாத அதிகாரிகளவிஷயத்தில், தாமே உகந்து தரும் தகவால் — (பகவானும பாகவதாகளும) தாமே மகிழ்ந்து தரும கருணையால, ஒப்பற்ற நால் மறை—நிகரற்ற நான்கு வேதங்களின், உள்ளக் கருத்தில் — தாத்பாயத்தில, உறைத்து — (நன்கு) பரிசயம செய்து, உரைத்த— கூறப்பட்டவையும், செப்பச் செவிக்கு அமுது என்ன — உச்சரிக்கும்போது காதுக்கு அமுதம என்று சொல்லும்படி, திகழும் — பிரகாசிப்பவையுமான, இவை முப்பத்திரண்டு — இந்த முப்பத்திரண்டு பாசுரங்களும, முத்தமிழ் சேர்ந்த — (இயற்றமிழ, இசைத்தமிழ, நாடகத்தமிழ, என்னும) மூன்றுவகைத் தமிழ சேர்ந்த, மொழித் திரு — பாஷைக்கே அலங்காரமாகும

கருத்து — இந்தப் பாசுரங்கள தமிழுக்கே அலங்காரமாகும 40

எண்சீராசிரியவிருத்தம

80 புருடன்மணி வரமாகப் பொன்று மூலப்
பிரகிருதி மறுவாக மான்றண் டாகத்
தெருள்மருள்வா ளுறையாக வாங்கா ரங்கள்
சார்ங்கஞ்சங் காகமனந் திகிரி யாக
விருடிகங்க ளீரைந்துஞ் சரங்க ளாக
விருபூத மாலைவன மாலை யாகக்
கருடனுரு வாமறையின் பொருளாங் கண்ணன்
கரிகிரிமே னின்றனைத்துங் காக்கின் றனே 41

[ தத்துவத்ரயசிந்தநாதிகாரம ]

உரை — கருடன் உரு ஆம் மறையின்— கருடனுடைய சரீரமாய் நிற்கின்ற வேதத்தின், பொருள் ஆம் கண்ணன் — அர்த்தமாய நிற்கின்ற எம பெருமான், புருடன் — ஜீவன், மணிவரம் ஆக — ரத்நங்களுள சிறந்த கௌஸ்துபரத்நமாக, பொன்று மூலப் பிரகிருதி — அழியாத மூலப்பிரகிருதி, மறு ஆக — ஸ்ரீவத்ஸமென்னும மறுவாக, மான் தண்டு ஆக — மஹான் என்னும் தத்துவம கௌமோதகி என்னும கதையாக, தெருள் வாள் ஆக — ஜ்ஞாநம நந்தகமென்னும கத்தியாக, மருள் (வாள்) உறை (ஆக) — அஜ்ஞாநம (கத்தியின) உறையாக, ஆங்காரங்கள் சார்ங்கம் சங்கு ஆக — தாமஸாஹங்காரமும ஸாத்விகாஹங்காரமும முறையே சார்ங்கமென்னும வில்லும, பாஞ்சஜந்யமென்னும சங்கும ஆக, மனம் திகிரி ஆக— மனஸ் ஸுதர்சநமென்னும சக்கரமாக, இருடிகங்கள் ஈரைந்தும் சரங்கள் ஆக — (ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்து, கர்மேந்த்ரியங்கள ஐந்து ஆகிய) இந்த்ரியங்கள் பத்தும் அம்புகளாக, இருபூதமாலை வனமாலை ஆக — (தன்மாத்ர

கள ஐநது, பூதஙகள ஐநது ஆகிய) இருவித பூதஙகளின வரிசையும வந மாலையாக (இபபடி ஸகலததுவஙகளும தனககு ஆயுதமாகவும ஆபரண மாகவும நிறக), கரிகிரிமேல் நின்று — ஹஸதிகிரிமேல நினறு, அனைத்தும் காக்கின்றன் — ஸகலததையும ரக்ஷிககினறுன

ஜீவன கௌஸதுபமாய நிறகினறுன எனறுல ஜீவனுககு அபி மாநிதேவதையும கௌஸதுபததிறகு அபிமாநிதேவதையும ஒனறு எனறு தாதபாயம இஙஙனமே மேலும கணடுகொளவது

கருதது— சேதநமும, அசேதநமும எமபெருமானுககு ஆயுதஙகளாகவும ஆபரணஙகளாகவும நிறகினறன 41

81 ஆராத வருளமுதம் பொதிந்த கோயி
லம்புயத்தோ னயோத்திமன்னற் களித்த கோயி
றேலாத தனிவீரன் றொழுத கோயி
றுணையான வீடணற்குத் துணையாங் கோயில்
சேராத பயனெல்லாஞ் சேர்க்குங் கோயில்
செழுமறையின முதலெழுத்துச் சேர்ந்த கோயி
றீராத வினையனைத்துந் தீர்க்குங் கோயி
றிருவரங்க மெனத்திகழுங் கோயி றனே 42

[ பாசுரம 42, 43, 44— ஸநாநவிசேஷாதிகாரம் ]

உரை — ஆராத — (எவவளவு அநுபவிததாலும) தெவிடடாததும், ருள் அமுதம் பொதிந்த — கருணையே வடிவுகொணடதுமான ஸ்ரீரஙக தனெனனும) அமுதம நிறைநத, கோயில்—ஸநநிதியும, அம்புயத்தோன்— மரையில வஸிககும பரஹமா, அயோத்தி மன்னற்கு அளித்த கோயில்— யோதயைககு அரசனுன இக்ஷவாகுவுககுக கொடுதத கோயிலும, தோ ாத — தோலவியே அடையாத, தனி வீரன — நிகரறற வீரனுகிய ஸ்ரீரா ன, தொழுத கோயில் — ஆராதிதத கோயிலும, துணையான வீடணற்கு— ரீராமனுககு) ஸஹாயமாயிருநத விபீஷணனுககு, துணை ஆம் கோயில் — டிகமாயிருநத ஸநநிதியும, சோராத பயன் எல்லாம் — (வேறு இடததில) றமுடியாத பலனகளை யெலலாம, சேர்க்கும் கோயில் — அடைவிககும ாயிலும, செழு மறையின் — சிறநது நிறகும வேதததின, முதல் எழுத்துச் ர்ந்த கோயில் — முதல அக்ஷரமாகிய ப்ரணவததோடு (வடிவததால பர வாகாரமான விமாநததோடு) சேரநத கோயிலும, தீராத வினை னைத்தும் — (மறறவறறுல) நீஙகாத பாபஙகளை முழுதும தீர்க்கும் ாயில் — ஒழிககும கோயிலும, திருவரங்கம் எனத் திகழும் — திருவரங் என்று விளஙகும், கோயில்தான் — திவயதேசமேதான

ஸ்ரீரங்கவிமானம் அயோத்தியைக்கு அரசனான இக்ஷ்வாகுவுக்கு பரஹ்மாவினால் கொடுக்கப்பட்டு, முறையே அவனவம்சத்து அரசர்களுக் கெல்லாம் வந்து ஸ்ரீராமனுக்கும் கிடைத்துப் பிறகு விபீஷணனிடம் ஸ்ரீ ராமனால் அளிக்கப்பட்டுப் பின் ஸ்ரீரங்கத்தில் விபீஷணனால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டது. ஸ்ரீரங்கவிமானம் பரணவம்போன்ற உருவமுடையதாகும்.

கருத்து — ஸ்ரீரங்கக்ஷேத்ரம் மிகப் பெருமை வாய்ந்த தாதலின் வாஸத்திற்குச் சிறந்த ஸ்தலமாகும். 42

82 கண்ணனடி யிணையெமக்குக் காட்டும் வெற்புக்
கடுவினைய ரிருவினையுங் கடியும் வெற்புத்
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்புத்
தெளிந்தபெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்புப்
புண்ணியத்தின் புகலிதெனப் புகழும் வெற்புப்
பொன்னுலகிற் போகமெலாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரு மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கடவெற் பெனவிளங்கும் வேத வெற்பே 43

உரை — கண்ணன் அடி இணை — எம்பெருமானுடைய திருவடிக ளிரண்டையும், எமக்குக் காட்டும் வெற்பு—எங்களுக்குக் காட்டித் தருகின்ற திருமலையும், கடு வினையர் — கொடிய பாபத்தையுடையவர்களின், இரு வினையும் — (புண்யபாபங்களாகிய) இரண்டு கர்மங்களையும், கடியும் வெற்பு — ஒழிக்கும் திருமலையும், திண்ணம் — நிச்சயமாக, இது வீடு என்ன — இந்த ஸ்தலம் பரமபதமே என்று கூறும்படி, திகழும் வெற்பு — ப்ரகாசிக்கும் திருமலையும் தெளிந்த பெரும் தீர்த்தங்கள்—தெளிவுள்ள பெரிய (புண்ய) தீர்த்தங்கள், செறிந்த வெற்பு — நிறைந்த திருமலையும், புண்ணி யத்தின் புகல் இது — புண்ணியத்தின் இருப்பிடம் இது, எனப் புகழும் வெற்பு — என்று புகழப்படும் திருமலையும், பொன் உலகில் போகம் எ(ல்) லாம் — பரமபதத்தில் அடையும் அநுபவங்களையெல்லாம், புணர்க்கும் வெற்பு — (இங்கேயே) அடைவிக்கும் திருமலையும், விண்ணவரும் மண் ணவரும் — நித்யஸூரிகளாலும் பூலோகத்திலுள்ளோராலும், விரும்பும் வெற்பு — விரும்பப்படும் திருமலையும், வேங்கட வெற்பு என விளங்கும்— திருவேங்கடமலை என்று ப்ரகாசிக்கின்ற, வேத வெற்பே — *வேதத்தில் போற்றப்பட்ட திருமலையே.

கருத்து — பல பெருமை நிறைந்துள்ள திருவேங்கட மலையும் வாஸத்திற்குத் தக்க இடமாகும். 43

* ஸ்ரீநிவாஸம் ஹவுத காரணே விகடே

அறுசீரச் சந்தவிருத்தம்

83 உத்தமவ மர்ந்தலம மைத்ததோரே
ழிற்றனுவி னுயநத கணையா
லத்திரவ ரக்கன்முடி பத்துமொரு
கோத்தெனவு திர்த்த திறலோன்
மத்துறுமி குத்ததயிர் மொய்த்தவெணெய்
வைத்ததுணு மத்த னிடமா
மத்திகிரி பத்தர்வினை தொத்தறவ
றுக்குமணி பத்தி கிரியே. 44

உரை:— உத்தம அமர்த்தலம் — உயர்ந்த போர்க்களத்தில், அமைத்தது எழில் தனுவின் — அமைக்கப்பட்ட நிகரற்ற அழகிய வில்லினின்றும், ய்த்த கணையால் — செலுத்தப்பட்ட அம்பினால், அத்திர அரக்கன் முடி த்தும் — அஸ்த்ரபலமுள்ள ராக்ஷஸனாகிய ராவணனுடைய தலைகள் பத்தை ், ஒரு கோத்து என— ஒரு குலை என்று சொல்லும்படி, உதிர்த்த திற ான் — அறுத்துக் கீழே தள்ளின பலமுடைய இராமனும், மத்து உறு— ினால் கடையத் தகுந்த, மிகுந்த தயிர் — அதிகமான தயிரையும், த்தது மொய்த்த வெ(ண்ணெ)யை — (யசோதையால்) வைக்கப்பட்ட கமான வெண்ணெயையும், உ(ண்)ணும் அத்தன்—உண்ட கண்ணனுமான ாமியினுடைய, இடம் ஆம் — வாஸஸ்தலமாகிய, அத்திகிரி — ஹஸ்திகிரி னும் காஞ்சீக்ஷேத்ரம், பத்தர் வினை — பக்தர்களுடைய பாபங்களை, த்து அற அறுக்கும் — ஸம்பந்தம் இல்லாமல் ஒழிக்கவல்ல, அணி அத்தி ியே — அழகிய அந்தச் சக்ராயுதம் போன்றதேயாகும்.

ஹஸ்திகிரி வினையை ஒழித்துவிடும், அத்திகிரி அணியே— அந்தச் ராயுதம் (பகவானுடைய கைக்கு) அழகிறுக்குத்தான் என்றும் பெரியோர ாயிட்டிருக்கின்றனர்.

கருத்து — காஞ்சிக்ஷேத்ரவாஸமே பாபங்களை ஒழிக்க லது. 44

எழுசீராசிரியவிருத்தம்

84 எட்டுமா மூர்த்தி யெண்கண னெண்டிக
கெட்டிறை யெண் பிர கிருதி
யெட்டுமா வரைக ளின்றவெண் குணத்தோ
னெட்டெணு மெண்துணை மதியோர்க்
கெட்டுமா மலரெண் சித்தியெண் பத்தி
யெட்டியோ காங்கமெண் செல்வ
மெட்டுமா துணைமெட் டெட்டெணுங் கலையெட்
டிரதமே லதுவுமெட் டினவே. 45

[ திருமந்த்ராதிகாரம் ]

உரை — எட்டு மா மூர்த்தி—எட்டுப் பெரிய உருவங்களையுடையனை சிவனையும், எண் கணன் — (நான்கு முகங்களையுடையனதலால்) எட்டுக் கணகளையுடைய பரஹ்மாவையும், எண் திக்கு — எட்டுத் திசைகளையும், எட்டு இறை — எட்டுத் திக்பாலகர்களையும், எண் பிரகிருதி — எட்டுத் தத்துவங்களையும், எட்டு மா வரைகள் — எட்டுப் பெரிய குலபர்வதங்களையும், ஈன்று — படைத்தவனும், எண் குணத்தோன் — எட்டுக் குணங்களையுடையவனுமான எம்பெருமானுடைய (பெருமையை வெளியிடுகிற), எட்டு எ(ண்)ணும் — அஷ்டாக்ஷரத்தை (அர்த்தத்துடன்) அநுஸந்திப்பவரும், எண் குணமதியோர்க்கு — எட்டுக் குணங்களுள்ள புத்தியையுடையருமான விவேகிகளுக்கு, எட்டு மா மலர் — எட்டுப் பெரிய புஷ்பங்களும், எண் சித்தி — எட்டுவிதஸித்திகளும், எண் பத்தி — எட்டு வகைப் பக்தியும், எட்டு யோகாங்கம் — யோகத்தின் எட்டு அங்கங்களும், எண் செல்வம் — எட்டு ஐசுவரியங்களும், எட்டு மா குணம் — (முக்திபெற்ற பின் வரும்) எட்டுப் பெரிய குணமும் எட்டு எட்டு எனும் கலை — எட்டை எட்டால் பெருக்கி எண்ணப்படும் (அறுபத்துநான்கு) கலைகளும், எட்டு இரதம் மேலதுவும் — எட்டுரஸங்களுக்கும் மேலான சாந்தி (அடக்கம்) எனும் ரஸமும்(ஆகியவை எல்லாம்), எட்டின — கிட்டிவிடுகின்றன

சிவனுக்கு எட்டு உருவங்கள்— 1 பூமி, 2 ஜலம், 3 தேஜஸ், 4 வாயு, 5 ஆகாசம், 6 சந்த்ரன், 7 ஸூர்யன், 8 யஜமானன் என்பன.

எட்டுத் திசைகள்— 1 கிழக்கு, 2 தெற்கு, 3 மேற்கு, 4 வடக்கு, 5 தென்கிழக்கு, 6 தென்மேற்கு, 7 வடமேற்கு, 8 வடகிழக்கு என்பன.

எட்டுத் திக்பாலர்— 1 இந்த்ரன், 2 யமன், 3 வருணன், 4 குபேரன், 5 அக்நி, 6 நிருருதி, 7 வாயு, 8 ஈசானன் என்பவர்

எட்டு ப்ரக்ருதி— 1 ப்ரக்ருதி, 2 மஹான், 3 அஹங்காரம், 4 பூமி, 5 ஜலம், 6 தேஜஸ், 7 வாயு, 8 ஆகாசம் என்பன

எட்டுக் குலபர்வதம்— 1 ஹிமவான், 2 நிஷதம், 3 விந்தயம், 4 மால்யவான், 5 பாரியாத்ரகம், 6 மந்தரம், 7 மலயம், 8 மேரு என்பன

பகவானுடைய எட்டுக் குணங்கள்— 1 காமத்திற்கு வசப்படாதிருத்தல், 2 கிழப்பருவமில்லாமை, 3 சாவில்லாமை, 4 சோகமில்லாமை, 5 பசியில்லாமை, 6 தாகமில்லாமை, 7 போகத்திற்குரிய அழிவற்ற வஸ்துக்களையுடைமை, 8 நினைத்ததை முடிக்கவல்லமை என்பன.

புத்தியின் எட்டுக் குணங்கள்- 1 விஷயத்தை மனத்தில் வாங்குகை, 2 மனத்தில் தரிக்கை, 3 மறுபடி நினைக்கை, 4 பிறருக்கு எடுத்துக்கூறுகை, 5 பிறர் கூறுத விஷயங்களையும் அறிகை, 6 பிறர் கூறியதில் வேண்

டாத சிலவற்றைத் தள்ளுகை, 7 விஷயங்களைத் தெளிவுடன் அறிகை, 8 உண்மையான ஆத்தங்களை அறிகை என்பன

எட்டுப் புஷ்பங்கள்— 1 அஹிம்ஸை, 2 இந்த்ரியங்களை அடக்குதல், 3 ஸகல ஜந்துக்களிடமும் கருணை, 4 பொறுமை, 5 ஜ்ஞாநம், 6 தபஸ், 7 த்யாநம், 8 ஸத்யம் என்பன

எட்டுச் சித்திகள்— 1 வேதத்தை அத்யயநம் செய்தல், 2 அதன் அர்த்தத்தை அறிதல், 3 ஆராய்ந்து அர்த்தத்தை நிச்சயித்தல், 4 தான் கண்ட அர்த்தத்தை உறுதிசெய்ய வித்வான்களுடன் கலத்தல், 5 ஸித்தாந்தார்த்தத்தை எப்பொழுதும் மனத்தால் பரிசயம்செய்தல், 6 தன்னைப் பற்றிவரும் துன்பமில்லாமை, 7 ஐந்து பூதங்களாலும் வரும் துன்பமில்லாமை, 8 தெய்வத்தால்வரும் துன்பமில்லாமை என்பன

எட்டுப் பக்திகள்— 1 பாகவதர்களிடம் அன்புவைத்தல், 2 பகவானை ஆராதிப்பதில் மகிழ்வுகொள்ளல், 3 பகவானுடைய சரித்ரத்தைக் கேட்பதில் ஆவல்கொள்ளல், 4 அவனைப்பற்றிப் பேசினாலும் நினைத்தாலும் கேட்டாலும் குரல் தழுதழுத்துக் கண்ணீர்பெருகி மயிர்க்கூச்செறிதல், 5 அவனைத் தானே ஆராதிக்க முயலுதல், 6 அவனுக்குச்செய்யும் கைங்கர்யங்களில் டம்பமற்று இருத்தல், 7 அவனையே த்யானித்தல், 8 அவனிடம் அற்பப்பலன்களை யாசியாமை என்பன.

யோகத்தின் எட்டு அங்கங்கள்— 1 யமம்(—அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, காமத்தை அடக்குதல், பொருளைச் சேகக்ரு(ம்)படாமை) 2 நியமம் (-பரிசுத்தி, உள்ளதைக் கொண்டு திருப்தியடைதல், வ்ரதம் தவம்முதலியன செய்தல், வேதாந்தபரிசயம்செய்தல், எல்லாக் காமங்களையும் பகவானிடம் ஸமர்ப்பித்தல்) 3 ஆஸநம்(— பத்மாஸநம் பத்ராஸநம் முதலியன) 4 ப்ராணாயாமம்(— சுவாஸத்தை அடக்குதல்) 5 ப்ரத்யாஹாரம்(— இந்த்ரியங்களை உலகவிஷயத்திலிருந்து திருப்புதல்) 6 தாரணை(— பகவானுடைய திருமேனியை மனத்திற் கொள்ளுதல்) 7 த்யாநம்(—இடைவிடாது பகவானை த்யானித்தல்) 8 ஸமாதி(— அவ்வாறு த்யானித்து நேரில் கண்டாற்போன்ற நிலைமையை அடைதல்) என்பன [இந்த ஸமாதிதான் அங்கியாகிக் கீழ்க்கூறிய ஏழையும் அங்கமாகக் கொள்கிறது]

எட்டு ஐசுவர்யங்கள்— 1 அணிமா— சரீரத்தைச் சிறிதாக்கிக்கொள்ளல், 2 மஹிமா— பெரிதாக்கிக்கொள்ளல், 3 லகிமா— இலேசாகச் செய்தல், 4 கரிமா— கனமாக்கிக்கொள்ளல், 5 வசித்வம்— எல்லாவற்றையும் தன் வசமாக்கிக்கொள்ளல், 6 ஈசத்வம்— எல்லாவற்றுக்கும் தலைவனாயிருத்தல், 7 ப்ராப்தி— நினைத்தபொருளைப் பெறுதல், 8 ப்ராகாம்யம்—நினைத்தவிடம் செல்லும் வல்லமை என்பன.

எட்டுக் குணங்கள்— கீழ் எம்பெருமானுக்குச் சொன்ன எட்டுக் குணங்கள் அல்லது- 1 ஸகலஜந்துக்களிடமும் கருணை, 2 பொறுமை, 3 பொறாமையில்லாமை, 4 பரிசுத்தம், 5 வருந்தாமை, 6 நன்மையை நினைத்தல், 7 லோபமின்மை, 8 ஆசையின்மை என்பன

அறுபத்துநான்குகலைகளை வேறுநூல்களிற் காண்க

எட்டு ரஸங்கள்— 1 சிருங்காரம், 2 வீரம், 3 சோகம், 4 அற்புதம், 5 ஹாஸ்யம், 6 பயம், 7 இழிப்பு, 8 கோபம் என்பன

கருத்து:— திருமந்த்ரார்த்தத்தை அநுஸந்திப்பவருக்குப் பெறமுடியாத பலன் இல்லை. 45

எண்சீராசிரியவிருத்தம்

46 ஒண்டொடியா டிருமகளுந் தானு மாகி
ஒருநினைவா லீன்றவுயி ரெல்லா முய்ய
வண்டுவரை நகர்வாழ வசுதே வற்காய்
மன்னவற்குத் தேர்ப்பாக ஞகி நின்று
தண்டுளவ மலர்மார்பன் றனே சொன்ன
தனித்தருமந் தானெமக்காய்த் தன்னை யென்றுங்
கண்டுகளித் தடிசூட விலக்காய் நின்ற
கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின் றனே. 46

[ பாசுரம் 46 முதல் 49-வரை சரமசுலோகாதிகாரம் ]

உரை — வண் துவரைநகர் வாழ — அழகிய த்வாரகாநகரத்திலுள்ளவர் உஜ்ஜீவிப்பதற்கு, வசுதேவற்கு ஆய் — வஸுதேவனுக்குக் குமாரனாக அவதரித்து, மன்னவற்குத் தேர்ப் பாகனாகி நின்ற — அர்ஜுநனுக்குத் தேரோட்டும் பாகனாகி நின்றவனும், தண் துளவ மலர் மார்பன் — குளிர்ந்த திருத்துழாயுடன் பூவைத் திருமார்பில் அணிந்தவனுமான கண்ணபிரான், ஒண் தொடியாள் திருமகளும் — அழகிய கைவளைகளையுடைய பிராட்டியுடன், தானும் ஆகி — தானும் ஒன்றுகூடி, ஒரு நினைவால் ஈன்ற — ஒரே விதமான ஸங்கல்பத்தால் படைத்த, உயிர் எல்லாம் உய்ய — ஜீவாத்மாக்களெல்லாம் உஜ்ஜீவிப்பதற்காக, தானே சொன்ன — தானே (சரமசுலோகத்தில்) ...டட, தனித் தருமம் — நிகரற்ற உபாயமாக, எமக்குத் தான் ஆய் — ...தானேயாகின்றது (யாம் பரந்யாஸம் செய்ய அவன் தானே ...கின்றது) தன்னை என்றும் கண்டு களித்து அடி சூட — தன்னை ...த்தில் எப்பொழுதும் ஸேவித்து மகிழ்ந்து திருவடிகளை (நம் ...) தரித்துக் கைங்கர்யம் செய்வதற்கு, விலக்காய் நின்ற — தடையா

யிருந்த, கன்புதையல் விளையாட்டை — (ப்ரக்ருதியைக் கொண்டு தத்துவ ஜ்ஞாநத்தை ஒழிப்பதாகிய) கண்பொத்துமவிளையாட்டை, கழிக்கின்றன் — நீக்குகின்றான்.

கருத்து — சரமச்லோகத்தின் ஆசத்தை அறிந்து பரந்யாஸம்செய்தவனுக்கு ஸம்ஸாரபந்தம் நீங்கும் 46

[ சரமச்லோகத்தில் உள்ள ' ஸர்வதர்மாந் பரித்யஜ்ய '' என்னும் வாக்யத்திற்கு ஆறு அர்த்தங்கள் வெளியிடப்படுகின்றன—]

86 * மூண்டாலு மரியதனின் முயல வேண்டா
முன்னமதி லாசைதனை விடுகை திண்மை
வேண்டாது சரணநெறி வேறோர் கூட்டு
வேண்டிலய னத்திரம்போல் வெள்கி நிற்கு
நீண்டாது நிறைமதியோர் நெறியிற் கூடா
நின்றனிமை துணையாக வென்றன் பாதம்
பூண்டாலுன் பிழைகளெலாம் பொறுப்ப னென்ற
புண்ணியனார் புகழனைத்தும் புகழ்வோமே 47

உரை — (1) அரியதனில் மூண்டாலும் — செய்யமுடியாத உபாயத்தைச் செய்யத்தொடங்கிவிட்டாலும், முயல வேண்டா — (இனி அதில்) தலையிடவேண்டா, (2) முன்னம் — முதலிலேயே, அதில்—அவ்வுபாயத்தில், ஆசைதனை விடுகை — (செய்வதற்கு) ஆசையையே ஒழித்துவிடுகை, திண்மை — வலிமையாம் (சிறந்ததாம்), (3) சரணநெறி — சரணாகதி, வேறு ஓர் கூட்டு வேண்டாது — (குறிப்பிட்ட ஐந்து அங்கங்களைத் தவிர) வேறு ஒரு ஸஹாயத்தை எதிர்பாராது, (4) வேண்டில் — (சேதநன், அறியாது வேறு அங்கங்களையும் செய்ய) விரும்பிவிட்டால், அயன் அத்திரம்போல் — ப்ரஹ்மாஸ்த்ரம் (வேறு அஸ்த்ரத்தைப் பொறுக்காதது) போல, வெள்கிநிற்கும் — (சரணாகதியும் பலன்கொடுப்பதற்குக் கூசி) நின்றுவிடும், (5) நீண்டாதும் — நீண்ட காலம் அநுஷ்டிக்கப்படவேண்டியதும், நிறை மதியோர் நெறியில் — பூர்ணமான ஜ்ஞாநமுடையார்க்கு உரியதுமான (பக்தியோகம் முதலிய) உபாயத்தில், கூடா (நீ)—பரவாதியா யிருக்கும் நீ, (6) நின் தனிமை — உன்னுடைய உதவியற்ற நிலைமையை

* ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ॥
...

துணையாக — ஸஹாயமாகக் கொண்டு, என்றன் பாதம் பூண்டால் — என திருவடிகளை உபாயமாக அடைந்தால், உன் பிழைகள் எ(ல்)லாம் பொறுப்பன் — உன பாபஙகளை முழுதும பொறுததுககொளவேன என்ற புண்ணியனார் — என்று (சரமசுலோகததில) அருளிசசெய்த கணணபிரானுடைய, புகழ் அனைத்தும் புகழுவோம்— கீாததியை முழுதும துதிபபோம.

கருத்து — பகவான, பகதியோகாதிகளில சகதியறறு பரபததியைச செயபவனுடைய பாபஙகளைப போககி முகதியைக கொடுபபான 47

[ சரமசுலோகததில உளள ‘ஏகம’ எனனும பதததிறகு ஆறு அாததஙகளை அருளிசசெயகிறா— ]

87 * சாதனமு நற்பயனு நானே யாவன்
சாதகனு மென்வயமா யென்னைப் பற்றுஞ்
சாதனமுஞ் சரணநெறி யன்று னக்குச்
சாதனங்க ளிந்நிலைக்கோ ரிடையி னில்லா
வேதனைசேர் வேறங்க மிதனில் வேண்டா
வேறெல்லா நிற்குநிலை நானே நிற்பன்
மூதனுமா நாதனுமா மென்னைப் பற்றிச்
சோகந்தீ ரெனவுரைத்தான் சூழ்கின் றனே. 48

உரை — (1) சாதனமும் — உபாயமாகவும, நல் பயனும் — சிறநத பலனாகவும, நானே ஆவன் — நானே இருபபேன, (2) சாதகனும் — உபாயததைச செயபவனும், என் வயமாய்—எனககு அடஙகியவனாயிருநது, என்னைப் பற்றும் — எனனைச சரணமடைவான, (3) உனக்கு—(சேதநனாகிய) உனககு, சரணநெறி — சரணாகதி, சாதனமும் அன்று — நேர உபாயமாகவும ஆகாது, (பலன கொடுககுமாறு செயவிககும வயாஜமதான் சரணாகதி), (4) சாதனங்கள்—(பக்தி முதலிய) உபாயஙகள, இந் நிலைக்கு— இநதச சரணாகதிககு, ஓர் இடையில் நில்லா — ஒரு ஸமபநதமுடைய நிலையில நிறகா,(அதாவது—பகதி யோகாதிகள் பரபததிககு ஸஹாயமாகமாடடா எனறபடி) (5)வேதனை சேர்—சிரமததுடன (செயயக) கூடிய, வேறு அங்கம் — வேறு (சில) அஙகஙகள, இதனில் — இநத பரபததிககு, வேண்டா — வேணடுவதிலலை, (6) வேறு

* 𑌸𑌾𑌧𑍍𑌯𑌸𑍍𑌯𑍈𑌵 𑌸𑌾𑌧𑌕𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌵𑌸𑌾𑌧𑍍𑌯𑌾𑌨𑍍𑌯𑌨𑌿𑌵𑌾𑌰𑌣𑌮𑍍 ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥

**எல்லாம்** — *மற்ற உபாயங்களை எல்லாம்*, **நிற்கும் நிலை** — *நிற்கும் ஸ்தானத்தில்*, **நானே நிற்பன்** — *நானே நின்று பலம் தருவேன்*, **தூதனும் ஆம்** — *(பக்தர்க்காகத்) தூது செல்லும்படி எளியனும்*, **நாதனும் ஆம்**—*(எல்லோருக்கும்)ஸ்வாமியுமான*, **என்னைப் பற்றி**—*என்னைச் சரணமடைந்து*, **சோகம் தீர்**—*(உன்) துக்கத்தைப் போக்கிக்கொள்*, **என உரைத்தான்** — *என்று (சரம சுலோகத்தில்) உபதேசித்த கண்ணன்*, **சூழ்கின்றான்** — *(தானே நம்மை விடாது) வளைத்துக்கொள்கின்றான்*

**கருத்து** — *எம்பெருமானையே உபாயமாகவும் பலனாகவும் கொண்டு சரணமடைபவனுக்கு ஸம்ஸார துக்கங்கள் அனைத்தும் ஒழிந்துபோம்* 48

88 தன்னினைவில் விலக்கின்றித் தன்னை நண்ணா
நினைவனைத்துந் தான்விளைத்தும் விலக்கு நாத
னெந்நினைவை யிப்பவத்தி லின்று மாற்றி
யிணையடிக்கீ ழடைக்கலமென் றெம்மை வைத்து
முன்னினைவால் யாமுயன்ற வினையால் வந்த
முனிவயர்ந்து முத்திதர முன்னே தோன்றி
நன்னினைவா னாமிசையுங் கால மின்றே
நாளையோ வென்றுநகை செய்கின் றனே 49

**உரை** — **தன் நினைவில் விலக்கு இன்றி** — *தான் ஸங்கல்பித்த விஷயத்தில் (ஒருவராலும்) தடை இல்லாமலிருந்தும்*, **தன்னை நண்ணார்** — *தன்னை நெருங்காத நாஸ்திகர்களுக்கு*, **நினைவு அனைத்தும்** — *ஆசையை எல்லாம்*, **தான் விளைந்தும் விலக்கும் நாதன்** — *தான் உண்டுபண்ணியும் (அந்தப் போகங்களை அநுபவிக்காமல்) தடைசெய்பவனான எம்பெருமான்*, **இப் பவத்தில்** — *இந்த ஸம்ஸாரத்தில்*, **எம் நினைவை** — *எங்களுக்குள்ள ஆசையை*, **இன்று மாற்றி** — *இன்று ஒழித்து*, **இணையடிக்கீழ்** — *இரண்டு திருவடிகளின் கீழ்*, **அடைக்கலம் என்று** — *ரக்ஷிக்கப்படவேண்டிய வஸ்துவாக*, **எம்மை வைத்து** — *எங்களை ஏற்றுக்கொண்டு*, **முன் நினைவால் யாம் முயன்ற** — *முன்பு அஹங்காராதிகளால் யாம் செய்த*, **வினையால் வந்த முனிவு அயர்ந்து** — *காமத்தால் ஏற்பட்ட கோபம் தீர்ந்து*, **முத்தி தர முன்னே தோன்றி**—*மோக்ஷத்தைக் கொடுப்பதற்காக முன்(பலவகையாய்) அவதரித்து (நிற்கும்போதும்)*, **நல் நினைவால் நாம் இசையும் காலம்** — *நல்ல ஜ்ஞானத்தால் நாம் (பரமபதம் செல்ல) உடன்படும் காலம்*, **இன்றே நாளையோ என்று**— *இன்றைக்கோ நாளைக்கோ என்று*, **நகை செய்கின்றன்** — *நம்மைப் பரிஹாஸம்செய்கின்றான்*.

"நான் மோக்ஷம்கொடுப்பதற்கு விரைந்தாலும் சேதநன் ஸம்ஸாரத்தை விட மனங்கொள்ளாது இன்று ஆகட்டும், நாளை ஆகட்டுமென்று காலம் தாழ்க்கின்றான், என்னே இவன் அறியாமை!" என்று பகவான் பரிதவிக்கின்றான் என்பது பொருள்.

**கருத்து** — ஸர்வேச்வரன் மோக்ஷம் கொடுக்க விரும்பும்போது நாம் அதைப் பெறப் பின்வாங்கலாகாது. 49

கட்டளைக்கலித்துறை

௫0 பாட்டுக் குரிய பழையவர் மூவரைப் பண்டொருகால்
மாட்டுக் கருடரு மாயன் மலிந்து வருத்துதலா
னாட்டுக் கிருள்செக நான்மறை யந்தி நடைவிளங்க
வீட்டுக் கிடைகழிக் கேவெளி காட்டுமம் மெய்விளக்கே 50

[ ஆசார்யக்ருத்யாதிகாரம் ]

**உரை:**— மாட்டுக்கு அருள் தரும் மாயன் – (தன்னுடைய) செல்வமான சேதநர்க்கு அருள்புரிகின்றவனும் அதிசயச்செய்கையுடையவனுமான எம்பெருமான், பாட்டுக்கு உரிய – (சிறந்த பாசுரங்களால் தன்னைப் )பாடுதற்குத் தக்கவர்களான, பழையவர் மூவரை–முதலாழ்வார்களின் மூவரையும், பண்டு ஒருகால் – முன்பு ஒருகாலத்தில் (த்வாபரயுகத்தில்), மலிந்து வருத்து நலால் – அதிகமாக நெருக்கியதால், வீட்டுக்கு இடைகழிக்கே–(திருக்கோவலூரிலுள்ள ஒரு) வீட்டின் இடைகழியிலேயே (அவரிடமிருந்து அவதரித்த), அம் மெய் விளக்கு – (மூன்று திருவந்தாதியாகிய) அந்த ஸத்யமான தீபம், நாட்டுக்கு இருள் செக – உலகத்திற் செல்லாம் அஜ்ஞானம் நீங்கவும், நான்மறை அந்தி நடை விளங்க – நான்கு வேதங்களின் அந்தத்தின் மார்க்கம் ப்ரகாசிக்கவும், வெளிகாட்டும் – (பக்தி—ப்ரபத்தியென்னும் உபாயங்களை) ப்ரகாசிப்பிக்கும்.

த்வாபரயுகத்தில் ஒருநாள் இரவில் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் முதலாழ்வார் மூவரும் திருக்கோவலூரில் மழைக்காக ஒரு வீட்டின் சிறிய இடைகழியில் ஒதுங்க, எம்பெருமானும் இவர்களின் திருமேனி ஸம்பந்தத்தையும், திருவந்தாதிகளின் திருவவதாரத்தையும் விரும்பி அவ்விடத்திலேயே வந்து நெருக்க, பிறகு இவர்களும் அவனைக் கண்டுகொண்டு மூன்று திருவந்தாதிகளையும் பாடியருளினார்.

**கருத்து**— திருவந்தாதிகள் மூன்றும் மோக்ஷமார்க்கத்தை விளக்கும். 50

*பதினறுசீராசிரியவிருத்தம்*

90 உறுசகட முடையவொரு காலுற் றுதைந்தன
உடன்மருத மொடியவொரு போதிற் றவழ்ந்தன
உறிதடவு மளவிலுர லோடுற் றுநின்றன
உறுநெறியோர் தருமன்விடு தூதுக் குகந்தன
மறநெறியர் முறியபிரு தானத் துவந்தன
மலர்மகள்கை வருடமலர் போதிற் சிவந்தன
மறுபிறவி யறுமுனிவர் மாலுக் கிசைந்தன
மனுமுறையில் வருவதோர்வி மானத் துறைந்தன
வறமுடைய விசயனமர் தேரிற் றிகழ்ந்தன
வடவுரக படமடிய வாடிக் கடிந்தன
வறுசமய மறிவரிய தானத் தமர்ந்தன
வணிகுருகை நகர்முனிவர் நாவுக் கமைந்தன
வெறியுடைய துளவமலர் வீறுக் கணிந்தன
விழுகரியோர் குமரனென மேவிச் சிறந்தன
விறலசுரர் படையடைய வீயத் துரந்தன
விடலரிய பெரியபெரு மாள்மென் பதங்களே 51

[ *பாசுரம் 51-முதல் 56-வரை நிகமநாதிகாரம்* ]

உரை —விடல் அரிய பெரிய பெருமாள் மென் பதங்கள் — விடவொண்ணாத ஸ்ரீரங்கநாதனுடைய மெல்லிய திருவடிகள்,

உறு சகடம் உடைய — வலிய சகடாஸுரன் பிளந்துபோம்படி, ஒருகால் உற்று உதைந்தன — முன்பு (க்ருஷ்ணாவதாரத்தில்) கூர்ந்து கவனித்து உதைத்தன

உடன் மருதம் ஒடிய — சேர்ந்திருந்த மருதமரங்கள் ஒடிந்துபோகும்படி, ஒருபோதில் தவழ்ந்தன — ஒரு காலத்தில் தவழ்ந்தன

உறி தடவும் அளவில் — (தயிர், வெண்ணெய் வைத்த) உறியைத் தொட்டபொழுது, உரலோடு உற்று நின்றன — உரலோடு பொருந்தி (கட்டப்பட்டு) நின்றன

உறு நெறி ஓர் தருமன் — சிறந்த நல்வழியில் நடக்கிற நிகரற்ற தர்மபுத்திரன், விடு தூதுக்கு உகந்தன — (துர்யோதனன்பால்) அனுப்பிய தூதாகச் செல்லுகைக்கு மகிழ்ந்து நடந்தன

மறநெறியர் முறிய — கோபத்தைக் கைக்கொண்டு அம் மார்க்கத்திலே செல்லுகிற துஷ்டர்கள் அழிந்துபோம்படி, பிருந்தானத்து வந்தன — ப்ருந்தாவனத்தில் வந்து ஸஞ்சரித்தன.

மலர் மகள் கை வருட— தாமரையிலவளிக்கும் பிராட்டி தன் கையி னால் தடவவும், மலர்போதில் சிவந்தன — (அது பொறுக்காமல்) மலர்ந்த புஷ்பத்தைக்காட்டிலும் சிவந்தன

மறு பிறவி அறும் முனிவர்— மறுபடியும்(இக்காமபூமியில்) பிறவியை நீக்கவிரும்பும் முனிவர்களின், மாலுக்கு இசைந்தன — பக்திக்குத் தக்க விஷயமாய் நின்றன

மனுமுறையில் வருவது — (ப்ரஹ்மாவினிடமிருந்து) மனுவம்சத்தில் வந்த, ஓர் விமானத்து உறைந்தன — ஒப்பற்ற ஸ்ரீரங்கவிமானத்தில் நித்ய வாஸம்செய்தன

அறம் உடைய விசயன் அமர் — தர்மமுடைய அர்ஜுனன் வீற்றிருந்த, தேரில் திகழ்ந்தன — தேரில் நின்று ப்ரகாசித்தன

அடல் உரக படம் மடிய — வலிமையுள்ள (காளியனென்னும்) ஸர்ப்பத்தினுடைய படம் நசுங்கும்படி, ஆடிக் கடிந்தன—நடனமாடி அழித்தன

அறு சமயம் அறிவு அரிய— ஆறுமதங்களாலும் அறியவொண்ணாத, தானத்து அமர்ந்தன — (பரமபதமென்னும்) ஸ்தானத்தில் அமர்ந்தன

அணி குருகை நகர் முனிவர் — (பூமண்டலத்திற்கே) அலங்காரமா யுள்ள திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வாருடைய, நாவுக்கு அமைந்தன — நாவினால் பாடுவதற்குத் தக்க விஷயமாகப் பொருந்திநின்றன

வெறியுடைய துளவமலர்— வாஸனையுடைய திருத்துழாயினிடந்து மிக்க, வீறுக்கு அணிந்தன — பெருமைக்குப் பொருந்திய அழகுடையனவாய் நின்றன

விழுகரி ஓர் குமரன் என — (உத்தரையின் கர்ப்பத்திலிருந்து) விழுந்த கரிக்கட்டையை ஒப்பற்ற அழகிய (பரீக்ஷித்து என்னும்) இளைஞ னென்று கூறும்படி, மேவிச் சிறந்தன — (அக்கரிக்கட்டையைப்) பொருந்தி உயர்ந்தன

விறல் அசுரர் படை — வீரமுள்ள அஸுரர்களின் ஸேனை, அடைய வீயத் துரந்தன — முழுதும் நசித்துப்போம்படி துரத்தின (ஸ்ரீரங்கநாதன் திருவடிகளே இத்தனை கார்யங்களையும் செய்து பெருமைபெற்றன)

அறுசமயங்கள்— 1 ஸாங்க்யமதம், 2 கணாதமதம், 3 பௌத்தமதம், 4 பதஞ்ஜலிமதம், 5 ஜைநமதம், 6 சைவமதம் என்பன

கருத்து — ஸ்ரீரங்கநாதன் திருவடிகளின் பெருமை அள விடற்கரிது.

*எண்சீராசிரியவிருத்தம்*

91 * மறையுரைக்கும் பொருளெல்லா மெய்யென் றோர்வார்
மன்னியகூர் மதியுடையார் வண்குணத்திற்
குறையுரைக்க நினைவில்லார் குருக்க டம்பாற்
கோதற்ற மனம்பெற்றார் கொள்வார் நன்மை
சிறைவளர்க்குஞ் சிலமாந்தர் சங்கே தத்தாற்
சிதையாத திண்மதியோர் தெரிந்த தோரார்
பொறைநிலத்தின் மிகும்புனிதர் காட்டு மெங்கள்
பொன்றாத நன்னெறியிற் புகுது வாரே. 52

உரை — மறை உரைக்கும் பொருள் எல்லாம் – *வேதத்தில் கூறப்படும் அர்த்தங்களை எல்லாம்,* மெய் என்று ஓர்வார் – *ஸத்யமென்று நிச்சயிக்கும் ஆஸ்திகர்களாயும்,* மன்னிய கூர் மதி உடையார் – *திடமான கூரிய புத்தியையுடையவர்களாயும்,* வண் குணத்தில் – *(பிறருடைய) சிறந்த குணத்தில்,* குறை உரைக்க நினைவு இல்லார் – *குற்றம் கூறுவதற்கு எண்ணம் இல்லாதவர்களாயும்,* குருக்கள்தம்பால் – *ஆசார்யர்களிடம்,* கோது அற்ற மனம் பெற்றார் – *குற்றமற்ற மனத்தைப் பெற்றவர்களாயும்,* நன்மை கொள்வார் – *நல்ல விஷயங்களையே கைக்கொள்பவராயும்,* சிறை வளர்க்கும் சில மாந்தர் சங்கேதத்தால் – *சிறைபோன்ற ஸம்ஸாரத்தை வருத்தி செய்பவர்களான சில (ஸாதாரண) மனிதர்களுடைய கட்டுப்பாட்டினால்,* சிதையாத திண் மதியோர் – *கெட்டுப்போகாத வலிய மனத்தையுடையவர்களாயும்,* தெரிந்தது ஓரார் – *(சாதாரணமாய உலகில்) தெரியும் அற்பபலன்களில் கருத்தைச் செலுத்தாதவர்களாயும் உள்ள அதிகாரிகள்,* நிலத்தில் பொறை மிகும் – *பூமியிற்காட்டிலும் பொறுமை மிகுந்த,* புனிதர் காட்டும் – *பரிசுத்தர்களான ஆசார்யர்களால் காட்டப்பட்ட,* எங்கள் பொன்றாத நல் நெறியில் – *எங்களுடைய அழியாத நல்ல மார்க்கத்தில்,* புகுதுவார் – *(ஈடுபட்டுச்) சேருவார்கள்*

கருத்து — *நற்குணங்கள் அமையப்பெற்றவர்களே நம் ஸம்ப்ரதாயத்தில் ஈடுபட்டுச் சேருவார்கள்* 52

* ஶ்ருதிஷூக்தார்த்த விஶ்வாஸிநஸ் ஸ்வஸ்த்ய நிஷ்டாஸ்
ஸத்குணேஷ்வநஸூயவோ குருஷு நிர்மலாஶயாஃ ।
ஸங்கேதைர் ந விஹதாஸ் ஸ்வாத்ம பூர்வாசார்ய ஸம்ப்ரதாயம்
ஸதாம் ஸ்வீகுர்வந்து நிர்மலம் மார்க்கம் நஃ ॥

கடடளைககலிததுறை

92 இதுவழி யின்னமு தென்றவ ரின்புலன் வேறிடுவா
ரிதுவழி யாமல வென்றறி வாரெங்க டேசிகரே
யிதுவழி யெய்துக வென்றுகப் பாலெம் பிழைபொறுப்பா
ரிதுவழி யாமறை யோரரு ளால்யா மிசைந்தனமே. 53

உரை — இன் புலன்— (உலகததோரால) இனியதாகக கொளளப படும அறபவிஷயஙகளை, வேறு இடுவார்— (நமககுத தகா எனறு) வேருகப பிரி(ததுு விலககிவை)ப்பவாகளும, இது வழி ஆம் — (உபாயாநுஷடாநத தால உணடான) இநத பகவததகருபையே மோக்ஷததிறகு முககியமான உபாயம, அ(ல்)ல என்று அறிவார் — (மறறவை முககிய உபாயம) அலல எனறு அறிபவாகளுமான, எங்கள் தேசிகரே — எஙகள ஆசாாயாகள தாம, இது வழி — இதிறகூறபபடட பரபததிமாாககம, எய்துக என்று — நிலைபெறறு நடநதிடுகவெனறு (நினைதது), உகப்பால் — (உலகுககு உப தேசிபபதில) மகிழசசியால, எம் பிழை பொறுப்பார் — எஙகளுடைய அப ராதஙகளைப பொறுபபவாகளாக ஆகி, இது வழி — இநத பரபநதததில கூறபபடட மாாககமே, இன் அமுது என்றவர்— இனிய அமுதம (போனறது) எனறு உபதேசிததவா ஆவா (ஆதலால) மறையோர் அருளால் — வைதிக ரான ஆசாாயாகளின கருபையால, இது வழியா — (அவாகள காட்டிய) இநத வழியையே நலல வழியாக, யாம் இசைந்தனம் — யாஙகள ஏறறுக் கொணடோம.

கருதது — இபபிரபநதததிறகூறபபடட வழியே சிறநத தெனறு ஆசாாயாகளாலும ஏறறுககொளளபபடடது 53

93 எட்டு மிரண்டு மறியாத வெம்மை யிவையறிவித்
தெட்டவொண் ணுத விடந்தரு மெங்களம் மாதவனுர்
முட்ட விணைத்திரண் மாள முயன்றிடு மஞ்சலென்றூர்
கட்டெழில் வாசகத் தாற்கலங் காநிலை பெற்றனமே. 54

உரை — எட்டும் இரண்டும் அறியாத எம்மை— எடடும+இரண்டும— பததுு என்று கூடடதெரியாதபடி அறிவறற எஙகளை, அலலது, எடடு அக்ஷரஙகளுளள திருமநதரம, இரணடாகிய தவயம, சரமசுலோகம ஆகிய (மூனறு)ரஹஸ்யஙகளையும அறியாத எஙகளுககு,இவை அறிவித்து—(ஆசாா யன மூலமாக) இநத ரஹஸயாாததஙகளை உபதேசிதது, எட்ட ஒண்ணுத இடம் தரும் — (உபாயததைச செயயாமல) எட்ட முடியாத இடமாகிய பரமபததததைத தருகின்ற, எங்கள் அம் மாதவனுர் — எஙகளுடைய அநத

(கருஷ்ணனாக அவதரித்த) ஸ்ரீமந்நாராயணனை, "வினைத்திரள் மூட்ட மாள— காமவாக்கம் முழுதும் அழிந்துபோகும்படி, முயன்றிடும் — (ப்ரபத்தியில்) முயலுவீராக. அஞ்சல் என்றார் — அஞ்சாதொழிக" என்று கூறியருளினார், கட்டு எழில் வாசகத்தால் — (அவருடைய) வலிய அழகுபெற்ற அந்தச் சரமசுலோகத்தால், கலங்காநிலை பெற்றனம் — கவலையற்றிருக்கும் நிலையை அடைந்தோம்

கருத்து:— சரமசுலோகத்தின் ஆதரத்தை அறிந்தால் கவலையற்றிருக்கலாம் 54

94 வானு ளமர்ந்தவ ருக்கும் வருந்த வருநிலைக
டானுள ளுயுகக் குந்தா மிங்கு நமக்குளதே
கூனுள நெஞ்சுக ளாற்குற்ற மெண்ணி யிகழ்ந்திடினுந்
தேனுள பாத மலர்த்திரு மாலுக்குத் தித்திக்குமே. 55

உரை — வானுள் அமர்ந்தவருக்கும் — ஸ்வாக்கத்திலுள்ள இந்த்ராதிதேவருக்கும் அல்லது பரமபதத்தில் இருப்பவரான நித்யஸூரிகளுக்கும் கூட, வருந்த வரும் — மிகக ப்ரயாஸத்தால் கிடைக்கக்கூடிய, நிலைகள் தான் உளனாய் — (இப்ப்ரபந்தத்திற்கூறிய) நிஷ்டைகள் தன்னிடம் இருக்கப்பெற்றவனாய், உகக்கும் தாம் — (இந்த நிஷ்டையுடையவரைக் கண்டு) மகிழும் பெருமை, இங்கு நமக்கு உளதே! — இக்காமபூமியில் நமக்கு உண்டாயிற்றே! (என்னே நம் பாக்கியம்!) கூன் உள நெஞ்சுகளால் — கோட்டமுள்ள (வக்ரமான) மனத்தால், குற்றம் எண்ணி இகழ்ந்திடினும் — (சிலர் இந்த க்ரந்தத்திலும் இதை எழுதிய நம்மிடத்திலும்) தோஷமிருப்பதாய நினைத்து வெறுத்தாலும், தேன் உள பாதமலர் — தேனை நிரம்பிய திருவடித்தாமரையையுடையனை, திருமாலுக்குத் தித்திக்கும் — எம்பெருமானுக்கு மிகப் போக்யமாயிருக்கும் (மகிழ்ச்சியைச்செய்யும்)

தளை வழுவுமாதலின் 'வருமிந்நிலைகள்' என்று பாடம் கொள்ளத் தகாது

கருத்து:- எம்பெருமானுக்கு ப்ரியமான இந்த க்ரந்தத்தை ஸேவிப்பவருக்கு இதிற் கூறிய சிறந்த நிஷ்டைகள் உண்டாம். 55

95 வெள்ளைப் பரிமுகர் தேசிக ராய்விர காலடியோ
முள்ளத் தெழுதிய தோலையி லிட்டனம் யாமிதற்கென்
கொள்ளத் துணியினுங் கோதென் றிகழினுங் கூர்மதியீ
ரெள்ளத் தனையுக வாதிக ழாதெம் மெழின்மதியே. 56

உரை — வெள்ளைப் பரிமுகர் – வெள்ளையான குதிரைபோன்ற முகமுடைய ஸ்ரீஹயக்ரீவன், தேசிகர் ஆய் – ஆசார்யராக அவதரித்து, விரகால் – உபதேசமென்னும் ஸாதநத்தால் (எழுதுகோலால்), அடியோம் உள்ளத்து எழுதியது – அடியோங்களுடைய மனத்தில் எழுதிய விஷயத்தை, யாம் ஓலையில் இட்டனம் – நாம் ஏட்டில் எழுதினோம் இதற்கு என்?– (ஆதலால்) இந்த க்ரந்தத்திற்குத் தோஷம் ஏது? கூர்மதியீர்! – கூர்மையான புத்தியுடையவர்களே! கொள்ளத் துணியினும் – (இந்த க்ரந்தத்தின் பெருமையைக்கண்டு நீங்கள்) ஏற்றுக்கொள்ளத் துணிந்தாலும், எம் எழில் மதி– நம்முடைய (உறுதிபூண்ட) அழகிய மனம், எள் அத்தனை உகவாது – எள்ளளவுகூட மகிழ்ச்சியை அடையாது, கோது என்று இகழினும்– குற்றமுள்ளது என்று(சிலர் அஸூயையால் நினைத்து) வெறுத்தாலும், (எள்ளத்தனை) இகழாது – (நம் மனம் அவர்களை எள்ளளவும்) வெறுக்கமாட்டாது

உலகில் ஓலையிலிட்டதை உள்ளத்து எழுதிக்கொள்வர் நாம், பரிமுகன் நம் உள்ளத்து எழுதியதை ஓலையில் இட்டனம் என்றதன் அழகு சிந்திக்கத்தக்கது

கருத்து — ஸ்ரீஹயக்ரீவன் ஆசார்யனமுகமாய உபதேசித்த விஷயங்களே இந்த க்ரந்தத்தில் அமைந்தவை யாம் 56

## அதிகாரசங்கிரகம்-உரை முற்றிற்று

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ||

ஸ்ரீ:

# அம்ருதாஸ்வாதினி-உரை

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ । வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ॥

சீரொன்று . . . வாழ்வு

---

கட்டளைக் கலித்துறை

96 மூலங் கிளையென வொன்றிரண் டான மொழியிரண்டு
மேலோன் றிலையென நின்றவவ் வித்தகன் றன்னுரையுங்
காலங் கழிவதன் முன்னங் கருத்துறக் கண்டிடவே
ஞாலம் புகழுநந் தேசிகர் தாநமை வைத்தனரே 1

[ பாசுரம் 1—முதல் 6—வரையில் ஸாரஸாரம், திருமந்த்ராதிகாரம் ]

உரை — ஞாலம் புகழும் — உலகத்தால் புகழப்படுகின்ற, நம் தேசிகர் — நம்முடைய ஆசார்யர்கள், மூலம் கிளை என — வேரும் கிளையும் என்று சொல்லும்படி, ஒன்று இரண்டு ஆன — ஒரு வாக்யமாயும் இரண்டு வாக்யமாயும் உள்ள, மொழி இரண்டும் — (திருமந்த்ரம், த்வயம் என்னும்) மந்த்ரங்கள் இரண்டையும், மேல் ஒன்று இலை என நின்ற — (இதற்கு) உயர்ந்தது ஒன்றும் இல்லை என்னும்படி நின்ற, அவ் வித்தகன்தன் உரையும் — அதிசயச்செயல்களையுடைய அந்தக் கண்ணனுடைய வாக்ய (மான சரமச்லோக)த்தையும், காலம் கழிவதன்முன்னம் — (நம்முடைய) வாழ்நாள் கழிவதற்குமுன்பு, கருத்து உறக் கண்டிடவே — உள்ளத்தில் பதிந்து அநுபவிக்கும்படி, ந(ம்)மை வைத்தனர் — நம்மை நிறுத்தினார்கள் (தாம்—அசை)

கருத்து — ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தங்களை அநுபவிக்கவே பரப்ந்நரை ஆசார்யர்கள் ஸம்ஸாரத்தில் வைக்கின்றனர்.

[ ப்ரணவத்தின் அர்த்தம் கூறப்படுகின்றது— ]

எண்சீராசிரியவிருத்தம்

97 காரணமுங் காவலனு மாகி யென்றுங்
கமலையுடன் பிரியாத நாத னான
நாரணனுக் கடியேனு னடிமை பூண்ட
நல்லடியார்க் கல்லான்மற் றொருவர்க் கல்லே
னாரணங்கள் கொண்டகமும் புறமுங் கண்டா
லறிவாகி யறிவதுமா யறுநான் கன்றிச்
சீரணிந்த சுடர்போலத் திகழ்ந்து நின்றேன்
சிலைவிசயன் றேரனைய சிறுவே தத்தே 2

உரை — சிலை விசயன் தேர் அனைய—(சிறந்த) வில்லையுடைய அர்ஜுனனுடைய தேரைப்போன்ற, சிறு வேதத்து — சிறிய வேதமாகிய ப்ரணவத்தில், காரணமும் — எல்லாவற்றுக்கும் மூலகாரணனும், காவலனும் ஆகி — ஸர்வரக்ஷகனுமாகி இருந்து, என்றும் கமலையுடன் பிரியாத நாதனான — எப்பொழுதும் பிராட்டியை விட்டுப் பிரியாத ஸ்வாமியான, நாரணனுக்கு நான் அடியேன் — எம்பெருமானுக்கு நான் தாஸன், அடிமை பூண்ட நல் அடியார்க்கு அல்லால் — (பகவானுக்கு) அடிமைபெற்ற சிறந்த பாகவதரையும் தவிர, மற்று ஒருவர்க்கு அல்லேன்—வேறு ஒருவருக்கும் தாஸன் அல்லன், ஆரணங்கள் கொண்டு — வேதங்களின் உதவியைக்கொண்டு, அகமும் புறமும் கண்டால் — (ஜீவாத்மாவாகிய என் ஸ்வரூபத்தை) உள்ளும் புறமும் ஆராய்ந்து பார்த்தால், அறிவாகி — ஜ்ஞானமே வடிவாய், அறிவதுமாய் — தாம்பூதஜ்ஞானத்தாலே மற்றப் பொருளை அறிபவனுமாய், அறுநான்கு அன்றி— இருபத்துநான்கு தத்துவங்களாகிய அசேதநத்தில் வேறுபட்டு, சீர் அணிந்த சுடர்போல — சிறப்புப் பொருந்திய தேஜஸ்போல, திகழ்ந்து நின்றேன் — ப்ரகாசித்து நிற்கின்றேன்

அர்ஜுனனுடைய தேரில், தலைவனை க்ருஷ்ணன் முன்பும அடியனை அர்ஜுனன் பின்பும வீற்றிருந்ததுபோல, ப்ரணவத்தில் தலைவனை பகவானைக் கூறும் அகாரம முன்பும, அடியனை ஜீவனைக் கூறும மகாரம பின்பும இருப்பதால் ப்ரணவத்திற்கு அர்ஜுனன்தேரை ஒப்பிடுவது வழக்கு.

கருத்து — ப்ரணவத்தின பொருளை அறிந்தால எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் அறியலாம. 2

[ நம் என்னும் சப்தத்தின் பொருள் வெளியிடப்படுகின்றது— ]

கட்டளைக் கலித்துறை

98 யானேனை தென்பதோன் றில்லையேன் செய்வ தவனையல்லா
லான தறிந்திடுந் தன்னடி யார்க்கெனை யாட்படுத்தித்
தானெனை நல்கி நடத்துகின் றன்றன் னருள்வழியே
நானுனை வீடுசெய் வேனென்ற நந்திரு நாரணனே 3

உரை — **நான் உ(ன்)னை வீடு செய்வேன் என்ற** — *நான் உனக்கு ஸம்ஸார பந்தத்தை நீக்கி முக்தி கொடுப்பேன் என்று உறுதிகூறிய*, **நம் திருநாரணன்** — *நம்முடைய ஸ்ரீமந்நாராயணன்*, **தான் எனை நல்கி** — *தானும் என்னிடம் அன்புவைத்து*, **ஆனது அறிந்திடும்** — *தகுந்த நல்ல விஷயத்தை அறிந்தவர்களான*, **தன் அடியார்க்கு** — *பாகவதர்களுக்கு*, **எனை ஆட்படுத்தி** — *என்னைத் தாஸனாகச் செய்து*, **தன் அருள் வழியே** — *தன்னுடைய கருணை செல்லும்வழியில்*, **நடத்துகின்றான்** — *(என்னை) நல்வழிப்படுத்துகின்றான் (உபாயத்தில் மூட்டி அநுஷ்டிக்கச்செய்கின்றான்)* **யான் எனது என்பது** — *நான் என்றும் என்னுடையது என்றும் கூறுவதற்குத் தகுந்த பொருள்*, **ஒன்று இல்லை** — *ஒன்றும் இல்லை*, **அவனை அல்லால்** — *அவ்வெம்பெருமானையன்றி*, **செய்வது என்** — *செய்யத்தக்கது என்ன இருக்கின்றது?*

*"யான் எனது இலை" என்றதால் அஹங்கார மமகாரங்கள் கழிகையும், 'என் செய்வது' என்றதால் தனக்கு ஸ்வாதந்த்ரியமில்லாமையும், இரண்டாவது அடியால் பாகவதர்க்கும் அடியனாயிருக்கையும், மூன்றாம் அடியால் சரணாகதியும் ஆகிய அர்த்தங்கள் நமச்சப்தத்திற்கு வெளியிடப்பட்டன.*

**கருத்து** — *நமச் சப்தத்தின் அர்த்தம் தெரிந்தால் அஹங்கார-மமகாரங்கள் நீங்கி உபாயத்தை அநுஷ்டிக்க வழியுண்டாம்.* 3

[ *நாராயணசப்தத்தின் அர்த்தம் கூறப்படுகின்றது*— ]

99 யாதா மிவையனைத் தும்படைத் தேந்து மிறைவனுமாய்க்
கோதாங் குணங்க ளுடன்குறு காத குணத்தனுமாய்
மாதா பிதாவென மன்னுற வாய்க்கதி யென்னநின்றான்
போதார் திருவுடன் பொன்னருள் பூத்தநம் புண்ணியனே 4

உரை — **போது ஆர் திருவுடன்** — *புஷ்பத்தில் வஸிக்கும் பிராட்டியுடன்*, **பொன் அருள் பூத்த** — *சிறந்த கருணை மிகுந்தவனும்*, **நம் புண்ணியன்** —

நம புண்யமே வடிவெடுததாற போனறவனுமான எமபெருமான, யாதாம் இவை அனைத்தும்— எவவகைப்பட்ட பொருளுமான இநதச சேதநா சேதநஙகள எலலாவறறையும, படைத்து ஏந்தும் இறைவனுமாய் — ஸருஷடிததுக காப்பாறறும ஸவாமியாக இருநது, கோது ஆம் குணங்களுடன்— குறறம எனபபடும இழிகுணஙகளுடன, கூறுகாத குணத்தனுமாய் — சேராத குணமுடையனுமாக இருநது, மாதா பிதா என — தாயும தநதையும என்னலாமபடி, மன் உறவாய் — திடமான பநதுவுமாக இருநது, கதி என்ன நின்றன் — (அவனே) கதி எனனுமபடி நிறகின்றன

கருதது — நாராயணசபதததால எமபெருமான எலலாவறறையும ஸருஷடிபபவனுகவும, காபபவனுகவும, ஸவாமியாகவும, இழிகுணஙகளினறிச சிறநத குணஙகள நிறைநதவனுகவும, ஸாவவிதபநதுவாகவும, கதியாகவும அறியபபடுகினறுன 4

[நாராயணசப்தததினமேலுள்ள சதுாததியின் பொருள கூறபபடுகினறது—]

எணசீராசிரியவிருததம

100 இருவிலங்கு கழித்திடரா முடலந் தன்னி
லிலங்குநடு நாடியினு லெம்மை வாங்கி
யொருவிலங்கு நெறியல்லா வழியான் மன்னு
முயர்வானி லேற்றியுயிர் நிலையுந் தந்து
பெருவிலங்கா மருடன்னுற் றன்ன டிக்கீழ்ப்
பிரியாத வமரருடன் பிணைத்துத் தன்னு
நுருவிலங்கு மிசைவிக்கு மும்பர் போக
முகந்துதருந் திருமாலை யுகந்தோ நாமே. 5

உரை — இரு விலங்கு கழித்து — (புணயபாபகாமஙகளாகிய) விலஙகு இரணடினையும ஒழிதது, இடர் ஆம் உடலம் தன்னில்—(முகதிக்குத) தடையாயுளள இநதச சரீரததில, இலங்கும் நடு நாடியினுல்—ப்ரகாசிககினற நடுநாடியாகிய ப்ரஹமநாடியினுல, எம்மை வாங்கி — ஜீவாதமாவாகிய எமமை (இசசரீரததினினறு பிரிதது) எடுதது, ஒரு விலங்கு நெறி அல்லா வழியால்—(தூமாதிமாாககததைப போல) ஸமஸாரததிலேயே மறுபடி பிணைககும வழியாக இலலாத அாசசிராதிமாாககததால, மன்னும் உயர் வானில் ஏற்றி — சாசுவதமான உயாநத பரமபதததில ஏறறுவிதது, உயிர் நிலையும் தந்து — ஜீவனுககுக(காமஸமபநதததால இதுவரை மறைநதிருநத) குணஙகளையும் கொடுதது, பெருவிலங்கு ஆம் அருள் தன்னுல் — (பகதாகளை விடாமல் கட்டிப் பிடிததுக காப்பதால) பெரிய விலஙகுபோனற கருணையினுல்,

தன் அடிக்கீழ்ப் பிரியாத அமரருடன் பிணைத்து — தன் திருவடிக்கீழ (கூண மும்) பிரியாதிருந்து கைங்கர்யம் செய்யும் நித்யஸூரிகளுடன் ஒன்று கூட்டி, அங்கு — பரமபதத்தில் தன் அர் உருவில் — தன்னுடைய பரிபூரண மான ஸ்வரூபத்தில், மிசைவிக்கும் உம்பர் போகம் — ஊட்டும் நித்யஸூரி களின் அநுபவத்தை, உகந்து தரும் திருமாலை — (நமமிடம்) மகிழ்ந்து கொடுக்கும் எம்பெருமானை(ப்பற்றி), நாம் உகந்தோம் — நாம (அறிந்து) மகிழ்ந்தோம்

கருத்து — நாராயணசப்தத்தின்மேலுள்ள நானகாம வேற்றுமையினால் ஸ்ரீவைகுண்டத்தில் போய, ஜீவனால் செய் யப்படும் கைங்கர்யம் வெளியிடப்படுகின்றது **5**

101 உறவையிசைந் திறையில்லா வொருவற் கென்று
மோங்கூடரா யோரெழுத்தி லோங்கி நின்றேந்
துறவறமுந் தூமதியுந் தூயரந் தீர்வுந்
தூயவர்கட் கானமையு மிரண்டி லுற்றே
மறமுயலு மனைத்துறவா யனைத்து மேந்து
மம்புயத்தாள் கணவனைநா மணுகப் பெற்றேம்
பிறவியறுத் தடிசூடி யடிமை யெல்லாம்
பிரியாத வமரருடன் பெற்றே நாமே **6**

உரை — ஓர் எழுத்தில் — ஒரு எழுத்தாகிய ப்ரணவத்தில், இறை இல்லா ஒருவற்கு — (தனக்கு ஒரு நாயகன் இல்லாத எம்பெருமானோடு, என்றும் உறவை இசைந்து — எப்போதும (நமக்கு உள்ள சேஷத்வம என் னும) ஸம்பந்தத்தை ஏற்றுக்கொண்டு, ஒண்கூடராய் — அழகிய ப்ரகாசஸ்வ ரூபமாய், ஓங்கி நின்றேம் — உயர்ந்து நின்றோம; இரண்டில் — இரண்டு அக்ஷரமாயுள்ள நம சப்தத்தில், துறவறமும் — (அஹங்கார மமகாரங்களை) விடுகையாகிய முக்கியதர்மமும, தூமதியும் — பரிசுத்தமான ஜ்ஞானமாகிய சரணாகதியும, தூயரம் தீர்வும் — (தன்னை ஸ்வதந்த்ரனாய நினைத்தலாகிய) துன்பம் நீங்குதலும, தூயவர்கட்கு ஆனமையும்—பரிசுத்தரான பாகவதர்களுக்கு அடியனானமையும, (ஆகிய அர்த்தங்களை) உற்றேம் — அடைந்தோம்; (மேல் நாராயணசப்தத்தில்) அறம் முயலும் — (சரணமடைந்தவனைக் காப்ப தாகிய) தர்மத்திலேயே யத்னமுள்ளவனும், அனைத்து உறவாய் அனைத்தும் ஏந்தும் — ஸகலவித பந்துவுமாய் ஸகலவஸ்துக்களையும் ரக்ஷிப்பவனுமான, அம்புயத்தாள் கணவனை — தாமரையில வஸிக்கும பிராட்டியின கணவ னை எம்பெருமானை, நாம் அணுகப் பெற்றேம் — நாம நெருங்கி அனுப விக்கும பாக்யத்தைப் பெற்றோம, (மேல நான்காமவேற்றுமையில்) பிறவி அறுத்து — மறுபிறவி ஒழியப்பெற்று, அடி சூடி — திருவடிகளை (நம்

முடியில்) சூடி, அடிமை எல்லாம் – கைங்கர்யங்களை முழுவதையும், பிரியாத அமரருடன் – (பகவானை க்ஷணமும்) பிரியாத நித்யஸூரிகளுடன் (சேர்ந்து), நாம் பெற்றோம் – நாம் செய்யப்பெற்றோம்.

கருத்து – திருமந்திரத்தின் அர்த்தத்தை அறிந்தால் ஜீவாத்ம பரமாத்மஸ்வரூபம் தெளிந்து உபாயத்தை அநுஷ்டித்து முக்தியை அடையலாம். 6

102 கருமமென ஞானமென வதனாற் கண்ட
உயிர்கவருங் காதலெனக் கானி லோங்கு
மருமறையாற் றருநிலையி லிந்நா ளெல்லா
மடியேனை யலையாத வண்ண மெண்ணித்
தருமமுடை யாருரைக்க யானறிந்து
தனக்கென்று வடிமைக்காம் வாழ்ச்சி வேண்டித்
திருமகளோ டொருகாலும் பிரியா நாதன்
றிண்கழலே சேதுவெனச் சேர்கின் றேனே 7

[ பாசுரம் 7, 8, 9– ஸாரஸாரம், த்வயாதிகாரம் ]

உரை — கருமம் என ஞானம் என – கர்மயோகமும் ஜ்ஞானயோகமும், அதனால் கண்ட – அவை இரண்டாலும் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட, உயிர் – ஜீவாத்மாவை, கவரும் – வசப்படுத்தித் தன்னிடத்தில் ஈடுபடச் செய்கின்ற, காதல் என – பக்தியோகமென்னும் உபாயமுமாகிய, கானில் ஓங்கும் – (அநுஷ்டிக்க அரியவாயிருப்பதால்) காடுபோன்ற இவற்றில் உயர்ந்து நிற்பதாயும், அருமறையால் தரும் நிலையில் – அருமையான வேதத்தால் உபதேசிக்கப்படுவதுமான நிஷ்டையில், இந்நாள் எல்லாம் – இந்த நாள் முழுதும், அடியேனை அலையாத வண்ணம் எண்ணி – தாஸனாகிய யான் அநுஷ்டிக்கமுடியன்று துன்பமுறாதபடி திருவுள்ளங்கொண்டு, தருமமுடையார் உரைக்க – தர்மத்தை அறிந்த ஆசார்யர்கள் (அடியேனுக்குச் சரணாகதியை) உபதேசிக்க, யான் அறிந்து, அடியேன் (அதை) அறிந்துகொண்டு, தனக்கு என்று அடிமைக்கு ஆம் – எனக்கு என்றது (மமகாரம் இல்லாமல்) செய்யும் கைங்கர்யத்திற்குத் தக்க, வாழ்ச்சி வேண்டி – வாழ்க்கையை விரும்பி, திருமகளோடு ஒருகாலும் பிரியா நாதன் – பிராட்டியை விட்டு எப்பொழுதும் பிரியாத எம்பெருமானுடைய, திண் கழலே சேது என – வலிய திருவடிகளே (ஸம்ஸாரத்தைத் தடுக்கும்) அணை என்று உறுதிகொண்டு, சேர்கின்றேன் – (அவற்றை உபாயமாக) அடைகின்றேன்.

கர்மயோகத்தாலும் ஜ்ஞானயோகத்தாலும் ஜீவாத்மா ஸாக்ஷாத்கரிக்கப்படுவதால் 'அதனால் கண்ட' என்றார். இந்த மூன்று யோகங்களும்

ஶரணாகதி- ஶரணாகதி, ஶரணோகதி- ஶரணவபதி, ஶ்ரீயப்தே-ஶ்ரயதே என்ற வ்யுத்பத்தியைக் கொண்டு வந்தவை அவ்வார்த்தைகளை இப்பாசுரத்தில் முற்பகுதியால் முறையே வெளியிட்டருளினார்

**கருத்து** — எம்பெருமான் சேதநனை உபாயத்தில் ஏற்படுத்தும் தன் பெருமையை நிலைநிறுத்திக்கொள்கின்றான். 8

104 என்னதியான் செய்கின்றே னென்று தாருக்
கின்னடிமை தந்தளிப்பா னிமையோர் வாழும்
பொன்னுலகிற் றிருவுடனே யமர்ந்த நாதன்
புனலாரும் பொழிலரங்கந் திகழ மன்னித்
தன்னகல மகலாத தகவா லோங்குந்
தகவுடனே தன்கருமந் தானே யெண்ணி
யன்னையென வடைக்கலங்கொண் டஞ்ச றந்தென்
னழலாற நிழலார வளிக்கின் றனே 9

உரை — என்னது, யான் செய்கின்றேன் என்றதாருக்கு — "இப் பொருள் என்னுடையது" "இதை யான் செய்கின்றேன்" என்னும் மமகார—அஹங்காரங்களில்லாதவர்களுக்கு, இன் அடிமை தந்து அளிப்பான் — இனிய கைங்கர்யத்தைக் கொடுத்துக் காப்பவனும், இமையோர் வாழும் பொன் உலகில் — நித்யஸூரிகள் வஸிக்கும் (பரமபதமாகிய) சிறந்த லோகத்தில, திருவுடனே அமர்ந்த நாதன் — பிராட்டியுடன் எழுந்தருளியுள்ளவனுமான எம்பெருமான், புனல் ஆரும் பொழில் அரங்கம் திகழ மன்னி — நீர்வளம் நிறைந்த சோலை சூழ்ந்த திருவரங்கஸ்தலம் விளங்கும்படி நிலைபெற்றிருந்து, தன் அகலம் அகலாத — தன்னுடைய திருமார்பை விட்டுப் பிரியாத, தகவால் ஓங்கும் — கருணைவடிவையான பிராட்டியின் ஸம்பந்தத்தால் வருத்தியடைகின்ற, தகவுடனே— கருணையுடன், தன் கருமம் தானே எண்ணி — (என்னைக் காப்பதாகிய) தன் கடமையைத் தான் நினைத்து, அன்னை என அடைக்கலம் கொண்டு — பெற்ற தாய் என்னும்படி (என்னைக்) காக்கவேண்டிய வஸ்துவாகக்கொண்டு, அஞ்சல் தந்து — அபய ப்ரதானம் செய்து, என் அழல் ஆற — என் (ஸம்ஸார) தாபமெல்லாம் தீரும்படி, நிழல் ஆர — தன் திருவடிநிழலை நிறையத் தந்து, அளிக்கின்றான் — ரக்ஷிக்கின்றான்.

**கருத்து** — எம்பெருமான் அர்ச்சாரூபமாகவும் எழுந்தருளி நமக்கு அருள்புரிகின்றான் 9

105 ஒண்டொடியா டிருமகளுந் தானு மாகி
யொருநினைவா லீன்றவுயி ரெல்லா முய்ய
வண்டுவரை நகர்வாழ வசுதே வற்காய்
மன்னவற்குத் தேர்ப்பாக னாகி நின்ற
தண்டுளவ மலர்மார்பன் றானே சொன்ன
தனித்தருமந் தானெமக்காய்த் தன்னை யென்றுங்
கண்டுகளித் தடிசூட விலக்காய் நின்ற
கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின் றானே 10

[பாசுரம் 10-முதல் 14-வரை ஸாரஸாரம், சரமச்லோகாதிகாரம்]

*இந்தப் பாசுரத்திற்கு உரையும் கருத்தும் அதிகாரசங்கிரகம் 46-வது பாசுரத்திற் காண்க*

*கட்டளைக்கலித்துறை*

106 தூய்ய மனத்தர் துறையணு காத துணையிலியே
னைய மறுத்துன தாணை கடத்த லகற்றினை நீ
கையமர் சக்கரக் காவல காக்குந் திருவருளால்
வைய மளந்த வடிக்கீ ழடைக்கலம் வைத்தருளே 11

உரை — கை அமர் சக்கரக் காவல! — *திருக்கையில் அமர்ந்துள்ள சக்கரத்தால் (அடியார்களைக்) காத்தலில் வல்லவனே!* தூய்ய மனத்தர் துறை அணுகாத — *பரிசுத்தமான மனத்தையுடைய உயர்ந்த அதிகாரிகளால் அனுஷ்டிக்கப்படுகிற (பக்தியோகம் முதலிய) உபாயத்தில் நெருங்குவதற்குக்கூட முடியாதவனும்,* துணையிலியேன் — *வேறு கதியற்றவனுமான எனக்கு,* ஐயம் அறுத்து — *(பலன் பெறுவதில் உள்ள) ஸந்தேஹங்களைப் போக்கி,* உனது ஆணை கடத்தல் — *உன்னுடைய கட்டளையை மீறி நடப்பதாகிய அபராதத்தை,* நீ அகற்றினை — *நீ போக்கிவிட்டாய் (இனி நீ செய்யவேண்டியது யாதெனில்)* காக்கும் திரு அருளால் — *(உலகமுழுதும்) காக்கவல்ல உன் சிறந்த கிருபையால்* வையம் அளந்த அடிக்கீழ் — *(முன் த்ரிவிக்ரமனாகி) உலகத்தை அளந்த திருவடிகளின் கீழே,* அடைக்கலம் வைத்தருள் — *(என்னைக்) காக்கவேண்டிய பொருளாக வைத்து அருள வேண்டும்*

கருத்து:— *பக்தியோகாதிகளில் சக்தியற்றவனை எம்பெருமான் ப்ரபத்தியில் மூட்டிப் பலன் தருவான்.* **11**

எணசீராசிரியவிருததம

107 அறியாத விடைச்சியரு மறியும் வ ° ண
மம்புயத்தா ளுடனந்நா ளவத ரித்த
குறையாது மில்லாத கோவிந் தாநின்
துரைகழற்கீ ழடைக்கலமாங் குறிப்புத் தந்தாய்
வெறியாரு மலர்மகளு நீயும் விண்ணில்
விண்ணவர்க ளடிசூட விருக்கு மேன்மை
குறையாத வினையகற்றி யடிமை கொள்ளக்
குறுகவொரு நன்னாளீ குறித்தி டாயே. 12

உரை — அறியாத இடைச்சியரும் — ஜ்ஞானம் இலலாத இடைப் பெண்களும, அறியும் வண்ணம் — (தனனை) அறிநது அநுபவிககுமபடி, அம்புயத்தாளுடன்அந்நாள்அவதரித்த—தாமரையில வஸிப்பவளான பிராட்டியுடன முன்பு (இவ்வுலகில) அவதரிககவனும, குறை யாதும் இல்லாத கோவிந்தா! — குறைவு ஒனறும இலலாமல பரிபூரணனுமான எமபெருமானே! நின் துரை கழல் கீழ் — உன்னுடைய (சிலமபு) ஒலிககினற திருவடிகளின் கீழ, அடைக்கலம் ஆம் குறிப்புத் தந்தாய் — காககப்படவேணடிய வஸ்துவாக ஆகும்படியான உளளக கருததை (எனககு)க கொடுத்தாய், வெறி ஆரும் மலர் மகளும் நீயும் — வாஸனை நிறைநத தாமரையில உள்ள பிராட்டியும் நீயுமாக, விண்ணவர்கள் அடி சூட — நிதயஸூரிகளும முகதாகளும் உன திருவடிகளைத தம முடியிற சூடிக கைஙகாயம செயய, விண்ணில் இருக்கும் மேன்மை — ஸ்ரீவைகுணடததில எழுநதருளியுள்ள நிலையில நினறு, குறையாத வினை அகற்றி — எஙகளிடம குறையாது நிறைநதுளள கர்மஙகளை ஒழிதது, அடிமை கொள்ள — (எஙகள்) கைஙகாயதகையும நீ ஏறபதறகு, குறுக ஒரு நல் நாள் — விரைவில கிட்டுமபடி ஒரு நல்ல காலததை, நீ குறித்திடாய் — நீ குறிபபிட்டருளவேணடும

கருத்து — பரபநநன பகவதநுபவததைப பெறுவதற்குத துடிதுடிபபான 12

108 தத்துவமுஞ் சாதனமும் பயனுங் காட்டுந்
தாரமுத லிருநான்குந் தன்க ருத்தான்
முத்திவழி நாமயனும் வகையே காண
முதந்தனிசைத் தருள்செய்த வைந்நா லைந்தும்
பத்திதனிற் படிவில்லார் பார்த்த மத்தப்
பார்த்தன்றேர் முன்னேதாந் தாழ நின்ற
வுத்தமனு ருத்தமநல் லுரைநா லெட்டு
முணர்ந்தவர்தா முகந்தெம்மை யுணர்வித் தாரே 13

உரை — தத்துவமும் சாதனமும் பயனும் காட்டும் — *தத்துவத்தையும் உபாயத்தையும் பலனையும் வெளியிடுகின்ற*, தாரம் முதல் இரு நான்கும் — *ப்ரணவத்தை முதலாகக்கொண்ட எட்டு அக்ஷரங்கள் அமையப்பெற்ற திருமந்த்ரத்தையும்*, முத்திவழி — *மோக்ஷத்தின் உபாயத்தில்*, நாம் முயலும் வகையே காண — *நாம் அநுஷ்டிக்கும் ப்ரகாரத்தைக் காண்பதற்காக*, முகுந்தன் தன் கருத்தால் — *எம்பெருமான் தன் திருவுள்ளத்தால்*, இசைத்து அருள் செய்த — *(வேதத்தில் பிரிந்திருந்த இரு பாகங்களை) ஒன்று கூட்டி (உலகுக்கு) அருள் புரிந்த*, ஐந்நாலெழுத்தும் — *இருபத்தைந்து அக்ஷரங்கள் அமைந்த த்வயத்தையும்* பந்தி தனில் படிவு இல்லார் — *பக்தி யோகத்தில் ஈடுபடமுடியாதவர்கள்*, பரம் சுமத்த — *(தம்மைக்) காக்கும் பொறுப்பை (அவன்மீது) சுமத்த*, பார்த்தன் தேர் முன்னே — *அர்ஜுநனுடைய தேரின் முன்னே*, தாழ நின்ற — *(பாகனாகத்) தாழ்ந்து நின்றவனை*, உத்தமனார் — *ஸர்வேச்வரனுடைய*, உத்தம நல் உரை நாலெட்டும் — *உயர்ந்த நல்லுபதேசமாகிய முப்பத்திரண்டு அக்ஷரங்கள் பொருந்திய சரம ச்லோகத்தையும்*, உணர்ந்தவர் — *(ஆதரத்துடன்) அறிந்த ஆசார்யர்கள்*, எம்மை உகந்து — *நம்மீது மகிழ்ந்து*, உணர்வித்தார் — *உபதேசித்தனர்.*

*தாம—அசை*

கருத்து — *ரஹஸ்யங்கள் மூன்றையும் ஆதரத்துடன் ஆசார்யர்கள் சிஷ்யர்களிடம் மகிழ்ந்து உபதேசிப்பர்.* 13

*கட்டளைக்கலித்துறை*

109 பரக்கும் புகழ்வரும் பைம்பொருள் வாய்த்திடும் பத்தர்களா
யிரக்கின் றவர்க்கிவை யீந்தா லறமுள தென்றியம்பார்
கரக்குங் கருத்துடைத் தேசிகர் கன்றென நம்மையெண்ணிச்
சுரக்குஞ் சுரவிகள் போற்சொரி கின்றனர் சொல்லமுதே. 14

உரை — கரக்கும் கருத்துடைத் தேசிகர் — *(ரஹஸ்யார்த்தங்களை) ரஹஸ்யமாய் வைத்துக்கொள்ளும் திருவுள்ளங்கொண்ட நம் ஆசார்யர்கள்*, பத்தர்களாய் இரக்கின்றவர்க்கு — *பக்தியுள்ளவர்களாய் வந்து ப்ரார்த்திக்கும் அதிகாரிகளுக்கு*, இவை ஈந்தால் — *இந்த ரஹஸ்யார்த்தங்களை உபதேசித்தால்*, பரக்கும் புகழ் வரும் — *(நாட்டில்) பரவுகின்ற கீர்த்தி உண்டாகும்*, பைம்பொருள் வாய்த்திடும் — *மிகுந்த செல்வம் கிடைக்கும்*, அறம் உளது — *புண்யமும் உண்டாகும்*, என்று இயம்பார் — *என்று (நினைத்து) உபதேசிக்கமாட்டார்கள்*, நம்மைக் கன்று என எண்ணி — *நம்மைக் கன்று போல நினைத்து*, சுரக்கும் சுரவிகள்போல் — *(தம் கன்றுக்குப் பாலைப்) பெருக்கும் காமதேனுக்களைப்போல*, சொல் அமுது — *உபதேசமாகிய அம்ருதத்தை*, சொரிகின்றனர் — *மிகத் தருகின்றனர்.*

கருத்து — ஸதாசார்யர்கள் சிஷ்யர்களுக்கு உபதேசிப்பது கிருபையினாலேயன்றி, அற்பபலன்களைக் கருதியல்ல 14

110 சோகந் தவிர்க்குஞ் சுருதிப் பொருளொன்று சொல்லுகின்றோ
நாகந் தனக்கு மிராக்கதற் கு நமக்குஞ் சரணா
மாகண் டலன்மக னாகிய வாவலிப் பேறியவோர்
காகம் பிழைத்திடக் கண்ணழி வேசெய்த காகுத்தனே 15

[ பாசுரம் 15-முதல் 19 வரை அபயப்ரதாநஸாரம் ]

உரை — சோகம் தவிர்க்கும்—ஸகலதுக்கங்களையும் ஒழிக்கக்கூடிய, சுருதிப் பொருள் ஒன்று — வேதாந்தின் ஸாரார்த்தம் ஒன்றை, சொல்லுகின்றோம் — வெளியிடுகின்றோம் (அதாவது—) ஆகண்டலன் மகன் ஆகிய — இந்திரனுடைய புத்திரனாகிய, ஆவலிப்பு ஏறிய — கர்வம் கொண்ட, ஓர் காகம் பிழைத்திட — ஒரு காகாஸுரன் பிழைக்கும்படி, கண் அழிவே செய்த காகுத்தனே — (உயிரைப் போக்காது) ஒரு கண்ணை மாத்திரம் அழித்த இராமபிரான் ஒருவனே, நாகம் தனக்கும் — (முதலைவாய்ப்பட்ட) கஜேந்த்ரனுக்கும், இராக்கதற்கும் — விபீஷணனென்னும் ராக்ஷஸனுக்கும், நமக்கும் — (மூக்தியைவிரும்பும்) நமக்கும், சரண் ஆம் — உபாயமாக ஆவான்

கருத்து — சேதநர்கள் அபராதம் செய்திட்டாலும் எம்பெருமானைச் சரணமடைந்தால் அவன் ரக்ஷித்துவிடுவா னென்பதே வேதஸாரமாகும் 15

எண்சீராசிரியவிருத்தம்

111 * ஒருக்காலே சரணாக வடைகின் றந்த
நுனக்கடிமை யாகின்றே னென்கின் றந்த
மருக்காதே யனைவர்க்கு மனைவ ராலு
மஞ்சேலென் றருள்கொடுப்ப னிதுதா னேது
மிருக்காலு மெழின்முனிவர் நினைவி னாலு
மிவையறிவார் செயலுடனென் னிசைவி னாலு
நெருக்காத நீள்விரத மெனக்கோன் றென்று
நெறியுரைத்தார் நிலையுணர்ந்து நிலைபெற் றேமே. 16

* ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே ।
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ॥
ச்ருதிபி: ஸ்ம்ருதிபி: ஸதாசாரை: ஸம்ஸ்ப்ருஷ்டம் ச ப்ரியஸாதநை: ।
ஸத்ஸம்ப்ரதாயஜை: கார்யை: யதோக்தம் தச்ச நிச்சிதம் ஸ்வரூபதோ ॥

உரை — ஒருக்காலே சரணமாக அடைகின்றற்கும் — ஒருமுறையே (எனனைச)சரணமாக அடைநதவனுககும, உனக்கு அடிமை ஆகின்றேன் என்கின்றற்கும்—உனககுத தாஸனாக இருககினறேன என்று அநுஸநதிததவனுக்கும, அருக்காதே — சிறிதும குறைவினறி அனைவர்க்கும் அனைவராலும்—ஸகலபராணிகளுககும ஸகலபராணிகளாலும, அஞ்சேல் என்று அருள் கொடுப்பன் — பயமடையாமலிருககுமபடி அபயப்ரதாநம செயவேன், இதுதான் — இவவாறு செயவதுதான, ஓதும் இருக்காலும் — அதயயநம செயயபபடும வேதததாலும, எழில் முனிவா நினைவினாலும் — பெருமை பொருநதிய முனிவாகளால செயயபபடட ஸமருதியினாலும, இவை அறிவார் செயலுடன் — வேதததையும ஸமருதியையும அறிநத பெரியோாகளின அநுஷடாநததாலும, என் இசைவினாலும்—என உடனபாடடாலும, எனக்கு நேருக்காத — எனககு நீககமுடியாத, ஒன்று நீள் விரதம் — ஒரு பெரிய வரதம (ஆகும), என்னும் மொழி உரைத்தார் — எனறு சரணாகதிமாாககததை உபதேசித்த ஸ்ரீராமபிரானுடைய, நிலை உணர்ந்து — உறுதியை நினைநது, நிலை பெற்றேம் — (நாம) உஜ்ஜீவிததோம

**கருத்து** — ஸ்ரீராமபிரான சரணாகதனுககு அபயபரதாநம செயவதாயச செயத பரதிஞ்ஞையை நினைததால உஜ்ஜீவிகக வழியுணடாம 16

கட்டளைககலிததுறை

112 பொன்னை யிகழ்ந்து விருகங்கள் புல்லிய புல்லுகந்தான்
மன்ன ரெடுப்பதப் பொன்னல தோமன் னுலகனைத்துந்
தன்னை யடைந்திடத் தானருள் செய்யுந் தனிச்சிலையோன்
பொன்னடி நாமடைந் தோம்புற மாரென்கொல் செய்திடினே

உரை — விருகங்கள் — மிருகஙகள, பொன்னை இகழ்ந்து — பொன்னை (அதன பெருமையறியாது) வெறுததுவிடடு, புல்லிய புல் உகந்தால் — அறபமான புலலையே பரியமாககொணடாலும, மன்னர் எடுப்பது— அரசாகள (விருமபி) எடுததுககொளவது, அப் பொன் அலதே?— அப் பொனனைத தவிர வேறு உணடோ? (அதுபோல்) மன் உலகு அனைத்தும் — நிலைபெறற உலகம முழுதும, தன்னை அடைந்திட — தனனைச் சரணமாக அடைய, தான் அருள் செய்யும் — தான கருணை செயபவனும, தனிச் சிலையோன்— நிகரறற விலலையுடையவனுமான ஸ்ரீராமபிரானுடைய, பொன் அடி நாம் அடைந்தோம் — அழகிய திருவடிகளை நாம சரணமாகப்பறறினோம, ஆர் புறம் செய்திடின் என்கொல்?—(இதறகு மாறாக) யாா வேறு எநதக காாயததைச செயதாலும (நமககு) எனன (நஷடம்)?

கருத்து — எமபெருமானதிருவடிகளைப பறறுமவனே விவேகி மறறவன எபபடிச செயதால என்ன ! 17

113 வேதத் திரளின் விதியுணர்ந் தோர்கள் விரித்துரைத்த
காதற் கதியையு ஞானத்தை யுங்கரு மங்களையுஞ்
சாதிக்க வல்ல சரணு கதிதனி நின்றநிலை
யோதத் தொடங்கு மெழுத்தின் றிறத்தி லுணர்மின்களே 18

உரை — வேதத்திரளின் – வேதஙகளுடைய கூடடததின (வேத வேதாநதஙகளின), விதி உணர்ந்தோர்கள் – கடடளையை அறிநத பூாவா சாாயாகள், விரித்து உரைத்த– தெளிவாக வெளியிடட, காதல் கதியையும் – பகதியாகிய உபாயததையும, ஞானத்தையும்– ஜஞாநயோக ததையும, கருமங்களையும் – கர்மயோகததையும, சாதிக்கவல்ல – முடிததுக கொடுககச சக்தியுளள, சரணுகதி – பரபததியானது, தனி நின்ற நிலை – (தானே சகலபலததையும கொடுப்பதாய) ஒபபறறு நினற பெருமையை, ஓதத் தொடங்கும் – (வேததததை அதயயநம் செயயுமபோது) முதலில அநுஸநதிககபபடுகினற, எழுத்தின் திறத்தில் – (முதல)எழுததாகிய பரணவததினுடைய ஸவபாவததால, உணர்மின்கள் – அறிவீாகளாக.

இஙகுக கூறிய யோகஙகளின ஸவரூபவிளககததை 55-வது பாசுரவுரையில காணக மறறயோகஙகள அநுஷடிககுமபோது ஆங்காஙகு முடியாத அம்சஙகளில் பரபததியை அநுஷடிதது அவறறை நிறைவேறறவேணடியிருததலால மறற யோகஙகளையும ஸாதிததுததரவலலது ப்ரபததி எனருா.

கருதது — பரணவததின அாததததை நனகு அறிநதால பரபததியின ஸவரூபததை நனகு அறியலாம. 18

எணசீா ஆசிரியவிருததம

114 மூவுலகுந் தன்பிழையைத் தானே சாற்ற
முனிவர்களுந் தேவர்களு முனிந்த வந்நாட்
டாவரிதா யெங்கும்போய்த் தளர்ந்து வீழ்ந்த
தனிக்காகந் தானிரந்த வுயிர்வ ழங்கிக்
காவலினி யெமக்கெங்குங் கடனென் றெண்ணிக்
காணநிலை யிலச்சினையன் றிட்ட வள்ள
லேவல்பாரி ஸிரக்கமிதற் காறென் றேது
மெழிலுடையா ரிணையடிக்கீ ழிருப்போ நாமே. 19

உரை — மூ உலகும் – மூனறு உலகஙகளிலும (அலைநது), தன் பிழையை – (பிராட்டியிடம்) தான செயத அபராததததை, தானே சாற்ற – தானே வெளியிடடுப பேசித தன்னைக காக்குமபடி வேண)ட, முனிவர்

களும் தேவர்களும் — ருஷிகளும் தேவதைகளும், முனிந்த அந்நாள் —(அவன் மீதே) கோபித்து விரட்டிய அக்காலத்தில், தாவு அரிதாய் — பற்றுக்கோடு (அவலம்பம்) கிடைக்காமல், எங்கும் போய் — நாடெங்கும் சுற்றி, தளர்ந்து வீழ்ந்த — ஓய்ந்தொடுங்கி (இராமனுடைய திருவடியிலேயே வந்து) விழுந்த, தனிக் காகம் இரந்த — உதவியற்ற காகாஸுரன் யாசித்த, உயிர் வழங்கி — உயிர்ப்பிச்சையளித்து, இனி எங்கும் காவல் எமக்குக் கடன் — இனிமேல் எவ்விடத்திலும் (யாரையும்) ரக்ஷித்தலே எம்முடைய கடமை, என்று எண்ணி — என்று திருவுள்ளங்கொண்டு, காண நிலை இலச்சினை — ஒற்றைக் கண் குருடாகும் அடையாளத்தை, அன்று இட்ட வள்ளல் — அப்பொழுது (காகாஸுரனுக்குச்) செய்த பெருங்கொடையாளனாகிய இராமபிரானுடைய, ஏவல் பயன் — கைங்கர்யமே (நமக்குச் சிறந்த) புருஷார்த்தமாகும், இரந்து ஆறு — இந்தப் பலனைப் பெறுவதற்கு உபாயம், இரக்கம் என்று ஓதும் — (நாம் செய்யும் ப்ரபத்தியால் அவனுக்கு நம்மிடம் உண்டாகும்) தயைதான் என்று உபதேசித்த, எழில் உடையார் — தேஜஸ் பொருந்தியவர்களான ஆசார்யர்களின், இணை அடிக் கீழ் — இரண்டு திருவடிகளின் கீழும், நாம் இருப்போம் — நாம் நிலைபெறுவோம்

இங்குக் காகாஸுரன் வரலாற்றை வெளியிட்டமையால் நாம் அபராதம் செய்திருப்பினும் வேறு கதி இல்லையென்று அறிந்து எம்பெருமானைச் சரணமடைந்தால் நம்மைக் காப்பனென்றதாயிற்று தான—அவை

கருத்து — எம்பெருமானுடைய கைங்கர்யமே சேதனனுக்குப் புருஷார்த்தம் ப்ரபத்தியால் வசப்பட்ட அவனுடைய அருளே அதற்கு உபாயம் 19

கட்டளைக்கலித்துறை

115 திருத்தம் பெரியவர் சேருந் துறையிற் செறிவிலர்க்கு
வருத்தங் கழிந்த வழியரு ளென்றநம் மண்மகளார்
கருத்தொன்ற வாகி வராக முரைத்த கதியறிவார்
பொருத்தந் தெளிந்துரைக் கப்போய் யிலாமதி பெற்றனமே

[ பாசுரம் 20-முதல் 23—வரை ரஹஸ்யசிகாமணி ]

உரை — திருத்தம் பெரியவர் — திருந்திய ஜ்ஞானம் அநுஷ்டானம் இவற்றால் பெரிய மஹாஷிகளால், சேரும் துறையில் — அநுஷ்டிக்கப்படும் (பக்தியோகம் முதலிய) உபாயத்தில், செறிவு இலர்க்கு — முயல்வதற்கு வேண்டிய அதிகாரம் இல்லாதவர்க்கு, வருத்தம் கழிந்த — சிரமமில்லாமல் எளிதில் அநுஷ்டிக்கக்கூடிய, வழி அருள் என்ற — உபாயத்தைத் தேவரீர் அருள்புரிய வேண்டுமென்று ப்ரார்த்தித்த, நம் மண்மகளார் — நம

முடைய பூமிதேவியினுடைய, கருத்து ஒன்ற — எண்ணம் நிறைவேறும்படி, ஆதிவராகம் உரைத்த — ஆதிவராஹப்பிரானாய அவதரித்த எம்பெருமான் வெளியிட்ட, கதி அறிவார் — (ப்ரபத்தியென்னும்) உபாயத்தின் ஸ்வரூபத்தை அறிந்த நம் ஆசார்யர்கள், பொருத்தம் தெளிந்து உரைக்க — நம் தகுதியைக் கண்டு (அவ்வுபாயத்தையே) உபதேசிக்க, பொய் இலா மதி பெற்றனம் — அழிவு இல்லாத ஜ்ஞானத்தைப் பெற்றோம்.

பூமிப்பிராட்டி முன்னொருகால், ஜ்ஞானமும் சக்தியுமில்லாத ஸாதாரண அதிகாரிகள் பக்தியோகத்தை அநுஷ்டிக்கமுடியாமல் ஸம்ஸாரத்தில் உழல்வதைக் கண்டு மனமுருகி, தாயக்கு உள்ள கருணையாலே அவர்களை உய்விக்கக் கருதி, ஸ்ரீவராஹப்பிரானிடம் ஸுலபமாய் அனைவரும் அநுஷ்டிக்கும்படி ஒரு உபாயத்தை வெளியிடும்படி கேட்க, அவன் இரண்டு சுலோகங்களால் ப்ரபத்தியை வெளியிட்டான். அவையே வராஹ சரமசுலோகமாய் வழங்குகின்றன.

கருத்து — ஸ்ரீவராஹசரமசுலோகத்தை ஆசார்யர்கள் உபதேசிக்க, சிறந்த ஜ்ஞானத்தைப் பெறலாம். 20

[ஸ்ரீவராஹசரமசுலோகத்தை மொழிபெயர்த்துப் பாடுகிறார் —]

எண்சீராசிரியவிருத்தம்

116 * இடம்பெற்றா ரெல்லாமென் னுடலாய் நிற்ப
விடர்பிறப்பென் றிவையில்லா வென்னை யன்பா
லடம்பற்ற மவனென்று நினைந்தான் யாவ
னவனுவி சரியும்போ தறிவு மாறி
யுடம்பிற்ற நுபலம்போற் கிடக்க நானே
யுய்யும்வகை நினைந்துயர்ந்த கதியா லென்ற
னிடம்பெற்றேன் னுடன்வாழ வெடுப்ப னென்ற
வெம்பெருமா னருள்பெற்று மருள்சேர்ந் தேமே. 21

உரை — இடம் பெற்றார் எல்லாம் — (உலகில்) இடம் பெற்றுள்ள யாவரும் (ஸகலவஸ்துக்களும்), என் உடலாய் நிற்ப — எனக்குச் சரீரமாய் நிற்க, இடர் பிறப்பு என்று — நாசமும் பிறவியும் ஆகிய, இவை இல்லா

* 1 ஸ்தி²தே மநஸி ஸுஸ்வஸ்தே² ஶரீரே ஸதி யோ நர꞉ ।
தா⁴துஸாம்யே ஸ்தி²தே ஸ்மர்தா விஶ்வரூபம் ச மாமஜம் ॥
2 ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்ட²பாஷாணஸந்நிப⁴ம் ।
அஹம் ஸ்மராமி மத்³ப⁴க்தம் நயாமி பரமாம் க³திம் ॥

[ வராஹசரமசுலோகம் ]

என்னை — இந்தத் தோஷங்கள் இல்லாத (ஸர்வேச்வரனை) என்னை, அன்பால் — ப்ரீதியுடன், "அவன் அடம்பற்று ஆம் —" "அவன் (ஒருநாளும் கைவிடாத) திடமான கதியாக ஆவான்", என்று யாவன் நினைந்தான் — என்று எவன் நினைந்தவனாய்ச் சரணமடைகின்றானோ, அவன் ஆவி சரியும்போது — அவனுடைய உயிர் நீங்குங்காலத்தில், அறிவு மாறி — தன் நினைவை இழந்து, தாரு உபலம் போல் உடம்பில் கிடக்க—கட்டைபோலும் கல்போலும் (தன்) சரீரத்தில் கிடக்கும்போது, உய்யும் வகை நானே நினைந்து — (அந்தச் சேதநன்) உஜ்ஜீவிக்கவேண்டிய ப்ரகாரத்தை நானே செய்ய நினைந்து, உயர்ந்த கதியால் — சிறந்த ஆர்ச்சிராதிகதியால், என்றன் இடம் பெற்று — என்னுடைய ஸ்தாநமாகிய பரமபதத்தைப் பெற்று, என்னுடன் வாழ — என்னோடிருந்து (ஸகலகைங்கர்யங்களையும் செய்து) வாழும்படி, எடுப்பன் என்ற — உயர்த்திவைப்பேன் என்று அருளிச்செய்த, எம்பெருமான் அருள் பெற்று—ஸ்ரீவராஹப்பிரானுடைய கருணையைப் பெற்று, மருள் செற்றோம் — அஜ்ஞாநம் ஒழியப்பெற்றோம்.

கருத்து — பரபந்நனைச் சேதநனை உஜ்ஜீவிப்பிக்க ஸ்ரீவராஹப்பிரான் கூறிய உறுதியை நினைத்தால் கவலைகள் பறந்துபோம். 21

கட்டளைக்கலித்துறை

117 இரண்டுரை யாதநம் மேன முரைந்த வுரையிரண்டின்
திரண்ட பொருள்கள் தெளிந்தடி சூடினந் திண்ணருளாற்
சுருண்டநந் ஞானச் சுடரொளி சுற்றும் பரப்பதன்முன்
புரண்டது நம்வினை போமிடம் பார்த்தினிப் போமளவே. 22

உரை — இரண்டு உரையாத — இரண்டுவார்த்தை சொல்லாத (சொன்ன சொல் தவறாத), நம் ஏனம் உரைத்த — நம்முடைய வராஹப்பிரான் அருளிச்செய்த, உரை இரண்டின் — சரமச்லோகம் இரண்டின், திரண்ட பொருள்கள் தெளிந்து — ஸாரமான அர்த்தங்களை (நாம்) அறிந்து, திண் அருளால் — (அவனுடைய) வலிய கருணையினால், அடி சூடினம் — (அவன்) திருவடிகளையே உபாயமாகவும் பலனாகவும் கொண்டோம் சுருண்ட நம் ஞானச் சுடர் ஒளி — (காமஸம்பந்தத்தால் எல்லா விஷயத்தையும் அறிய முடியாது) சுருங்கியுள்ள நம ஜ்ஞாநமாகிய தேஜஸ்ஸின் ப்ரகாசம், சுற்றும் பரப்பதன் முன் — எல்லாவிடத்திலும் பரவுவதற்கு முன் (எல்லாவற்றையும் அறியும் சக்தியைப் பெறுவதற்கு முன்), நம் வினை புரண்டது — நம்முடைய காமம் அகன்றுவிட்டது இனி போம் இடம் பார்த்து — இனித் தாம் போகத்தக்க இடத்தைப் பார்த்து, போம் அளவே — (அவை) போகவேண்டிய அளவேயுள்ளது.

தாமபூதஜஞாநம் காமபூமியில எலலாவறறையும அறியமுடியாது சுருஙகிககிடககின்றது முகதிபெறறதும அநத ஜஞாநம மலாந்து எல்லாவறறையும அறிகின்றது.

சேதநன் முகதிபெறுமபோது எலலாக காமஙகளும ஒழியவேணடியவை யாதலின் அவனுடைய புணயகாமம அவனுடைய நணபாகளிடமும, பாப காமம விரோதிகளிடமும் போய்ச சேருமென உபநிஷததுக கூறுகின்றது.

கருத்து:- வராஹசரமசுலோகததினபடி எமபெருமான திருவடிகளைப பறறுமவனுககு ஸகலகாமஙகளும ஒழியும.

118 மலையுந் துலையுமென் றெண்ணியும் வன்பெரும் புண்டிரங்கித்
தலையும் வெளுத்தபின் றனே யழிய விசைகின்றிலீ
ரலையுங் கடல்கொண்ட வைய மளித்தவன் மெய்யருளே
நிலையென்று நாடி நிலைநின்ற பொய்ம்மதி நீக்குமினே 23

உரை — மலையும் — (ஸதிரமெனறு நாம நினைககும) மலையும, துலையும் — (ஒரு காலததில) சிதறிப்போம, என்று எண்ணியும் — எனறு அறிநதிருநதும், வன் பெரும் புண் திரங்கி — வலிய பெரிய புணணுயுள்ள சரீரம் மடிப்புவிழுநது, தலையும் வெளுத்த பின் — தலையும நரைததுப் போன பின்பும், அழிய இசைகின்றிலீர்! — மரணமடைய மனமிலலா திருககும சேதநாகளே ! அலையும் கடல் கொண்ட — அலைநிறைநத ப்ரளயஸமுத்ரத்தால கொள்ளப்பட்ட, வையம் அளித்தவன் — உலகத்தை (அக்கடலிலிருந்து எடுதது) ரக்ஷிதத ஸ்ரீவராஹப்பிரானுடைய, மெய் அருளே — ஸதயமான கருணையால அவதரிதத பரபததியே, நிலை என்று நாடி — ஸ்திரமான உபாயமென்று அறிநது, நிலை நின்ற — (உஙக ளிடம வெகு காலமாக) வேரூன்றி நிறகின்ற, பொய்ம்மதி நீக்குமின் — அஜ்ஞாநததை ஒழித்துக்கொளவீாகளாக தான் — அசை

கருத்து— சேதநன், சரீரம் அநிதயமெனபதைக கணடு தான உஜ்ஜீவிகக பரபததியை அநுஷடிககவேணடும 23

119 * கண்ணன் கழறெழக் கூப்பிய கையின் பெருமைதனை
யெண்ணங் கடக்க வெழனைத் துறைவ ரியம்புதலாற்
றிண்ண மிதுவென்று தேறித் தெளிந்தபின் சின்மதியோர்
பண்ணும் பணிதிகள் பாற்றிப் பழந்தொழில் பற்றினமே 24
[அஞ்ஜலிவைபவம்]

---

ஸ்ரீ ஆளவநதார ஸ்தோதரம 28-வது சுலோகம்—

* [illegible]

[illegible] ।

உரை — கண்ணன் கழல் தொழ — எம்பெருமானுடைய திருவடிகளை வணங்குவதற்காக, கூப்பிய கையின் — கூப்பப்பட்ட கைகளின (அஞ்ஜலியின), பெருமைதனை — பரபாவத்தை, எழுணைத்துறைவர் — ஆளவந்தார் (யாமுநமுனிவர்), எண்ணம் கடக்க — நம நினைவின எல்லையை கடந்ததாக, இயம்புதலால் — (ஒரு சுலோகத்தால) அருளிச்செய்தபடியால், இது திண்ணம் என்று — இதுவே திடமான விததாநதம என்று, தெளிந்த பின் — (நாம) நிசசயித்துத் தெளிந்த பிறகு, சின்மதியோர் எண்ணும் — அற்பபுத்தியையுடையவர்கள் செய்கின்ற, பணிதிகள் பாற்றி — வழிகளை ஒழித்து, பழந்தொழில் பற்றினம் — பழமையாய வந்த செய்கையாகிய பரபத்தியை (உபாயமாக)க் கொணடோம

கைகளைக கூப்புவதற்கு அஞ்ஜலி என்று பெயர். இது ஒரு அடையாளமாகும. இதைக் கண்டு எம்பெருமானுக்கு உண்டாகும மகிழ்ச்சி அற்பமானதன்று எமபெருமானிடம் பரநயாஸம செய்தவன தன்னைக் காத்துக்கொள்ள மறுபடியும ஒரு காரியமும செய்யவேணடாதபடி நிறகும நிலையையும காட்டுகின்றது அஞ்ஜலி

கருத்து.— ஆளவந்தார வெளியிட்ட அஞ்ஜலியின வைபவத்தை அறிந்தவன அஞ்ஜலிசெய்ய முறபடுவான.

எணசீராசிரியவிருத்தம

120 பொங்குபுன லாறுகளிற் புவன மெல்லாம்
பொற்கழலா லளந்தவன்றன் றளால் வந்த
கங்கையெனு நதிபோலக் கடல்க ளேழிற்
கமலைபிறந் தவனுகந்த கடலே போலச்
சங்குகளி லவனேந்துஞ் சங்கே போலத்
தாரிலவன் றண்டுளவத் தாரே போல
வெங்கள்குல பதிகளிவை மேலா மென்றே
யெண்ணியநல் வார்த்தைகளு மிசைகின் றேமே 25
[ பாசுரம் 25, 26, 27—பரதாநசதகம் ]

உரை — பொங்கு புனல் ஆறுகளில்—பெருகிவருகின்ற ஜலத்தையுடைய (உலகிலுள்ள) ஆறுகளுக்குள், புவனம் எல்லாம் — உலகமுழுதும், பொன் கழலால் அளந்தவன்றன் — (த்ரிவிக்ரமாவதாரத்தில தனனுடைய) அழகிய திருவடிகளால அளந்த எமபெருமானுடைய, தாளால் வந்த —

தவைவ ஊவஷாதுஸஹாநுஸெஷதஃ
ஸஹாநி வவஷாகி ந ஜாதுவ ஷியதெ ||

திருவடிகளிலிருநது வநத, கங்கையெனும் நதிபோல — கஙகை எனறும நதி (சிறபபுறறது) போலவும, கடல்கள் ஏழில் — ஏழு ஸமுதரஙகளுள், கமலை பிறந்து — பிராட்டி அவதரிததததனலை, அவன் உகந்த கடலே போல — அவவெமபெருமானுககு பரியமான திருப்பாறகடல (சிறபபுறறது) போலவும, சங்குகளில் — சஙகஙகளுககுள, அவன் ஏந்தும் சங்கேபோல— அவவெமபெருமான (திருககையில) ஏநதுகினற (பாஞசஜனயமெனறும்) சஙகம (உயாநதது) போலவும, தாரில் — புஷபமாலைகளுககுள, அவன் தன் துளவத் தாரேபோல — அநதப பகவான அணியும குளிாநத திருத துழாயமாலை (சிறபபுறறது) போலவும, எங்கள் குலபதிகள் — எஙகள பரபநநகுலததிறகுத தலைவாகளான ஆழவாா முதலியவாகள, இவை மேல் ஆம் என்றே எண்ணிய — இவையே சிறநதவை ஆகும எனறு நிசசயிதது அநுஸநதிதத, நல் வார்த்தைகள் — நலல உபதேசஙகளை, நாம் இசைகின் றேம் — நாம அஙகீகரிதது நடககினறோம

தரிவிகரமாவதாரததில பரஹமலோகததிறகுச சென்ற திருவடியில பரஹமா திருமஞசனமசெயய அந்தததீாததம கஙகையாயபபெருகியது.

கடல ஏழு— உபபு, பால, தேன், நெய், கருபபஞசாறு, தயிர், சுத்தஜலம இவறறுல ஆகியவை

கருதது — பூாவாசாாயாகள முககியமாகக காட்டி உபதேசிதத விஷயஙகளையே பரபநநன ஏறறு நடபபான.

121 சீர்க்கடலின் றிரையென்னத் தகவான் மிக்க
தேசிகராய்த் திண்ணிருளாங் கடலை நீக்கிப்
பாற்கடலோன் றிருவணையாய் நின்று பாரங்
காணுத பவக்கடலைக் கடத்து கின்ற
வீர்க்குமரக் கலமென்ன விறைவ ரின்ப
மெழுந்தழியுங் குமிழியென விகந்தோ ழிந்தோ
மார்க்கினிநா மென்கடவோ நமக்கு மாரோன்
கடவாரோன் றடைந்தவர்கட் கறிவித் தோமே. 26

உரை — பாற்கடலோன் — திருபபாறகடலில பளளிகொணட எமபெருமான, சீர்க் கடலின் திரை என்ன—சிறபபுறற ஸமுதரததின அலை யென்னுமபடி(மேலமேல வருகினற), தகவால் மிக்க தேசிகர் ஆய்—கருணை மிகுநத ஆசாாயராக அவதரிதது, திண் இருள் ஆம் கடலை நீக்கி — (நம் முடைய அஜஞாநமாகிய) வலிய இருள எனறும கடலினினறும நீககி, திரு அணையாய் நின்று—சிறநத பாலமாயத தானே நினறு, பாரம் காணுத— கரை காணமுடியாத, பவக் கடலைக் கடத்துகின்றன் — ஸமஸாரமாகிய

ஸமுத்ரத்தினின்றும் (நம்மைக்) கரையேற்றுவிக்கின்றன, ஈர்க்கும் மரக் கலமென்ன — (மனிதரை) இழுத்துச்செல்லுகின்ற ஓடமென்னப்படுமவ ரான, இறைவர் இன்பம் — (ப்ரஹ்மா முதலிய) தேவர்களின் ஸுகமும், எழுந்து அழியும் துமிழ் என — (நீரில்) கிளம்பி அழியும் நீர்க்குமிழி (போல் நிலையாதது) என்று (நினைத்து), இகந்து ஒழிந்தோம்— (அதில் விருப்பத்தை) விட்டொழித்தோம், அடைந்தவர்கட்கு — (நம்மை வந்து) அடைந்தவர் களுக்கு, நாம் இனி ஆர்க்கு என் கடவோம் ? — (ப்ரபந்நரான) நாம் இனி யாருக்கு எவ்விஷயத்தில் கடமைப்பட்டுள்ளோம் ?, நமக்கும் ஆர் என் கடவார்?— நமக்கும் யார் எவ்வகையில் கடமைப்பட்டுள்ளார்? (எம்பெருமா னும் நாமுமே ஒருவருக்கொருவர் கடமைப்பட்டுள்ளோம்), என்று அறி வித்தோம் — என்று உபதேசித்தோம்

ப்ரஹ்மாதிதேவர், சேதநருக்கு அற்பபலன்களையே தரவல்லராய் எம்பெருமானுடைய உதவியின்றிக் கார்யம்செய்ய வல்லமையற்றிருக் கின்றனர். ஆதலின், சிறிதுதூரமே மனிதரை இழுத்துச்செல்லவல்லதும் பிறர்உதவியின்றிச் செல்லமுடியாததுமான மரக்கலம் அவர்களுக்கு உவமானமாக்கப்பட்டது.

கருத்து — எம்பெருமானே ஆசார்யனாய்வந்து உப தேசித்துச் சேதநனை உபாயத்தில் மூட்டி ஸம்ஸாரபந்தத் தைத் தீர்க்கின்றான். சேதநன் எம்பெருமானுக்கே கட மைப்பட்டவனாவான் 26

122 காசினியின் மணியனைத்துங் காயா வண்ணன்
கடைந்தெடுத்த கவுத்துவத்தின் சீர்மைக் கொவ்வா
காசிமுத லாகியநன் னகரி யெல்லாங்
கார்மேனி யருளாளர் கச்சிக் கொவ்வா
மாசின்மனந் தெளிமுனிவர் வகுத்த வெல்லா
மாலுகந்த வாசிரியர் வார்த்தைக் கொவ்வா
வாசியறிந் திவையுரைத்தோம் வையத் துள்ளீர்
வைப்பாக விவைகொண்டு மகிழ்மி னீரே. 27

உரை:— காசினியில் மணி அனைத்தும் — பூமியிலுள்ள ரத்நங்கள் முழுதும், காயா வண்ணன் கடைந்து எடுத்த — காயாம்பூவைப்போன்ற நிற முடைய எம்பெருமான் (கடலைக்) கடைந்து (அதினின்றும்) எடுத்த, கவுத் துவத்தின் சீர்மைக்கு ஒவ்வா— கௌஸ்துபமென்னும் ரத்நத்தின் சிறப்புக்கு ஒப்பாகா, காசி முதலாகிய நல் நகரி எல்லாம் — காசி முதலிய புண்ய ஸ்தலமெல்லாம், கார்மேனி அருளாளர் கச்சிக்கு ஒவ்வா — மேகம்போன்ற

திருமேனியையுடைய பேரருளாளா எழுநதருளியிருககும் காஞசீபுரத திறகு ஈடாகா, (அவைபோல) மாசு இல் — குறறமறற, மனம் தெளி முனிவர் — மனததெளிவையுடைய மஹாஷிகள், வகுத்த எல்லாம் — விளககிவெளியிடட (ஸமருதி, புராணம) எலலாம, மால் உகந்த ஆசிரியர் — எமபெருமானுடைய கருபைககு உரியரான (நமமாழவாா முதலிய) ஆசாாயாகளின, வார்த்தைக்கு ஒவ்வா — ஒரு வாாததைககு ஸமமாகா, வாசி அறிந்து இவை உரைத்தோம் — (பொருளகளின்) தராதரம அறிநது இவவிஷயஙகளை (ஏறறததாழவுகளை)க கூறினேம வையத்துள்ளீர் ! — உலகததிலுள்ளோாகளே ! நீர் இவை வைப்பாகக் கோண்டு மகிழ்மின் — நீஙகள இவவிஷயஙகளை அருமையான புதையலாக ஏறறு மகிழவீாகளாக.

கருத்து — சேதநன ஆசாாயோபதேசததைக கடைப பிடிதது உஜஜீவிககவேணடும 27

123 அந்தமிலாப் பேரின்ப மருந்த வேற்கு
மடியோமை யறிவுடனே யென்றுங் காத்து
முந்தைவினை நிரைவழியி லொழுகா தெம்மை
முன்னிலையாந் தேசிகர்த முன்னே சேர்த்து
மந்திரமு மந்திரத்தின் வழியுங் காட்டி
வழிப்படுத்தி வானேற்றி யடிமை கொள்ளத்
தந்தையென நின்றதனித் திருமா றளிற்
றலைவைத்தோஞ் சடகோப னருளி னுலே 28

[ பாசுரம 28, 29, 30— உபகாரஸஙகரஹம ]

உரை — அந்தம் இலாப் பேர் இன்பம் — அளவறற பெரிய மோக்ஷாநநததைை, அருந்த ஏற்கும் அடியோமை — அநுபவிபபதறகுத தகுதியுளள தாஸாகளான எமமை, என்றும் அறிவுடனே காத்து— எபபொழுதும நிதயமான தாமபூதஜஞாநததுடன ரக்ஷிதது, எம்மை — எஙகளை, முந்தை நிரை வினைவழியில் ஒழுகாது — அநாதியாயத தொடாநதுவரும காமப பெருககில (கரையேருமல) ஆழநது செலலாதவாறு, முன் நிலை ஆம் — (நமககு அருளபுரிய) முதல ஸதாநததில நிறகினற, தேசிகர் தம் முன்னே சேர்த்து — ஆசாாயாகளபககல கொணடுசோதது, மந்திரமும்— திருமநத்ரம முதலிய மநதரததையும, மந்திரத்தின் வழியும் காடடி — அநத மநதரததில சொலலப்படும (பரபததியென்னும) உபாயததையும உபதேசித்து, வழிப்படுத்தி — அவவுபாயததை அநுஷடிக்குமபடியும செயது, வான் ஏற்றி — பரமபதததில் சோப்பிதது, அடிமை கொள்ள — (நாம செயயும) கைஙகாயததை ஏறறுககொளளுவதறகு, தந்தை என நின்ற — (இவ்வளவு மஹோபகாரம் செயய முறபடடதால) தகப்பன் என்னும்படி நின்ற, தனித்

திருமால் தாளில் — நிகரற்ற எம்பெருமான் திருவடிகளில், சடகோபன் அருளினால் — நம்மாழ்வாருடைய கருணையாலே, தலைவைத்தோம் — தலை வணங்கப்பெற்றோம்

"அடியோமை என்றும் காத்து" "அடியோமை என்றும் அறிவுடனே காத்து" என்று இரண்டு தொடராக்கிக் கொள்க. எம்பெருமான் ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும் மாற்றவல்லவனாயினும், தன் நித்யமான ஸங்கல்பத்தாலே ஜீவனை நித்யனாக்கி ஜீவஸ்வரூபத்தையும், தர்மபூதஜ்ஞானத்தை ஜீவனைப் பிரியாத நித்யகுணமாக்கி ஜீவஸ்வபாவத்தையும் காக்கின்றான் என்று தாத்பர்யம் கொள்க.

இப்பாசுரம் நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தத்தின் முதற் பாசுரத்தின் வ்யாக்யாநமான உபகாரஸங்க்ரஹத்தைப்பற்றி எழுந்ததாதலின், இங்கு ஆழ்வாரைப்பற்றிக் குறிக்கலாயிற்று.

கருத்து:— ஸர்வேச்வரனே சேதநர்க்கு ஸகலஉபகாரங்களையும் செய்யத்தக்கவன். 28

124 தான்றனக்குத் தன்னாலே தோன்றித் தன்னோ
ரொளியணைக்குந் துணைத்தாலுந் தன்னைக் கண்டு
தான்றனக்கென் றறியாத தன்து ணத்தைத்
தன்துணைத்தாற் றனிறையிற் றனே கூட்டி
யூன்மருத்துப் புலன்மனமா னாங்கா ரங்க
ளொருமூலப் பிரகிருதி யன்றி நின்ற
நான்றனக்குத் தான்றனக்கென் றிசைவு தந்த
நாரணனை நான்மறையா னன்கண் டேனே 29

உரை — தான் — ஜீவாத்மாவாகிய தான், தனக்குத் தன்னாலே தோன்றி — தனக்குத் தானே ('நான்' என்று)தோன்றி, தன் ஓர் ஒளி அணைக்கும் துணைத்தாலும் — தன்னுடைய ஒரு ப்ரகாசம்போன்ற தர்மபூதஜ்ஞானத்தாலும், தன்னைக் கண்டு — ஜீவாத்மாவாகிய தன்னை அறிந்து, தான் தனக்கு என்று அறியாத — (அசேதநமாதலால்) தான் என்றும் தனக்கு என்றும் அறிவில்லாத, தன் துணத்தை — தர்மபூதஜ்ஞானத்தை, தன் துணைத்தால் — தனக்குக் கிடைத்துள்ள தத்த்வஜ்ஞானத்தால், தான் இறையில் தானே கூட்டி — தானே ஸர்வஸ்வாமியான எம்பெருமான்விஷயத்திலேயே செலுத்தி, ஊன் — மாம்ஸமயமான சரீரம், மருத்து — ப்ராணவாயுக்கள், புலன் — இந்த்ரியங்கள், மனம் — மனது, மான் — மஹான் என்னும் தத்த்வம், ஆங்காரங்கள் — அஹங்காரமென்னும் தத்த்வம், ஒரு மூலப் பிரகிருதி — தனியான மூலப்ரக்ருதி, அன்றி நின்ற — ஆகிய அசேதநங்

களைககாட்டிலும வேறுபட்டுநிறகினற, நான் — ஜீவாதமாவாகிய நான, தனக்கு — ஸாவேசுவரனுகிய தனககு (அடியன), தான் தனக்கு என்று — பகவானுகிய தானே தனக்கு (ஸவாமி) என்று, இசைவு தந்த — (நான) அஙகீகரிககுமபடி செய்த, நாரணனே — நாராயணனே, நான்மறையால் — நானகு வேததததால, நான் கண்டேன் — (ஒருவாறு) நான் அறிநதேன

ஜீவாதமா தனனைத்தவிர வேறொரு வஸதுவை அறியுமபோது தனனுடைய ஜஞாநததாலேயே அறியவேணடும் இநத ஜஞாநம தாம பூதஜ்ஞாநமெனபபடும் அறிகிற ஜீவனும ஜஞாநஸவரூபமாகவே இருப்பதால ஜீவன் தாமிபூதஜஞாநமெனப்படும ஜீவாதமா, தன்னை "நான்" என்று அறியுமபோது தாமபூதஜஞாநம் வேணடுமெனற நிாப்பநதம் இலலை ஜீவன தனககுததானே "நான நான" எனறு தோனறிக கொண்டேயிருககிருன இவ்வாறு இருபபதறகுததான் பரதயகதவமெனறு பெயா ஜீவன் தனனுடைய தாமபூதஜஞாநததைககொணடும தனனை அறியலாம ஸூாயனுடைய ப்ரகாசம அவனைவிட்டுப பிரியாதிருபபது போல ஜீவனுடைய தாமபூதஜஞாநமும பிரியாமல அதன குணமாயிருக்கிறது ஆகவே ஜீவாதமா தனனை அறியும்போது தாமபூதஜஞாநம இல்லாமல தானே அறியலாம, குணஙகளுடன கூடியவனை தனனை தாமபூதஜஞாநததாலேயே அறியலாமெனபது ஸிததாநதம இநதத தாம பூதஜ்ஞாநததிறகு அறிவிலலையாதலால இது அசேதநமாகும இதை எம பெருமானவிஷயததில செலுத்தினைதான ஜீவன உஜ்ஜீவிககலாம். அஙஙனம செயவதறகுத தததுவஙகளின் ஸவரூபஜஞாநம வேணடும

கருதது — வேதாநதார்ததஙகளை அறிநதால எம பெருமானுடைய ஸவரூபததையும ஜீவாதமாவின ஸவரூபத்தையும அறியலாம 29

125 கழியாத கருவினையிற் படிந்த நம்மைக்
காலமிது வென்றெருகாற் காவல் செய்து
பழியாத நல்வினையிற் படிந்தார் தாளிற்
பணிவித்துப் பாசங்க ளடைய நீக்கிச்
சுழியாத செவ்வழியிற் றுணைவ ரோடே
தொலையாத பேரின்பந் தரமே லேற்றி
யழியாத வருளாழிப் பெருமான் செய்யு
மந்தமிலா வுதவியெலா மளப்பா ராரே 30

உரை — கழியாத கருவினையில் — நீஙகாத பாபஙகளில, படிந்த நம்மை — அழுநதிக்கிடககினற நமமை, இது காலம் என்று —

இதுவே தக்க ஸமயமென்று (நினைத்து), ஒருகால் காவல்செய்து — (நம்முடைய பாக்யம் பகவமான) ஒருஸமயததில ரக்ஷிக்கமுறபட்டு, பழியாத நல் வினையில் — பழிககப்படாத (குறறமறற) நலல காாயமாகிய பரபததிமாாககததில, படிந்தார் தாளில் பணிவித்து—ாடுபட்டுளள ஆசாரயாகளின திருவடிகளில் (நமமை) வணஙகசசெய்து, பாசங்கள் அடைய நீக்கி — காமபாசஙகள முழுவதையும போககி, தொலையாத பேரின்பம் தா — அழிவிலலாத பெரிய மோக்ஷஸாககததைக கொடுப்பதற்காக, சுழியாத செவ் வழியில் — திருமபுதல இல்லாத சிறநத அாசசிராதிமாாககததால், துணைவரோடே மேல் ஏற்றி — (ஆதிவாஹிகாகளாகிய) துணைவரோடு ஸ்ரீவைகுணடததிறகு ஏறறுவிததது, அழியாத அருள் ஆழிப் பெருமான் செய்யும் — அழியாதவனும கருணைக கடலுமாகிய எம்பெருமான (சேதநனுககுச்) செயகினற, அந்தம் இலா உதவி எலாம்—எலலையிலலாத உபகாரங்களை எலலாம, அளப்பார் ஆர்?— அளவிட்டறிபவா யாா? (ஒருவருமிலலையெனறபடி)

இஙகு 'அருளாழிப் பெருமான' எனுந தொடா பேரருளாளனைக் குறிககுமென்பா பெரியோா

சரீரததைவிடடுப் பிரிநது மோக்ஷததிறகுச செலலும ஜீவனுக்குத தஙகளதஙகள் எலலைகளில உபசாரஙகளைசசெயது வழிநடததுவிப்பவா ஆதிவாஹிகரெனபபடுவா, 67-வது பாசுரததின உரையிற காணக

கருதது — சேதநனுககு எமபெருமான செயயும உபகாரததை ஒருவரும அளவிடமுடியாது 30

126 நின்னருளாங் கதியன்றி மற்றேன் றில்லே
னெடுங்காலம் பிழைசெய்த நிலைக ழிந்தே
னுன்னருளுக் கினிதான நிலையு கந்தே
னுன்சரணே சரணென்னுந் துணிவு பூண்டேன்
மன்னிருளாய் நின்றநிலை யெனக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சிதா வரித்தே னுன்னை
யின்னருளா லினியெனக்கோர் பரமேற் றும
லென்றிருமா லடைக்கலங்கொ ளென்னை நீயே. 31

[ ஸாரஸங்க்ரஹம் ]

உரை:— என் திருமால்! — எனக்கு நாதனை எமபெருமானே! நின் அருளாம் கதி அன்றி — உன்னுடைய கருபையாகிய கதியைத் தவிர, மற்று ஒன்று இல்லேன்—வேறு ஒரு கதி இலலாதவனாயிருககிறேன, நெடுங் காலம் பிழை செய்த நிலை கழிந்தேன் — அநாதிகாலமாக அபராதம் செயது வநத நிலைமை (இபபொழுது) கழியப்பெறறேன, உன் அருளுக்கு இனிதான

நிலை உகந்தேன் — உன் கருபையைபபெறுவதறகு (த தக்க) நலல ப்ரபத்தி மாாக்கததை விருமபினேனை, உன் சரணே சரண் என்னும் துணிவு பூண்டேன் — உன் திருவடியே உபாயம என்னும உறுதியைப பெறறேன, மன் இருளாய் நின்ற நிலை — திடமான அஜ்ஞாநமயமாய இருநத நிலைமையை, எனக்குத் தீர்த்து — எனககுப போக்கிவைதது, வானவர்தம் வாழ்ச்சி தர — நிதயஸூரிகளின் வாழவை (எனககு)த தருமபடி, உன்னை வரித்தேன் — உனனை பராாததிததுககொணடேன, இன் அருளால் — (உன்) இனிய கருபையால, இனி எனக்கு ஓர் பாரம் ஏற்றமலீ — இனிமேல எனககு ஒரு பொறுபபும வைககாமல, நீ என்னை அடைக்கலம் கோள் — நீ என்னைக காககவேணடிய வஸ்துவாக ஏறறுககொளளவேணடும

கருத்து — பரபநநனுககு எமபெருமான ஒரு பொறுபபையும வைககமாட்டான. 31

கட்டளைக்கலிததுறை

127 பாவும் மறைகளே லாம்பதஞ் சேர்ந்தொன்ற நின்றபிரா
னிரவன் றிரவியின் காலத் தழைந்த வெழிற்படையோ
னரவுங் கருடனு மன்புட னேந்து மடியிரண்டுந்
தரவேந் தமக்கரு ளாற்றள ராமனந் தந்தனனே 32

[ பாசுரம 32, 33, 34— விரோதபரிஹாரம ]

உரை·— பாவும் மறைகள் எ(ல்)லாம் — ஸதோதரஞ்செய்யுநதனமையுள்ள வேதஙகள் முழுதும், பதம் சேர்ந்து ஒன்ற — தன் திருவடிகளில ஈடுபட்டுப பேசுகிறக, நின்ற பிரான் — (அதனல்) உயர்நது நிற்கும் ஸ்வாமியும, அன்று — அந்நாள, (பாரதபபோரில) இரவியின் காலத்து — ஸூாயன ப்ரகாசிக்கும பகறபொழுதிலே, இரவு அழைத்த—ராத்ரியை வருவித்த, எழில் படையோன் — ப்ரகாசமான சகராயுததைதயுடையவனுமான எமபெருமான, அரவும் கருடனும் — ஆதிசேஷனும பெரிய திருவடியும, அன்புடன் ஏந்தும் — பகதியுடன ஏநதிக் கைங்காயஞ்செய்கின்ற, அடி இரண்டும் எம் தமக்குத் தர— திருவடிகள இரண்டையும (யாமும கைஙகாயம் செய்யும படி) எமக்குக் கொடுகக (நினைநது), அருளால் — க்ருபையால, தளரா மனம் தந்தனன் — சோாவடையாத மனததைக கொடுததருளினன்.

பாரதயுத்தத்தில பதினன்காநாள, அர்ஜுநன தன புத்திரனை அபிமந்யுவைக் கொனற ஜயதரதனை அன்று மாலைநேரத்திறகுள கொலலாவிடில அகனியில ப்ரவேசிபபதாய்ச சபதம செயதான. அதை அறிந்த துரியோதநாதியா ஜயதரதனை வெளியில் விடாமல மிக்க கவனததுடன் நிலவறையில வைத்துக் காததுவந்தனா. அாஜுநன கவலையை

நீக்கக கண்ணபிரான தனசக்ராயுதததால பகறபொழுதிலேயே ஸூாயனை மறைததுவிட்டான் அதனால இரவாகக காணப்பட்டது. அாஜுனனும் பொழுது மறைநதது கணடு தீப புக முயனறுன. அாஜுனன் தீயிறபுகு வதை மகிழவுடன பாாகக எதிரிகள ஜயதரதனை முனனிட்டுககொண்டு வநதனா. அபபொழுது கண்ணன் சகரதததை நீககியருள மறுபடியும் பகல்வர உடனே அாஜுனன ஜயதரதனைக கொன்றுன். இவவரலாறு இபபாசுரத்தின் இரணடாமடியிற கூறபபட்டது

கருத்து — எமபெருமான பாகவதாகளுககு அநுகூல மான மனவுறுதியைத தருகினறுன. 32

[ஸ்ரீபாஷயகாரருடைய திருவடிகளில் ஈடுபட்ட இருவா ஒரு குளக் கரையில நினறு அவருடைய புகழைபபறறிப் பேசுவதாக அமைநத இபபாசுரம மிகக ரஸமுளள ஒரு ஸமபாஷணையாயுளளது—]

பதினைகுசீரசசநதவிருததம

128 அலர்ந்த வம்பு யத்தி நுந்து தேனை நுந்தி யின்னக
லல்து லார சைந்த டைந்த நடைகோ ளாத தனமேனே
நலந்த விர்ந்த தால தென்கோ ஞவின் வீறி ழந்ததா
ஞவ ணங்கு நாதர் தந்த நாவின் வீறி ழந்ததேன்
சலந்த விர்ந்து வாது செய்து சாடி ழண்ட மீண்டரைச்
சரிவி லேனே னக்க ளைத்து ரைத்த வேதி ராசர்தம்
வலந்த நுங்கை நாய ஞர்வ ளைக்கி சைந்த கீர்த்தியால்
வாரி பால தாம தென்று மாசில் வாழி வாழியே. 33

உரை — ஒருவா — அனம் அலர்ந்த அம்புயத்து இருந்து—ஹமஸம் மலாநத தாமரைபபூவில உடகாாநது, தேன் அருந்தி—(அதில் உள்ள) தேனைப் பருகி, இன் அகல் அல்துலார் — அழகிய அகன்ற அலகுலையுடைய ஸதரீ களின, அசைந்து அடைந்த நடை — அசைநது நடககும நடையை, கோளாதது என் ? — கொளளாமல (வருநதி வாடிக) கிடபபதன் காரணம் எனன ?

மறறவா — நலம் தவிர்ந்ததால் — தன பெருமையை அது இழநது விடடதால் (தான வருநதிககிடககினறது)

ஒருவர் — அது என்கோல்? — அது எனன? (எவ்வாறு பெருமை இழநதது?)

மறறவா — நாவின் வீறு இழந்ததால்— (தன) நாவிறகுளள (பாலை யும நீரையும பிரிககும) சகதியை இழநதுவிட்டதால (இவவாறு வருநது கின்றது).

ஒருவா — நா அணங்கு நாதர் தந்த — வாககுககுத தேவதையாகிய ஸரஸவதியின கணவனுன பரஹமாவால கொடுககப்படட, நாவின் வீறு என் இழந்தது? — நாவின அநதச சகதியை ஏன இழநதது ?

மறறவா — (கூறுகிறேன கேளும) மூண்ட மிண்டரை — அடிககடி வாததகிறகு வநத முரடாகளான வாதிகளை, சலம் தவிர்ந்து வாது செய்து சாடி — குறறமிலலாது வாதம செயது ஜயிதது, சரிவு இலேன் எனக் களைத்து உரைத்த — (இனனும யாவா வாதமபுரிய வநதாலும) தளரமாட டேன எனறு காஜிததுக கூறிய, எதிராசர் தம் — ஸ்ரீபாஷயகாரருடைய தும, வலம் தரும் கை நாயனுர் — (அடைநதவாகளுககுப) பலததைத தரும கையையுடைய எமபெருமானுடைய, வளைக்கு இசைந்த கீர்த்தி யால் — சஙகமபோனறதுமான கீரததி (உலகமெஙகும) பரவியதால, வாரி பாலது ஆம் — ஜலம் முழுதும பாலாகிவிடடதாம (ஜலம முழுதுமே பாலாகி விடடதால பாலிலிருநது நீரைபபிரிககும சகதிககு உபயோகமே ஏறபடா மல பயனறறுப்போயவிடடதை எணணி இநத அனனம வருநதிநிறகினறது.

என்றும் மாசில் அது வாழி வாழி — எககாலததிலும குறைவுபடாத அநதப புகழ வாழககடவது

சலம்— வாதம செயயுமபோது ஏறபடும ஒருவகைக குறறம ஏதி ராசா— எதிராசா, செயயுளவிகாரம, நீடடல

கருதது — ஸ்ரீபாஷயகாரருடைய புகழ உலகில பரவாத இடமே இலலை 33

கடடளைககலிததுறை

129 சடையன் றிறலவர் கள்பெரு ஞானக் கடலதனை
யிடையமி ழாது கடக்கினு மீதள வென்றறியார்
விடையுட னேழன் றடர்த்தவன் மெய்யருள் பெற்றநல்லோ
ரடைய வறிந்துரைக் கவ்வடி யோழ மறிந்தனமே 34

உரை — சடையன் திறலவர்கள் — * சடையைத தரிககும சிவ னுடைய பலத (தால் ஜஞாநத) தைப பெறறவாகள, பெரு ஞானக் கட லதனை— பெரிய ஜஞாநமாகிய ஸமுதரததை, இடை அமிழாது கடக்கினும்— நடுவில் அமிழநதுபோகாது தாணடினுலும (எவவளவு ஜஞாநம பெறறு லும), ஈது அளவு என்று அறியார் — இதுதான (அநத ஜஞாநஸமுதரத தின்) அளவு எனறு அறியமாடடாாகள, அடியோழும் — பாகவதாகளான நாமோவெனில, அன்று ஏழ விடைஉடன் அடர்த்தவன் —முன ஒருநாள ஏழு காளைகளையும ஒரே ஸமயததில ஒருசேர அடக்கிய கணணனுடைய, மெய்

* ஐுாடிம் உெஷமஞுாகிவெகூ

அருள் பெற்ற நல்லோர் — நிலையான கருணையைப் பெற்ற சிறந்த ஆசார்யர்கள், அடைய அறிந்து உரைக்க — முழுதும் (ஸாரார்த்தங்களைத் தாங்கள்) அறிந்து (நமக்கு) உபதேசிக்க, அறிந்தனம் — ஜ்ஞானத்தைப் பெற்றோம்.

கருஷ்ணாவதாரத்தில் நப்பின்னையை மணக்கவிரும்பிய கண்ணன், அவள் தந்தை கந்யாசுல்கமாக வைத்த ஏழு காளைகளையும் தன்பலத்தால் அடக்கி அவளை மணந்துகொண்ட வரலாறு இரண்டாமடியால் கூறப்பட்டது.

கருத்து — ஆசார்யர்களுடைய உபதேசத்தால் மந்தர்ந்தரஸ்தர்களால் அறியமுடியாத அர்த்தங்களை அறியலாம்.

எண்சீராசிரியவிருத்தம்

130 பாவளருந் தமிழ்மறையின் பயனே கொண்ட
பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்திற்
காவலனுங் கணவனுமாய்க் கலந்து நின்ற
காரணனைக் கருத்துறநாங் கண்ட பின்பு
கோவலனுங் கோமானு மான வந்நாள்
துரவைபிணை கோவியர்தங் குறிப்பே கொண்டு
சேவலுடன் பிரியாத பெடைபோற் சேர்ந்து
தீவினையோர் தனிமையெலாந் தீர்ந்தோ நாமே. 35

[ பாசுரம் 35, 36, 37— முனிவாஹநபோகம் ]

உரை — பா வளரும் தமிழ் மறையின் — பாசுரங்கள் நிறைந்துள்ள தமிழ்வேதமாகிய திவ்யப்ரபந்தத்தின், பயனே கொண்ட — ஸாரார்த்தங்களை அடங்கப்பெற்றதும், பாண்பெருமாள் பாடியது — திருப்பாணாழ்வாரால் பாடப் பெற்றதுமான, ஓர் பாடல் பத்தில் — (அமலனாதிபிரான் எனனும்) நிகரற்ற பத்துப் பாசுரங்களால், காவலனும் கணவனுமாய்க் கலந்து நின்ற காரணனை — (அனைத்தையும்) காப்பவனும் நாயகனுமாய் (எல்லா வஸ்துக்களிலும் அந்தர்யாமியாய்) கலந்து நிற்கின்ற ஸர்வகாரணனான எம்பெருமானை, நாம் கருத்து உறக் கண்டபின்பு — நாம் மனத்தில் பதியுமாறு அறிந்தபின்பு, கோவலனும் கோமானுமான அந்நாள் — கோபாலனும் (யதுவம்சத்து) அரசனுமாய் அவதரித்திருந்த அக்காலத்தில், துரவை பிணை — (அவனுடன்) ராஸக்ரீடை புரிந்தவர்களான, கோவியர்தம் குறிப்பே கொண்டு — இடைப்பெண்களின் உள்ளக்கருத்தையே (நாமும்) கொண்டு, சேவலுடன் பிரியாத — ஆண்பக்ஷியை விட்டு நீங்காத, பெடை போல் சேர்ந்து — பெண் (அன்றில்) பக்ஷிபோல (நாமும் எம்பெருமானைச்) சேர்ந்து, தீவினையோர் தனிமை எலாம் — பாபிகளுக்குள்ள உதவியற்ற நிலையெல்லாம், நாம் தீர்ந்தோம் — நாம் நீங்கப்பெற்றோம்.

கருதது — அமலனுதிபிரானுடைய ஆததததை நன்கு அறிநத பாகவதாகளுடைய மனம எமபெருமானிடமே ஏடுபடும. 35

131 ஆதிமறை யெனவோங்கு மரங்கத் துள்ளே
யருளாருங் கடலைக்கண் டவனம் பாண
ேனுதியதோ ரிருநான்கு மிரண்டு மான
வொருபத்தும் பற்றுக வுணர்ந்து ரைத்தோ
நீதியறி யாதநிலை யறிவார்க் கெல்லா
நிலையிதுவே யென்றுநிலை நாடி நின்றேம்
வேதியர்தாம் விரித்துரைக்கும் விளைவுக் கெல்லாம்
விதையாகு மிதுவென்று விளம்பி னேமே 36

உரை — மறை ஆதி என ஓங்கும் — (உருவததில) வேதததின முதல அக்ஷரமாகிய பரணவம் எனனுமபடி உயாநது நிற்கினற, அரங்கத்துள்ளே— ஸ்ரீரஙகவிமாநததிறகுள (பரகாசிககினற), அருள் ஆரும் கடலை — கருபையாகிய நீா நிறைநத அரஙகனுகிய கடலை, கண்டவன் நம் பாணன் — கணடு அநுபவிததவராகிய நம திருபபாணழவாரால, ஓதியது ஓர் இரு நான்கும் இரண்டுமான ஒரு பத்தும்— அருளிசசெயயபபட்டனவாய (நிதயம) அநுஸநதிககததக்கனவாய எட்டும இரணடுமான நிகரறற அமலனுதிபிரான் பததுப பாசுரஙகளையும், பற்றுக உணர்ந்து உரைத்தோம்— கதியாக அறிநது அநுஸந்திததோம நீதி அறியாத — (பிற மதஙகளைக கணடிப்பதறகு வேணடிய) யுகதிகளை அறியாதவாகளாய, நிலை அறிவார்க்கெல்லாம் — தத்துவஙகளின் ஸவரூபததை (மாததிரம) அறிநதவாகளுககெல்லாம, இதுவே நிலை என்று — இநத ப்ரபநதமே உறுதி தரவலலது எனறு (நினைதது), நிலை நாடிநின்றேம் — (இதில கூறபபட்ட) நிலைமையை (அநுபவததை) அடைய விருமபிநின்ரேம். வேதியர் தாம் விரித்து உரைக்கும் — வேதாநதிகள் தாஙகள விரிவாக வெளியிடுகினற, விளைவுக்கெல்லாம் — பலன்களுக்கெல்லாம, இது விதை ஆகும் என்று — இநத பரபநதம் காரணமான விதைபோனறதாகும் என்று, விளம்பினேம் — (இநத ரஹஸயத்தில) கூறினேம்.

கருத்து — அமலனுதிபிரானென்னும் ப்ரபந்தம் ஸகல பலன்களையும கொடுககவலலதாகையால அதுவே சேதநர்களுககுச் சிறந்த கதியாகும. 36

132 காண்பனவு முரைப்பனவு மற்றேன் றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடிய காதற்
பாண்பெருமா ளருள்செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவு கின்றோம்
வேண்பெரிய விரிதிரைநீர் வையத் துள்ளே
வேதாந்த வாரியனென் றியம்ப நின்றே
நாண்பெரியோ மல்லோநா நன்றுந் தீது
நமக்குரைப்பா ருளரென்று நாடு வோமே 37

உரை — காண்பனவும் உரைப்பனவும் மற்று ஒன்று இன்றி – (தன்) கண்ணால் காணப்படுவதும் பேசப்படுவதும் வேறு ஒரு வஸ்துவாக இல்லாமல், கண்ணனையே கண்டு உரைத்த – எம்பெருமானையே கண்டு (அவனைப்பற்றியே) பேசியவரும், கடிய காதல் பாண்பெருமாள் – (எம் பெருமானிடம்) அதிகமான பக்தியையுடையவருமான திருப்பாணாழ்வார், அருள் செய்த பாடல் பத்தும் – அருளிச்செய்த (அமலனாதிபிரான் என்னும்) பத்துப் பாசுரங்களையும், பழ மறையின் பொருள் என்று பரவுகின்றோம் – அநாதியான வேதத்தின் ஸாரம் என்று (நினைத்துக்) கொண்டாடுகின்றோம் வேண் பெரிய – விருப்பத்தால் பெரியதும் (எல்லோராலும் மிக விரும்பப் படுகின்றதும்), விரி திரை நீர்– அகன்ற அலை நிறைந்த (கடல்) நீரால் சூழப் பட்டதுமான, வைபத்துள்ளே– இவ்வுலகத்தில், வேதாந்த ஆரியன் என்று– வேதாந்தாசார்யன் என்று, இயம்ப நின்றேம் – (ஸ்ரீரங்கநாதன் தானே) புகழும்படி நிலைபெற்றோம், (அதனால்) நாம் நாண்பெரியோம் அல்லோம் – நாம் அஹங்காரம் நிறைந்தவர்களாக ஆகமாட்டோம் நன்றும் தீதும்– நல்ல விஷயங்களையும் தீய விஷயங்களையும், நமக்கு உரைப்பார் – நமக்கு உப தேசிக்கும் ஆசார்யர்கள், உளர் என்று நாடுவோம் – இருந்தே தீருவார் களென்று (துணிந்து அவர்களைத்) தேடியே நிற்போம்

கருத்து — ஸகலவேதார்த்தங்களையும் தன்னுள் அடக்கிக்கொண்ட அமலனாதிபிரானுடைய வ்யாக்கியானமாகிய இந்த ரஹஸ்யத்தை ஆசார்யர்களிடம் கேட்டுத் தெளிய முற்பட வேண்டும். 37

## அமிருதாசுவாதினி-உரை முற்றிற்று

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

ஸ்ரீ:

# பரமபதஸோபானம்-உரை

***சீராருந்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்***

**பொதுத்தனியன்**

ராமாநுஜதயாபாத்ரம் . . . . . தேசிகம் ||

சீரொன்று . . . . . வாழ்வு.

**சிறப்புத்தனியன்—உரை**

ப்ராசீக்ருத்ய விமுக்திஸௌதபதவீஸோபாநஸம்ஜ்ஞம்
ஶாரீரார்ணவரத்நஜாதமிஹ ய: ப்ராகாஶயத் ஸர்வஶ: |
தஸ்மிம்ஸ்திஷ்டதி வேங்கடேஶகவயே ஸ்ரீபாஷ்யகாரோபமே
யம் கஞ்சித் புருஷம் ஹ்யுபாஸிதுமயே மா ஸ்ம மந: ஸ்வஸ்தி தே ||

அயே மந: - ஓ மனமே! ய: - எவர், விமுக்திஸௌதபதவீஸோபாநஸம்ஜ்ஞம் - மோக்ஷமாகிய மேன்மாடத்திற்கு ஏறும் படிகளாக கூறுவதை, ப்ராசீக்ருத்ய - சாரமாகக்கொண்டு, இஹ - இப்பூமியில், ஶாரீரார்ணவரத்நஜாதம் - கடலைப்போன்ற வேதாந்த சாஸ்த்ரங்களின் அர்த்தமாகிய ரத்நக்குவியலை, ஸர்வஶ: - முழுவதும், ப்ராகாஶயத் - (பரமபதஸோபானமென்னும் க்ரந்தத்தின் மூலமாய்) வெளியிட்டாரோ, தஸ்மிந் - அந்த, ஸ்ரீபாஷ்யகாரோபமே - ஸ்ரீபாஷ்யகாரரை ஒத்தவரான, வேங்கடேஶகவயே - ஸ்ரீவேதாந்த தேசிகன் என்னும் மஹாகவி, திஷ்டதி - ப்ரகாசிக்கும்பொழுது, யம் கஞ்சித் புருஷம் ஹி - வேறு ஒரு அற்பமனிதனை, உபாஸிதும் - பூஜிப்பதற்கு, மா ஸ்ம: - போகாதே (முயலாதிரு), (அவ்வாறு இருந்தால்) தே - உனக்கு, ஸ்வஸ்தி - மங்களம் (உண்டாகும்.)

தஸ்மை நமோऽஸ்து குரவே தாத்ருஶவிபவாய வேங்கடேஶாய |
ப்ராவர்த்தயஜ்ஜநாநாம் இஹைவ வைகுண்டஸௌதஸோபாநம் ||

(ய: - எவர்), இஹைவ - இப் பூமியிலேயே, ஜநாநாம் - ஜனங்களுக்கு, வைகுண்டஸௌதஸோபாநம் - பரமபதமாகிய மேன்மாளி

கைக்குச் செல்லும் படிகளை (வெளியிடும் இப்பிரபந்தத்தை), ப்ரா வர்த்தயத் - வெளியிட்டாரோ, தாத்ருஶவிஶ்வாய - அவ்வளவு பெருமைவாய்ந்த, தஸ்மை - அந்த, வேங்கடேஶாய - வேதாந்த தேசிகனென்னும், குரவே - ஆசார்யனுக்கு, நம: கக்ஷா - (நம) வணக்கம் சேரக்கடவது

தேனேறு தாமரையா டிருமார் பன்றன்
திண்ணருளா லவனடியில் விவேகம் பெற்றிங்
கூனேறு பவக்குழியை வெறுத்த தற்பி
னூர்விரத்தி யுடன்வினையின் றிரளுக் கஞ்சிக்
கூனேறு பிறையிறையோன் சாபந் தீர்த்தான்
றுரைகழலே சரணடைந்து தூம்பை விட்டு
வானேறும் வழிப்படிக ளடைவே கண்ட
வண்புகழ்த்தூப் புல்வள்ள லருள்பெற் றேமே.

தேன் ஏறு தாமரையாள் — தேன் நிறைந்த தாமரைப் பூவில் வசிக்கும் பிராட்டியை, திருமார்பன்றன் — திருமார்பில் உடையவனான எம்பெருமானுடைய, திண் அருளால் — வலிய கருபையினால், அவன் அடியில் விவேகம் பெற்று — அவனுடைய திருவடிகளில் நல்ல ஜ்ஞானத்தைப் பெற்று, இங்கு — இப்பூமியில், ஊன் ஏறு பவக் குழியை — சரீரத்தையே வருத்தி செய்கிற ஸம்ஸாரமாகிய படுகுழியை, வெறுத்ததற்பின் — வெறுத்துத் தள்ளிய பின், ஊர் விரத்தியுடன் — பரவுகிற வைராக்யத்துடன், வினையின் திரளுக்கு அஞ்சி — பாபக் கூட்டத்தால் வரும் பலனுக்குப் பயந்து, கூன் ஏறு — வளைவு நிறைந்த, பிறை இறையோன்— சந்த்ரகலையைத் தரித்த சிவனுடைய, சாபம் தீர்த்தான் — சாபத்தைப் போக்கிய எம்பெருமானுடைய, துரை கழலே சரண் அடைந்து — (சதங்கை) ஒலிக்கின்ற திருவடிகளையே சரணமாகப் பற்றி, தூம்பை விட்டு — சரீரத்தை விட்டு, வான் ஏறும் வழிப் படிகள் — பரமபதத்திற்கு ஏறும் வழிகளின் படிகளை, அடைவே கண்ட — வரிசையாகக் கண்டறிந்து வெளியிட்ட, வண் புகழ் — சிறந்த புகழையுடைய, தூப்புல் வள்ளல் — தூப்புலில் அவதரித்த தாநசீலரான தேசிகனுடைய, அருள் பெற்றேம்— கருபையைப் பெற்றோம்.

ஸ்ரீ:

*சீராராமப்புல திருவேங்கடமுடையான்திருவடிகளே சரணம்*

[விஷயச் சுருக்கம் — இந்தப் பிரபந்தத்தின் பெயரையே கொண்ட ஒரு ரஹஸ்யக்ரந்தத்தையும் மணிப்ரவாளநடையில் அருளிச்செய்திருக்கிறார் நம் தேசிகன். அதிலடங்கிய பாசுரங்களைத் தொகுத்ததால் இப் பிரபந்தம் தோன்றியது. மிக்க உயரத்திலமைந்துள்ள ஓர் இடத்தை அடைவதற்குப் படிகளை அமைத்து ஏறிச்செல்லுதல் உலகமுறையாகும் பரமபதமென்னும் மிக உயர்ந்த ஸ்தாநத்தை அடைவதற்கு ஒன்பது விஷயங்களைப் படிகளாகக் கற்பித்து இப்பிரபந்தத்தில் விளக்குகிறார் ஆதலின் இதற்கு இப் பெயர் வந்தது (ஸோபாநம்—படி)

இங்குக் கூறிய * 9-படிகளாவன — (1) தத்துவங்கள் முதலியவற்றை வகுத்து அறிதல் (2) மனந்தளர்தல் (3) உலகஸுகங்களில் ஆசையறுதல் (4) தன் பாபங்களின் மிகுதியால் இனி வரக்கிடக்கும் நரகாநுபவம் முதலிய துன்பங்களுக்கு அஞ்சுதல் (5) எம்பெருமான் மோக்ஷத்தை அருள்வதற்குக் காரணமான உபாயங்களை அநுஷ்டித்தல் (6) இச் சரீரத்திலிருந்து ஜீவன் வெளியேறுதல் (7) அர்ச்சிராதிமார்க்கத்தால் செல்லுதல் (8) ஸ்ரீவைகுண்டமென்னும் திவ்யலோகத்தைச் சேர்தல் (9) அந்த ஸர்வேச்வரனைக் கண்ணாரக் கண்டு களித்து அனுபவித்து அந்த ஆநந்தத்திலேயே மூழ்கிக் கிடத்தல் இந்த 9- விஷயங்களையும் இப் பிரபந்தத்தில் சுருக்கியும், ரஹஸ்யத்தில் மிக விரித்தும் அருளியிருக்கிறார்]

*கட்டளைக்கலித்துறை*

133 அடற்புள் ளரசினு மந்தணர் மாட்டினு மின்னமுதக்
கடற்பள்ளி தன்னினுங் காவிரி யுள்ள முகந்தபிரா
னிடைப்பிள்ளை யாகி யுரைத்த துரைக்கு மெதிவாரர்
மடைப்பள்ளி வந்த மணமெங்கள் வார்த்தையுண் மன்னியதே.

[ *பொதுப்பாசுரம்* ]

உரை — அடல் புள் அரசினும் — *பலமுடைய பக்ஷிகளுக்கு அரசனாகிய கருடனிடத்திற்காட்டிலும*, † அந்தணர் மாட்டினும் — *ப்ராஹ்மணா*

* விவேகநிர்வேதவிரக்திபீதய: ப்ரஸாதஹேதூத்க்ரமணார்ச்சிராதய: । ப்ரக்ருத்யதிக்ராந்தபதாதிரோஹணம் பராப்திரித்யத்ர பவந்தி பர்வணா: ॥

† ப்ராஹ்மணாநாம் யதீநாம் வேத:

*களின் தநமாகிய வேதவேதாநதஙகளிடததிறகாட்டிலும், இன் அமுதக் கடல் பள்ளி தன்னினும் — இனிய அமுதமாகிய பிராட்டி அவதரிதத திருப் பாறகடலாகிய படுககையிடததிறகாட்டிலும, காவிரி — காவிரிக கரையி லுள்ள ஸ்ரீரங்கம முதலிய திவயதேசஙகளில, உள்ளம் உகந்த பிரான் — மனம மிக மகிழநது எழுநதருளியுளள எமபெருமான, இடைப்பிள்ளை ஆகி — இடைசசிறுவனுய அவதரிதது, உரைத்தது — வெளியிடட பகவத கீதையின தாதபாயததையே, உரைக்கும் — தம பாஷயஙகளில விளககிய வரான, எதிவரனுர் — யதிகளுள சிறநத ஸ்ரீபாஷயகாரருடைய, மடைப் பள்ளி வந்த மணம்— திருமடைப்பளளி வழியாக வீசிய வாஸனை, எங்கள் வார்த்தையுள் — யாம வெளியிடும க்ரநதஙகளுள், மன்னியது — பொருநதி யுளளது*

*ஸ்ரீபாஷயகாரருடைய திருமடைபபளளியில அநதரஙககைஙகா யம செயதுவநது அவரிடமே ஸகலாததஙகளையும கறறறிநத கடாம்பி யாச்சான வழியாக நம ஸம்ப்ரதாயம வநது தழைததோஙகுவதால "மடைப் பளளிவநத மணம" எனனபபட்டது*

*உணணககடவ உயாநத பணடஙகளைச சேமிததுத திருமடைப்பள ளியில வைதது அனைவருககும வழஙகுமாறுபோலே கறறறிநது அநுபவிகக வேண்டிய வேதாநதத்தின ரஹஸயாாததஙகளையெலலாம ஸ்ரீபாஷயகாரா கடாமபியாசசானுககு உபதேசிதது, அவாமுகமாய உலகுககு வழஙகச செய்தபடியால அவருககு மடைப்பளளியாசசானெனத திருநாமம வநதது எனறும கூறுவா பெரியோா*

கருதது — *ஸ்ரீபாஷயகாரரிடமிருநது கடாமபியாசசான வழியாக வநத ஸமபரதாயம பெருமைபெறறதாகும* 1

இனி 2-பாசுரங்களால் முதற்படியாகிய விவேகம் விளக்கப்படுகின்றது—

134 கள்ள மனத்துடன் கண்டு முயன்ற கடுவினையா
னள்ளிரு ளாழியி னற்சுவை யைந்தென நாடியவோ
ரள்ளலி னூனும் விழுந்தழி யாவகை யாரணநூல்
வள்ளல் வழங்கிய வான்படி யான வழியிதுவே. 2

*[ பாசுரம 2, 3— விவேகபாவம ]*

உரை — கள்ளமனத்துடன் — *திருட்டுததனமை நிறைநத மனஸ் ஸினுல,* கண்டு — *(தததுவஙகளை விபரீதமாய) அறிநது,* முயன்ற கடு வினை யால் — *செய்த கொடிய காமஙகளால,* நள் இருள் ஆழியில் — *அடாநத (அஜ்ஞானமென்னும) இருளாகிய கடலில,* ஐந்து நல் சுவை என — *(ரூபம,*

ரஸம, கநதம, ஸபாசம, சபதம எனனும) ஐநதும நலல ஸாரஙகள எனறு நினைதது, நாடிய ஓர் அள்ளலில் – (நமமால) தேடபபடட ஒரு பெருஞ சேறறில, நாளும் – எபபொழுதும, விழுந்து அழியாவகை – (நாம) விழுநது அழிநதுபோகாமலிருககுமபடி, வள்ளல் – (ஸகலாததஙகளையும் வெளியிடுதலால) கொடையிற சிறநத, ஆரணநூல் – வேதவேதாநதஙகளில, வழங்கிய – உபதேசிககபபடடதும, வான்படியான – பரமபதததிறகு(முதற) படியாயுளளதுமான, வழி – மாாககம, இதுவே – இநதப பாவததிற கூறபபடட விவேகமே 2

எணசீராசிரியவிருததம

135 அருவுருவா னவையனைத்து மறிவா ரேனு
மருங்கலைகள் கற்றுரைக்க வல்லா ரேனுந்
தருமவழி யழியாமற் காப்பா ரேனுந்
தனிமறையின் றற்பரியந் தருவா ரேனு
மிருவினையி னொழுக்கத்தா லேவ லோரா
திங்கேநாஞ் சிறையிருந்த வீனந் தீர்க்குந்
திருமகளார் பிரியாத தேவன் றிண்ணந்
தேறுதார் திண்படியி லேறு தாரே. 3

உரை — அரு உரு ஆனவை – உருவமிலலாத சேதநம ஸதூலமான அசேதநம ஆகிய, அனைத்தும் அறிவாரேனும் – ஸகலபதாாததஙகளையும் அறிநதவரேயானாலும, அரும் கலைகள் கற்று – அருமையான கலவியைத தாம கறறு, உரைக்க வல்லாரேனும் – (பிறருககும) உபதேசிக்க ஆறறலுடையவரேயாயினும, தரும வழி அழியாமல் – தாமமாாக்கம அழியாமல், காப்பாரேனும்–(அதனபடி) அநுஷடிபபவாகளேயானாலும, தனி மறையின்– ஒப்பறற வேதததின, தாற்பரியம் தருவாரேனும் – ஸாராாத்தததைப் பிறருககுப போதிபபவரேயானாலும, இரு வினையின் ஒழுக்கத்தால் – (புணயம் பாபம எனனும) இரணடு காமஙகளின மாாக்கததில நடததலால, ஏவல் ஓராது – (நாம் செயயவேண்டிய) கைஙகாயததைபபறறி ஆராயாமல, இங்கே நாம் சிறையிருந்த – இநத ஸமஸாரததில நாம் சிறையிருநததமையாகிய, ஈனம் தீர்க்கும் – தாழவைப் போககுகினற, திருமகளார் பிரியாத – பிராட்டியால பிரியபபடாதவனை, தேவன் திண்ணம் தேறுதார் – எமபெருமானுடைய உறுதியைத தெளிநதுகொளளாதவா, திண் படியில் ஏறுதார் – (மோக்ஷததிற் கொண்டு சோககும்) திடமான படியில ஏறமாட்டாாகள.

கருத்து — (பா-2,3-) எவ்வளவு ஜ்ஞானமுள்ளவனாயி னும், எம்பெருமானுடைய நிலையை *அறிபவனே மோக்ஷத்தின் படியைக் கடக்கமுடியும்.* 3

இனி 2 பாசுரங்களால், இதுவரை வீணே காலம் கழிந்தமையை எண்ணி மனந்தளர்தல் என்னும் 2-வது படி விளக்கப்படுகின்றது.—

*கட்டளைக்கலித்துறை*

136 மறுத்தார் திருவுடன் மார்பிற் றரித்தவன் வாசகத்தை
மறுத்தார் மயக்கமு மற்றத னல்வந்த மாநரகு
நிறுத்தார் பவத்தி னெடுநா ளுழன்றமை கண்டதனுல்
வெறுத்தா ரணநெறி யேவெள்கி யோட விரைவர்களே. 4

[ *பாசுரம் 4, 5— நிர்வேதபாவம்* ]

உரை — மறு—(ஸ்ரீவத்ஸமென்னும்) *மறுவையும்,* தார்—(வைஜயந்தி என்னும்) *மாலையையும்,* திருவுடன் — *பிராட்டியுடன்,* மார்பில் தரித்தவன் — *தன் திருமார்பில் தரித்தவனான எம்பெருமானுடைய,* வாசகத்தை — (கீதை முதலிய) *உபதேசத்தை,* மறுத்தார் — *மீறி நடப்பவர்களுடைய,* மயக்கமும் — *அஜ்ஞானத்தையும்,* மற்று — *மேலும்,* அதனால் வந்த மா நரகும் — *அந்த அஜ்ஞானத்தால் வந்த பெரிய நரகங்களையும்,* நிறுத்து — *ஆராய்ந்து பார்த்து,* ஆர் பவத்தில் — *நிறைந்த ஸம்ஸாரத்தில்,* நெடுநாள் உழன்றமை கண்டு — *வெகுகாலம் வருந்தியது கண்டு,* அதனால் வெறுத்து — *அதனால் (ஸம்ஸாரத்தில்) வெறுப்படைந்து,* வெள்கி — *(இதுவரையில் தாம் நடந்ததற்கு) வெட்கமடைந்து,* ஆரணநெறியே ஓட — *வேதத்திற் கூறப்பட்ட உபாயத்தை அநுஷ்டிக்க,* விரைவர்கள்— *(விவேகிகள்) விரைவில் முற்படுவர்.*

*எண்சீராசிரியவிருத்தம்*

137 வான்பட்ட மன்னிருளின் மயங்கி மாறு
மறித்தோருகா லேனையூழி சென்று லன்றே
நுன்பட்ட வுடலாழி வினையோ மூக்கி
லோருகரையுங் காணாதே யொழுது மாறுந்
தேன்பட்ட விடம்போலத் தித்திக் கின்ற
சிறுபயனே யுறுபயனென் றருந்து மாறுந்
தான்பட்ட படியிந்நேர் தானே கண்டு
தளர்ந்திடுமேல் வளர்ந்திடுமே தக்க வாறே. 5

உரை — (விவேகம பெற்ற சேதநன) வான் பட்ட — ப்ரக்ருதியின ஸமபநதத்தால உணடான, மன் இருளில் — வலிய (அஜ்ஞாநமாகிய) இருளில, மயங்குமாறும் — திகைத்திருக்கும நிலைமையையும, ஊன ஊழி சென்றால் — (இப்படியே) எவவளவோ யுகஙகள கழிநதபிறகு, அன்று — ஸ்ருஷ்டிகாலததில, மறித்து ஒரு கால் — மறுபடியும ஒருமுறை, ஊன் பட்ட உடல் — மாமஸம சோநத உடலைத தருகினற, ஓர் வினை ஆழி ஒழுக்கில் — ஒப்பற்ற காமஙகளாகிய ஸமுதரததின வெளளத்தில, ஒரு கரையும் காணுதே — ஒரு கரையையும காணமுடியாமல், ஒழுகுமாறும் — செனறுழலும நிலைமையையும, தேன் பட்ட விடம்போல — தேனுடன கலநத விஷததைபபோல, தித்திக்கின்ற — (ஸதூலமாயப பாரததால) ஸுகமாகத தோனறுகின்ற, சிறு பயனே —அற்ப பலன்களையே, உறு பயன் என்று — பெரிய பலனெனறு, அருந்துமாறும் — அநுபவிக்கும வகையையும, இந் நேர்— இவவாறே, தான் பட்ட படி— தான் அநுபவிககும் பரகாரஙகளையும, தானே கண்டு தளர்ந்திடுமேல் — தானே பாரதது மனம தளாநதால, தக்க ஆறு வளர்ந்திடுமே — தன ஸவருபததிறகுத) தக்க உபாயம வருததியாகும் (அநுஷ்டிககப்பெறும).

கருத்து — (பா- 4, 5-) ஸமஸாரததில உளள துனபஙகளைக கணடவா, **மனம் தளர்ந்து** உபாயததை அநுஷ்டிபபா. 5

இனி 2 பாசுரங்களால், ஸம்ஸாரத்தில் ஆசையறுதல் என்னும் 3-வது படி விளக்கப்படுகின்றது.—

கட்டளைககலிததுறை

138 உலகத் துயர்ந்தவ ரொன்றும் பயனி லுறுந்துயரு
மலகிற் படாதவப் போகங் கவர்ந்தெழு மம்புயத்தோன்
கலகத் தொழின்மது கைடப ராற்படுங் கட்டமெண்ணிற்
பலகற்ற மெய்யடி யார்படி யாரிக் கடும்பவத்தே. 6

[ பாசுரம 6, 7— விரக்திபாவம ]

உரை.— உலகத்து உயர்ந்தவர் ஒன்றும் பயனில் — உலகததில உயாந்தவாகள ஈடுபட்டு அநுபவிக்கின்ற பலனில, உறும் துயரும்— (நடுவே) வரும் துனபததையும், அலகில் படாத — அளவில அகபபடாத, அப் போகம் கவர்ந்து — பரஹமலோகஸுகததை அநுபவிதது, எழும் அம்புயத்தோன் — உயாநதிருப்பவனும் தாமரையில இருப்பவனுமாகிய பரஹமதேவன, கலகத் தொழில் மது கைடபரால்— சணடையையே தொழிலாகக் கொணட மது, கைடபன் என்னும் அஸுராகளால, படும் கட்டம்

எண்ணில் — படுகின்ற கஷ்டங்களையும நினைததுப்பாராததால, பல கற்ற மெய் அடியார் — பல நூல்களையும கறற உணமையான அடியாாகள் (பாக வதா), இக் கடும் பவத்து — இநதக் கொடிய ஸமஸாரததில், படியார் — ஈடுபடமாட்டாாகள.

முன, மது—கைடபன என்னும அஸுராாகள பாஹமாவினிடமிருநது வேதஙகளை அபஹரிததுச சென்றதால ப்ரஹமா செயலறறு எம்பெருமானிடம புலமப, அவனும அவ்வஸுராகளைக் கொனறு வேதத்தை மீட்டுக் கொடுத்தானென்ற வரலாறு 3-வது அடியிற கூறப்பட்டது. 6

எண்சீராசிரியவிருததம

139 தந்திரங்க ளளவிலராய்த் தனத்தான் மிக்க
தார்வேந்தர் தொழவைய மாண்டார் மாண்டார்
சந்திரனுஞ் சூரியனும் வீயுங் காலந்
தாரகையின் வடமுமற்றுத் தனிவா னாளு
மிந்திரனு மேறுயர்த்த வீசன் றானு
மீரிரண்டு முகத்தானு மில்லா வந்நா
ணந்திருமா னிலைகண்டார் நாக மெல்லா
நாகென்று நற்பதமே நாடு வாரே. 7

உரை — தந்திரங்கள் அளவிலராய் — சேனையை அளவில்லாது பெறறவாகளாய், தனத்தால் மிக்க தார் வேந்தர் தொழ — செலவததால் பெரியராய் மாலையைத்தரித்தவர்களான அரசாகள (தமமை வநது) வணங்குமபடி, வையம் ஆண்டார் — உலகத்தை ஆண்டவா (களான மநு, மாநதாதா முதலியவா) கள், மாண்டார் — இறநதொழிநதனா, தாரகையின் வடமும் அற்று — நக்ஷத்ரஙகளின் வரிசையும அழிநது, சந்திரனும் சூரியனும் வீயும் காலம் — சநதரனும ஸூாயனும அழியுஙகாலமாகிய, வான் தனி ஆளும் இந்திரனும் — ஸ்வாக்கலோகததை ஒருவனாய் ஆள்கினற தேவேநதரனும், ஏறு உயர்த்த ஈசன்தானும் — காளையைக கொடியாக உயாதத சிவனும, ஈர் இரண்டு முகத்தானும்— நானகு முகமுடைய ப்ரஹமாவும், இல்லா அந்நாள் — இலலாமற்போன அந்த (மஹாப்ரளய) காலததில, நம் திருமால் நிலை கண்டார்— நம் எம்பெருமானது ஸ்தாநமாகிய பரமபதத் (தின ஸவ பாவத்)தை அறிந்தவாகள, நாகம் எல்லாம் — (ப்ரஹ்மலோகம் வரையில் உளள) தேவலோகஙகளை எல்லாம், நரகு என்று — பரமபததநோடு ஆராயுமபோது) நரக (த்திற்கு ஸம) மென்று (நினைத்து), நல் பதமே நாடுவார் — சிறநத ஸதாநமாகிய ஸ்ரீவைகுண்டத்தைப் பெறவே விரும்புவாாகள்.

காலம (ஆகிய), இலலா, அந்நாள் எனறு அந்வயித்துககொளக.

கருத்து — (பா- 6, 7-) பரமபதம தவிர ஸகலலோகஙக ளும அழியுநதன்மையை அறிநதவனுககு ஸமஸாரததில ஆசை ஒழிந்துபோம 7

இனி 2 பாசுரங்களால், வரப்போதும் கர்மபலாநுபவத்திற்கு அஞ்சுதல் என்னும் 4-வது படி விளக்கப்படுகின்றது.—

கட்டளைககலிததுறை

140 துறவற மேதுணி வார்துணுக் கற்ற விளந்துணிவோ
நுறவில ராதலி னுழயர்ந் தாருட னொன்றிநின்றே
மறவழி மாற்றியெம் மையலைத் தீர்த்தவர் மன்னருளாற்
கறவை யுகந்த பிரான்கழல் சூடுங் கருத்தினமே. 8

[ பாசுரம 8, 9— பிதிபாவம ]

உரை — துறவறமே — (ஸமஸாரபந்ததனத நீககுவதறகாகச் செய்யும) நிவ்ருததிதாமஙகளையே, துணிவார் — (சிறநததாகத) துணிநது பற்றுமவா, துணுக்கு அற்ற — ஸமஸாரபயம இலலாத, இளம் துணிவோர்— முதிராத நிச்சயததையுடையவாகளோடு, உறவு இலர்— ஸமபநதம கொளள மாட்டாாகள. ஆதலின் — ஆதலால், நாம் உயர்ந்தாருடன் — நாம (அவவாறு செய்யாது) சிறநதவரான, பாகவதருடன, ஒன்றி நின்றேம் — கலந்து நிற்கின்றேம். மறவழி மாற்றி — (நமமைப) பாபவழியிலிருநது விலக்கி, எம் மையலைத் தீர்த்தவர் — எமமுடைய அஜஞாநததைப போககிய ஆசாாயாகளின், மன் அருளால் — வலிய கருணையால, கறவை உகந்த பிரான்— பசுக்களிடம மகிழ்ச்சிகொண்ட எம்பெருமானுடைய, கழல் சூடும் கருத்தினம் — திருவடிகளைச் சூடிக் கைங்காயமசெயயும உறுதியுடையராவோம. 8

எண்சீராசிரியவிருததம

141 வந்தனபோல் வருவனவு மனந்த மாகி
மாளாத துயர்தருவல் வினைநே நுப்புக்
கிந்தனமா யெண்ணிறந்த கால மெல்லா
மின்னழமிப் பவக்குழிக்கே யிழியா வண்ணம்
வெந்ததொரு துழவியைநற் றுமா னுக்கும்
வெறித்துளவ வித்தகனர் விதியே கொண்டார்
பந்தனமா மவையனைத்தும் பாறு கைக்குப்
பழமறையின் பரமநெறி பயிலு வாரே. 9

உரை — வந்தனபோல் — (இதுவரை) வந்த துக்கங்களைப்போல், வருவனவும் — இனி வரப்போகும் துக்கங்களும், அனந்தமாகி — எல்லையற்றனவாகி, மாளாத — அழியாத, துயர் தரு — துக்கத்தைத் தருகின்ற, வல்வினை — வலிய கர்மங்களாகிய, நெருப்புக்கு — அக்னிக்கு, இந்தனமாய் — விறகாய் நின்று, இன்னமும் — இன்னமும், எண்ணிறந்த காலம் எல்லாம் — அளவில்லாத காலம் முழுதும், இப் பவக் குழிக்கே — இந்த ஸம்ஸாரமாகிய படுகுழியிலேயே, இழியா வண்ணம் — விழுந்து துன்புறாதபடி (நினைந்து), வெந்தது ஒரு குழவியை — வெந்து கருகிய ஒரு குழந்தையை, நல் குமாரனுக்கும் — அழகிய சிறுவனாக்கிய வரும், வெறித் துளவ வித்தகனார் — மணமுள்ள திருத்துழாயை அணிந்த அதிசயச்செய்கையையுடையவருமான பகவானுடைய, விதியே கொண்டார் — ("பக்தியோகம் செய்" "ப்ரபத்திசெய்" என்ற) கட்டளைகளையே (சிறந்தனவாகப்) பற்றிய சேதநர்கள், பந்தனமாம் அவையனைத்தும் — (ஸம்ஸாரத்திலேயே) பிணிக்கும் அந்தக்கர்மங்கள் முழுதும், பாறுகைக்கு — அழிவதற்கு, பழமறையின் — அநாதியான வேதத்திற்கூறிய, பரமநெறி — சிறந்த (பக்தி-ப்ரபத்தியாகிய) உபாயங்களில், பயிலுவார்— ஈடுபடுவார்கள்.

பாரதயுத்தத்தில் த்ரோணருடைய புத்திரனான அச்வத்தாமனால் ப்ரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்த்ரத்தால் உத்தரையின் கர்ப்பத்தில் வெந்து கரியாகிய குழந்தையை ஸ்ரீ க்ருஷ்ணன், பரீக்ஷித் என்னும் அழகிய ராஜகுமாரனாக்கிய வரலாறு மூன்றாமடியிற் கூறப்பட்டது.

கருத்து — (பா. 8, 9.) விவேகிகள் ஸம்ஸார துக்கத்திற்கு அஞ்சித் தம்மைக் காக்க முற்படுவர். 9

இனி 2 பாசுரங்களால், உபாயத்தை அநுஷ்டித்தல் என்னும் 5-வது படி விளக்கப்படுகின்றது —

கட்டளைக்கலித்துறை

142 கருமா லையில்வருங் கட்டங் கழிக்குங் கருத்துடையா
ரொருமால் பெருகு முயோகின் முயன்றும தன்றியுநந்
திருமா லடியிணை திண்சர ணாகு மெனவரித்துந்
தருமா லினியவை தானே யெனத்தக வெண்ணுவரே 10

[ பாசுரம் 10, 11— ப்ரஸாதநபாவம் ]

உரை — கருமாலையில் வரும் கட்டம் — கர்ப்பவரிசையில் (இருப்பதால்) வருகின்ற கஷ்டத்தை, கழிக்கும் கருத்துடையார் — நீக்கும் நினைவுடைய பாகவதர்கள், ஒரு மால் பெருகும் — ஒப்பற்ற பக்தி வ்ருத்தி

யாககககூடிய, உயோகில் முயன்றும் — பக்தியோகததில முயனறுகொண டும, அது அன்றியும் — அது தவிர (அதில சகதியிலலாதவாகள), நம் திரு மால் அடியிணை — நமமுடைய எமபெருமானுடைய திருவடிகள இரணடை யும, திண் சரண் ஆதும் — திடமான உபாயமாகும, என வரித்தும் — எனறு (நினைத்து அவறறில) ப்ரபததிசெய்தும, மால் — எம்பெருமான், இனி யவை — (வரப்போகும) நன்மைகளை, தானே தரும் என—தானே தருவான் என்று உறுதிகொணடவராய, தகவு—(அவன) க்ருபையையே, எண்ணுவர்— எதிர்பாாததிருப்பா

கருத்து·— ஸமஸாரதுககததை அறிநதவா பகதி-பரபததி களில தஙகளுககு ஏறற **உபாயத்தை அநுஷ்டிப்பர்.** 10

எண்சீராசிரியவிருத்தம்

143 முன்செய்த வினைத்திரளின் முளைத்த தன்றி
முற்றுள்ள முதலரிந்து முளைத்த கூற்றிற்
றன்செய்ய திருவருளா லிசைவு பார்த்துத்
தழல்சேர்ந்த தூலமெனத் தானே தீர்த்துப்
பின்செய்த வினையினினை வொன்று தோன்றும்
பிழைபொறுத்து வேறுளது விரகான் மாற்று
மென்செய்ய தாமரைக்கட் பெருமா னென்னை
மெண்ணுதா ரெட்டிரண்டு மெண்ணு தாரே 11

உரை·— முன் செய்த வினைத்திரளில் — முன்பு செய்த பாபக்கூட டத்தில், முளைத்தது அன்றி — பலன்கொடுக்கத் தொடங்கிய பாபம தவிர, உள்ள முதல் — (கைம்முதலாக) உள்ள பாபங்களை, முற்று அரிந்து — முழு தும போக்கி, முளைத்த கூற்றில் — பலன்கொடுக்கததொடஙகிய பாகத தில, இசைவு பார்த்து — (ப்ரபந்நனுடைய) அஙகீகாரததை எதிர்பாாதது (அவன விருமபிய காலத்தில), தன் செய்ய திரு அருளால் — தன்னுடைய ருஜுவான சிறந்த க்ருபையால, தழல் சேர்ந்த தூலம் என — அகநியில சோந்த பஞ்சு என்னுமபடி, தானே தீர்த்து — தானே போக்கி, பின் செய்த வினையில் — (ப்ரபத்திக்குப) பிறகு செய்யும் பாபங்களில், நினைவு ஒன்றது ஒன்றும் — அறிவு இல்லாமல் (தெரியாமல) நேர்ந்தற, பிழை பொறுத்து — பாபங்களைப் பொறுதது, வேறு உளது — தெரிநது செயய வேண்டியதாய்த் நேர்நத குறறத்தை, விரகால் மாற்றும் — ப்ராயச்சிததம முதலியவற்றில மூட்டிப் போக்குபவனை, செய்ய தாமரைக் கண்— சிவந்த தாமரைபோன்ற கண்களையுடைய, என் பெருமான் — எனக்கு நாதனை

ஸர்வேச்வரனுடைய, எண்ணம் எண்ணதார் — திருவுள்ளத்தின் போக்கை அறியாத மானிடா, எட்டு இரண்டும் எண்ணதார் — திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகமென்னும் ரஹஸ்யத்ரயத்தை அறியாதவர்களே.

* சேதநனுடைய கர்மங்கள் (1) ப்ராரப்தம் (2) ஸஞ்சிதம் என இருவகைப்படும். பலன் கொடுக்கத்தொடங்கிய கர்மம் ப்ராரப்தம் எனப்படும். பின் ஒரு காலத்தில் பலன் கொடுப்பதற்காகத் தனியாயக் குவிந்து மூட்டையாயிருப்பது ஸஞ்சிதமெனப்படும். பக்தியோகம் ஸஞ்சிதகர்மங்களை மாத்ரம் போக்கும். ப்ரபத்தி, ஸஞ்சிதகர்மங்களைப் போக்கி, ப்ராரப்தத்தில் நாம் இந்தச் சரீரம் உள்ளவரை பலனை அநுபவிக்கவேண்டிய கர்மங்களைத் தவிர மீதியுள்ளவற்றையும் போக்கிவிடுகின்றது, ப்ரபத்திக்குப் பிறகு அறியாமல் செய்யும் பாபங்களை இவனிடம் சேராதபடி நீக்கிவிடுகின்றது, காலதேசங்களைக்கொண்டு மனப்பூர்வமாகச் செய்யும்படி நேர்ந்த பாபங்களையும் ப்ராயச்சித்தாதிகளைக்கொண்டு ஒழித்துவிடுகின்றது. (மனப்பூர்வமாயச் செய்யும் பாபங்கள் நீங்கும் வகையை 64-வது பாசுர வுரையிற் காண்க) இச்சரீரம் உள்ளவரையிலும் உள்ள விளம்பத்தைக் கூடப் பொறுக்காது உடனே முக்தி வேண்டுமெனபவனுக்கு உடனேயே ஸகல கர்மங்களையும் போக்கிப் பலனைத் தருகின்றது. என்னே ப்ரபத்தியின் பெருமை!' இத்தகைய பெருமை பக்தியோகத்திற்கு இல்லை.

கருத்து — உபாயத்தை அநுஷ்டித்தவனுடைய ஸகல கர்மங்களையும் எம்பெருமான் நீக்குவான். 11

இனி 2 பாசுரங்களால், ஜீவன் சரீரத்திலிருந்து வெளியேறுதல் என்னும் 6-வது படி விளக்கப்படுகின்றது —

*கட்டளைக்கலித்துறை*

144 உறையிட்ட வாளென வூனு ளுறையு முயோகியரை
நறைமட் டொழிவற்ற நற்றுள வேந்திய நாயகன்று
னிறைமட் டிலாத நெடும்பயன் காட்ட நினைந்துடலச்
சிறைவெட்டி விட்டு வழிப்படுத் தும்வகை செய்திடுமே. 12

[ பாசுரம் 12, 13— உத்க்ராந்திபாவம் ]

---

* ப்ராரப்தேதரபூர்வபாபமகிலம் ப்ராமாதிகம் சோத்தரம்
ந்யாஸேந க்ஷபயந்நஸஹ்யமபரம் ப்ராயச்சித்தேந ந: ।
தீவ்ரம் ப்ராரப்தமநந்யநாஜ்ஞாதேவீ கணிஷ்யதே:
கஷ்டிஷ்டே ஸதி சிக்ஷயா வ்யநயந்து கோபாகலோதிஹ்ஸர: ॥

உரை — நறை மட்டு ஒழிவற்ற — *வாஸனையுள்ள தேன் நீங்காத,* நல் துளவு—*சிறந்த திருத்துழாய்மாலையை,* ஏந்திய நாயகன்தான் — *தரித்த ஸர்வேச்வரன்,* உறையிட்ட வாள் என — *உறையிற் செருகிய கத்தி என னும்படி,* ஊனுள் உறையும் உயோகியரை — *சரீரத்திற்குள் வசிக்கும (பக்தர் ப்ரபந்நர் என்ற) யோகிகளை,* மட்டு இலாத நிறை — *எல்லையில்லாத பெருமையையுடைய,* நெடும் பயன் — *பெரிய பலனாகிய மோக்ஷத்தை,* காட்ட நினைந்து — *அநுபவிக்கச்செய்யத் திருவுள்ளங்கொண்டு,* உடலச் சிறை வெட்டி விட்டு — *சரீரமாகிய சிறையை ஒழித்து,* வழிப்படுத்தும் வகை — *பயணப்படுத்துவதாகிய ப்ரகாரத்தை,* செய்திடும் — *செய்திடுவான்.*

*எண்சீராசிரியவிருத்தம்*

145 * முன்கருவி யீரைந்து மனத்திற் கூட்டி
முக்கியமா மருத்திலவை சேர்த்த தெல்லா
நன்குணரு முயிரினிற்சேர்த் தைம்பூ தத்தை
நண்ணுவித்துத் தான்றன்பால் வைக்கு நாத
னென்பதுடன் வாசலிரண் டுடைத்தா யுள்ளே
யொருகோடி துயர்விளைக்கு முடம்பா யொன்றும்
வன்சிறையின் றலைவாச றிறந்து நம்மை
வானேற வழிப்படுத்த மனமுற் றனே 13

உரை— முன் — *முதலில,* கருவி ஈர் ஐந்தும் — *(ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்து, கர்மேந்த்ரியங்கள் ஐந்து ஆக) இந்த்ரியங்கள் பத்தையும,* மனத்தில் கூட்டி — *மனஸ்ஸாகிய இந்த்ரியத்துடன் சேர்த்து,* அவை — *அந்தப் பதினொரு இந்த்ரியங்களையும,* முக்கியமாம் மருத்தில் சேர்த்து — *முகத்தில ஸஞ்சரிக்கின்ற ப்ராணவாயுவில சேர்த்து,* அது எல்லாம் — *அவையனைத்தையும்,* நன்கு உணரும் — *நன்ருய் அறியும் சக்தியுள்ள,* உயிரினில் சேர்த்து — *ஜீவாத்மாவில சேர்த்து (அந்த ஜீவாத்மாவை),* ஐம்பூதத்தை நண்ணுவித்து — *ஐந்துபூதங்களிடம் சேர்ப்பித்து (அந்த ஜீவாத்மாவின் களைப்பு நீங்குவதற்காக),* தான் தன்பால் வைக்கும் நாதன் — *தான் தன்னிடம வைத்து இளைப்பாறுவிக்கும ஸர்வேச்வரன,* ஒன்பதுடன் இரண்டு வாசல் உடைத்தாய் — *பதினொரு த்வாரங்களையுடையதாய,* உள்ளே ஒரு

* मनसि करणग्रामं प्राणे मनः [illegible] च तं
[illegible] ।
[illegible]
[illegible] ॥

கோடி துயர் விளைக்கும் — *உள்ளே கோடிக்கணக்கான துன்பங்களைத் தருகின்ற,* உடம்பாய் ஒன்றும் — *சரீரமாய* (ஜீவனோடு) *சேர்ந்திருக்கின்ற,* வன்சிறையின் — *வலிய சிறையின,* தலைவாசல் திறந்து— *முதலவாசலாகிய ப்ரஹ்மரந்த்ரத்தைத் திறந்து,* நம்மை வான் ஏற வழிப்படுத்த — *நம்மைப் பரமபதம் ஏற ப்ரயாணப்படுத்த,* மனமுற்றான் — *மனங்கொண்டான*

*ப்ராணவாயு, சரீரமும இந்த்ரியங்களும நிலைத்திருக்கக் காரணமாயிருத்தலால முதன்மைபெற்றிருப்பதுபற்றி முக்கியப்ராணனெனப் படுமென உபநிஷத்துக் கூறுகின்றது.*

ஜ்ஞாநேந்த்ரியம் ஐந்து—*செவி, வாய, கண, மூக்கு, உடல என்பன*

கர்மேந்த்ரியம் ஐந்து— *வாய, கை, கால, பாயு, உபஸ்தம என்பன*

ஒன்பது த்வாரம்— *கண* 2, *காது* 2, *மூக்கு* 2, *வாய்* 1, *மல த்வாரம* 1, *ஜலத்வாரம* 1 *என்பன.*

இரண்டு த்வாரம்— *நாபித்வாரம, உச்சித்வாரம (ப்ரஹ்மரந்த்ரம) என்பன*

கருத்து — *(பா 12, 13—) ஜீவாத்மாவை எம்பெருமான தானே இச்சரீரத்தினின்று வெளியேற்றுகின்றான* 13

இனி 2 பாசுரங்களால், அர்ச்சிராதிமார்க்கம் என்னும் 7—வது படி விளக்கப்படுகின்றது —

*கட்டளைக்கலித்துறை*

146 தெருளார் பிரம புரத்திறை சேர்ந்திடர் தீர்ந்தவர்தா
மருளார் பிரம புரச்சிறை தீர்ந்தபின் வந்தெதிர்கொண்
டருளா லமரர் நடத்தவிம் மாயை கடந்ததற்பின்
சுருளார் பவநா கச்சுழ லாற்றின் சுழற்சியிலே. 14

[ *பாசுரம* 14, 15— *அர்ச்சிராதிபாவம* ]

உரை — தெருள் ஆர் — *ஜ்ஞானம நிறைந்தவனும,* பிரமபுரத்து இறை சேர்ந்து — *சரீரத்தின் தலைவனுமான அந்தர்யாமியோடு சேர்ந்து,* இடர் தீர்ந்தவர் தாம் — *துன்பம நீங்கி(இளைப்பாறி)ய ஜீவர்கள,* மருள் ஆர் — *அஜ்ஞானம நிறைந்த,* பிரமபுரச் சிறை — *சரீரமாகிய சிறையை,* தீர்ந்தபின் — *விட்டு நீங்கியபின்,* அருளால் — *(பகவானுடைய) கருணையினால,* அமரர் — *ஆதிவாஹிகர்களான தேவர்,* எதிர்கொண்டு வந்து நடத்த — *எதிர்வந்து*

அழைத்து நடத்திப்போக, இம்மாயை கடந்ததன் பின் — இந்த பரக்ருதி மண்டலத்தைத் தாண்டிய பிறகு, பவ நரகச் சுழல் ஆற்றின் — ஸம்ஸார மாகிய நரகமென்னும் சுழல் நிறைந்த நதியின், சுழற்சியில் — சுழலில, சுருளார் — (மறுபடி) சுழலமாட்டார்கள்.

ஈசுவரன், ஜீவனுடைய சரீரத்தில அந்தாயாமியாயிருப்பதனால பரஹ்மத்திற்கு ஸ்தானமாகிய அச்சரீரம ப்ரஹ்மபுரமெனப்படுமென உபநிஷத்துக் கூறுகின்றது.

ஜீவனுடைய சரீரம் ஐந்து பூதங்களாலாகியது. சரீரத்தில முதுகின் மேற்புறத்தில தூண்போன்ற மூன்று எலும்புகள் ஒன்றுகூடி நிற்கின்றன அவற்றுக்கு த்ரிஸ்தூணமெனப் பெயர்வழங்கும் மரணகாலத்தில ஈசுவரன் அவற்றைக்கடைந்து அங்கிருந்து ஐந்துபூதங்களின் ஸூக்ஷ்மமான அம்சத்தை எடுத்து அதில் ஜீவனைச் சேர்க்கின்றான் இங்ஙனம் கடைதலே த்ரிஸ்தூணக்ஷோபமெனப்படும. இவ்வாறு கடையும்போது ஜீவனுக்கு மிகக வேதனையுண்டாகும. இந்த வேதனை நீங்குவதற்காக அந்த ஜீவனை ஈசுவரன் தன்மீது அணைத்துக்கொள்ளுகின்றான் (இவ்வம்சங்கள மரணமடையும் அனைவருக்கும் பொதுவாகும.) இவ்விஷயமே இப்பாசுரத்தின் முதலடியிற் கூறப்பட்டது

ஆதிவாஹிகர்களின் விவரணத்தை 67-வது பாசுரத்திற் காணக.

கருத்து — ஆர்ச்சிராதிகதியால சென்றவர மறுபடியும ஸம்ஸாரத்திற்குத் திரும்பமாட்டார். 14

எண்சீராசிரியவிருத்தம

147 விழியல்லால் வேலில்லை விண்ணின் மாதர்
மேனியல்லால் வில்லில்லை மீன வற்கு
மொழியல்லா லமுதில்லை யென்று முன்னாள்
முத்திவழி முனிந்தடைந்த மோகந் தீர்ந்தோம்
கழியல்லாற் கடலில்லை யென்பார் போலக்
காரியமே காரணமென் றுரைப்பார் காட்டும்
வழியல்லா வழியெல்லாங் கடந்தோ மற்றும்
வானேறும் வழிகண்டோ மகிழ்ந்திட் டோமே 15

உரை — முன்னாள் — முன்பு, முத்தி வழி முனிந்து — மோக்ஷமார்க்கத்தை வெறுத்து, மீனவற்கு — மீனக் கொடியாகவுடைய மன்மதனுக்கு, விண்ணின் மாதர் — தேவலோக ஸ்தரீகளுடைய, விழி அல்லால் வேல் இல்லை — கண்ணல்லது வேறு வேலாயுதம் இலலை, மேனி அல்லால் வில் இல்லை — (அப்பெண்களுடைய) சரீரத்தைத் தவிர வேறு வில் இலலை;

மொழியல்லால் அமுது இல்லை—(அவர்கள் பேசும) பேச்சைத்தவிர வேறு அமருதம இலலை, என்று அடைந்த — என்று (நாம) அடைந்த, மோகம் தீர்ந்தோம் — அஜ்ஞானம நீங்கப்பெற்றோம கழி அல்லால் கடல் இல்லை — (கடலின் கழிநீரைமாத்திரம கண்டு) கழிநீரைத் தவிர வேறு கடல இலலை, என்பார்போல — என்று சொல்லும மூடர்கள்போல, காரியமே காரணமென்று — (ப்ரஹ்மத்தினிடமிருந்து) உண்டான ஜகத்தையே காரண மென்று (கொண்டு அதையன்றி வேறான ப்ரஹ்மமில்லையென்று), உரைப்பார் காட்டும் — கூறுகிற மதாந்தரஸ்தர்களால காட்டப்படுகின்ற, வழியல்லா வழியெல்லாம் — நலவழியல்லாத வழிகளையெல்லாம, கடந் தோம் — தாண்டிவிட்டோம, மற்றும் வான் ஏறும் வழி கண்டோம் — மேலும பரமபதத்திற்குச செல்லும அர்ச்சிராதிமார்க்கத்தை அடைந்தோம, (அதனால) மகிழ்ந்திட்டோம் — மகிழ்ச்சியடைந்தோம

கருத்து — அஜ்ஞானம நீங்கி நலவழிப்பட்டு அர்ச்சிராதி கதியில சென்றவர் மகிழ்ச்சியடைவார். 15

இனி 2- பாசுரங்களால், பரமபதம் சேர்தல் என்னும் 8-வது படி விளக்கப்படுகின்றது —

*கட்டளைக்கலித்துறை*

148 வன்பற் றுடன்மயல் பூண்டுமற் றோர்கதி யாலினநா
ளென்பெற் றதுபெறுந் தானழ மெத்தனை போதுளதாந்
துன்பற்ற தன்றுணி வாற்றுயர் தீர்க்குந் துழாய்முடியா
னின்புற்ற நல்வழி யாலேற்று நற்பத மெண்ணுவமே. 16

[ *பாசுரம் 16, 17— திவ்யதேசப்ராப்திபாவம* ]

உரை:— வன் பற்றுடன்—(நாம அற்பவிஷயங்களில) வலிய ஆசையுடன், மயல் பூண்டு — அஜ்ஞானத்தைப் பெற்று, மற்று ஓர் கதியால் — (நமக்குத் தகாத) வேறு ஒரு வழியில நடந்ததால், இன நாள்— இங்ஙனே பலநாளாக, பெற்றது என் ? — அடைந்த பயன யாது ? பெறும் தானழும் — (அவ்வழி களால) பெறக்கூடிய (ப்ரஹ்மபதம முதலிய) ஸ்தானமும், எத்தனை போது உளதாம் ? — எத்தனை காலம நிலைத்திருக்கும் ? துன்பு அற்ற — துக்க மிலலாதவனும, தன் துணிவால் — தனனைப்பற்றிய (பக்தி, ப்ரபத்தி என்னும உபாயமாகிய) ஜ்ஞானத்தினால, துயர் தீர்க்கும் — ஸம்ஸாரதுக்கத் தைப் போக்குபவனும, துழாய் முடியான் — திருத்துழாய்மாலையை முடியில அணிபவனுமான எம்பெருமானால, இன்புற்ற நல் வழியால் ஏற்றும்—ஸுகம நிறைந்த சிறந்த (அர்ச்சிராதி) மார்க்கத்தால அடைவிக்கப்படுகின்ற, நல் பதம் எண்ணுவம் — உயர்ந்த பதமாகிய பரமபதத்தை அநுஸந்திப்போம்.

பக்தி ப்ரபத்தியாகிய உபாயஙகள ஜ்ஞாநவிகாஸரூபமாகவே முடிவ தால் ஜ்ஞாநமென்னும பொருள்கொண்ட 'துணிவு' எனும பதததால அவை கூறப்பட்டன.

கருதது — அர்சிராதிகதியால செலபவா பரமபதத்தைச் சேருவர் 16

எணசீராசிரியவிருத்தம

149 பண்டையிரு வினையாற்றிற் படிந்து பாரங்
காணுதே யொழுகியநாம் பாக்கி யத்தால்
வண்டமரு மலர்மாதர் மின்னுய் மன்ன
வைசயந்தி மணிவில்லாய் விளங்க வான்சேர்
கொண்டலருள் மழைபொழிய வந்த தொப்பாங்
குளிர்ந்துதெளிந் தமுதாய விரசை யாற்றைக்
கண்டணுகிக் கருத்தாலே கடந்து மீளாக்
கரைகண்டோர் கதியெல்லாங் கதித்திட் டோமே. 17

உரை — பண்டை இரு வினை — அநாதியான (புணயபாபஙகளெனனும) இரணடு காமஙகளாகிய, ஆற்றில் படிந்து — ஆறறில ஆழநது, பாரம் காணுதே — கரையைக காணமுடியாமல, ஒழுகிய நாம் — (அதனவழியே) சென்றுகொணடிருநத நாம, வண்டு அமரும் மலர் மாதர்—வணடுகள மொயககும தாமரைமலரிலுள்ள பிராட்டி, மின்னுய் மன்ன — மினனலாக நிலைபெற, வைசயந்தி — வைஜயந்தி எனனும் வநமாலை, மணி வில்லாய் விளங்க — அழகிய வானவில்லாக ப்ரகாசிகக, வான் சேர் கொண்டல் — (பரமபதமாகிய) ஆகாசத்திலுள்ள எமபெருமானுகிய மேகம, அருள் மழை பொழிய — கருணையாகிய மழைநீரைச சொரிய, வந்தது ஒப்பாம் — (அதனுல) வநததுபோனற, குளிர்ந்து தெளிந்து அமுதாய — குளிாநது கலக்கமறறு அமருதமயமான, விரசை ஆற்றை — விரஜாநதியை, கண்டு அணுகி — கணடு நெருஙகி, கருத்தாலே கடந்து — தம ஸஙகலபததாலே தாணடி, மீளாக் கரை கண்டோர் — திருமபுதலிலலாத அக்கரையாகிய ஸ்ரீவைகுண்டத்தை அடைநதவாகளுடைய, கதி எல்லாம் — ப்ரகாரஙகளையெல்லாம, பாக்கியத்தால் — (நமமுடைய) அத்ருஷ்டவிசேஷத்தால, கதித்திட்டோம் — அநுஸநதித்தோம.

இப்பாசுரத்தில் பரமபதத்தில எழுநதருளியுள்ள எமபெருமானை ஆகாயததிலுள்ள மேகமாகவும, பிராட்டியை (நிலைபெறற) மினனலாகவும, வைஜயந்தியென்னும வநமாலையை வானவில்லாகவும, அவனது கருணை

*வெள்ளத்தை மழைநீரததாரையாகவும, விரஜாநதியை அதனால பெருகிய அமருதமயமான நதியாகவும வாணிதத கவிசாதுாயம அநுபவிக்கத் தக்கதாகும*

கருதது — *ஆசசிராதிமாாககததால சென்றவா விரஜாநதியைத தம ஸஙகலபததால தாணடிப* **பரமபதம்** *சேருவா* *17*

இனி 2-பாசுரங்களால், தானே பலனுயும் கடைசிப்படியாயும் உள்ள பகவதநுபவம் விளக்கப்படுகின்றது —

*கட்டளைககலிததுறை*

150 பூவள நுந்திரு மாது புணர்ந்தநம் புண்ணியனுர்
தாவள மான தனித்திவஞ் சேர்ந்து தமருடனே
நாவள நும்பெரு நான்மறை யோதிய கீதமெலாம்
பாவள நுந்தமிழ்ப் பல்லாண் டிசையுடன் பாடுவமே 18

[ *பாசுரம* 18, 19—*பராப்திபாவம* ]

உரை — பூ வளரும் – *பூவில வஸிபபவளான*, திருமாது – *பிராட்டியினுல*, புணர்ந்த – *அணைததுககொளளபபட்டவனும*, நம் புண்ணியனுர் – *நம புணயஸவருபனுமான எமபெருமானுக்கு*, தாவளமான – *வஸிக்குமிடமான*, தனித் திவம் சேர்ந்து– *ஒப்பறற பரமபதம சோநது*, தமருடனே– *(நிதயஸூரிகளும முகதருமாகிய) பாகவதாகளுடன்*, நா வளரும் – *நாவில் தஙகுகினற*, பெரு நான் மறை – *பெரிய நானகு வேதஙகளில*, ஓதிய கீதம் எலாம் – *அதயயநம செயயபபடுகினற காநம எலலாவறறையும*, பா வளரும் – *பாககள நிறைநதுளள*, தமிழ்ப் பல்லாண்டு – *தமிழில திருப் பலலாணடு தொடஙகும ஆழவாா திவயஸூகதிகளின*, இசையுடன் – *கீதததுடன*, பாடுவம் – *பாடுவோம*

கருதது — *பரமபதம சோநதவா வேதஙகளையும் திவயபரபநதஙகளையும பாடிக கைஙகாயம செயவர்.* *18*

*எண்சீராசிரியவிருததம*

151 அடலுாக முண்டுமிழ்ந்த வருக்கன் போல
வழக்கடைந்து கழலியநற் றாளம் போலக்
கடலொழிக் கரைசேர்ந்த கலமே போலக்
காட்டுத்தீக் கலந்தொழிந்த களிறே போல
மடல்கவரு மயல்கழிந்த மாந்தர் போல
வன்சிறைபோய் மன்னர்பதம் பெற்றுர் போல
வுடன்முதலா வுயிர்மறைக்கு மாயை நீங்கி
யுயர்ந்தபத மேறியுணர்ந் தோன்றி னேமே. 19

உரை — அடல் உரகம் — வலிமையுள்ள (ராகு என்னும்) ஸர்ப்பத்தால், உண்டு உமிழ்ந்த — விழுங்கி(ப் பிறகு) உமிழப்பட்ட, அருக்கன்போல— ஸூர்யனைப்போலவும், அழுக்கு அடைந்து கழுவிய — அழுக்கு நிரம்பியிருந்து பின் கழுவப்பெற்ற, நல் தாளம் போல— சிறந்த முத்துப் போலவும், கடல் ஒழுகிக் கரை சேர்ந்த — கடலில் திசைதெரியாதோடிப் பின் (தெய்வவசத்தால்) கரையைச் சேர்ந்துவிட்ட, கலமே போல — ஓடம்போலவும், காட்டுத் தீக்கு அலந்து - காட்டுத்தீயால் (சூழப்பட்டு) வருந்தி, ஒழிந்த — (பிறகு அத்துன்பம்) நீங்கிய, களிறேபோல — யானைபோலவும், மடல் கவரும் மயல் கழிந்த — மடலூரும்படியான காமவிசனை நீங்கிய, மாந்தர்போல — மனிதர் போலவும், வன் சிறை போய்— (சிறையிலிருந்து, பின்) வலிய அந்தச் சிறை நீங்கி வெளியேறி, மன்னர்பதம் பெற்றார்போல — ராஜபதவியைப் பெற்றவர்போலவும், உடல் முதலா — காமசரீரத்திற்குக் காரணமாய், உயிர் மறைக்கும் — ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை(நாம் அறியமுடியாதபடி)மறைப்பதாயுள்ள, மாயை நீங்கி — ப்ரக்ருதியின் ஸம்பந்தம் நீங்கி, உயர்ந்த பதம் ஏறி — உயர்ந்த ஸ்தானமாகிய பரமபதத்தில் ஏறி, உணர்ந்து — (அளவற்ற) ஜ்ஞானத்தைப் பெற்று, ஒன்றினோம் — (அவனுடன்) கலந்து ஈடுபட்டோம்.

ஸம்ஸாரத்தில் உழன்று வருந்திய ஜீவன் ஸம்ஸாரபந்தம் நீங்கப் பெற்றுப் பரமபதம் சேருங்கால் பெறும் தேஜஸ்ஸும் பெருமையும் இப்பாசுரத்தில் ஆறு உபமானங்களால் விளக்கப்பட்டன

மடலூர்தல்:— ஒரு தலைவன், தான் விரும்பிய தலைவியை அடைய முடியாத நிலைமையில் அவளுருவமெழுதிய மடல்கொண்டு ஊரார்காணச் செல்வது. பனங்குருத்தைக் குறிக்கும் மடலெனும் சொல் இங்கு அதில் வரைந்த சித்திரவுருவத்தையும் குறித்துநின்றது (மடலூர்தலின் விரிவெல்லாம் தமிழில் அகப்பொருளிலக்கணம் நோக்கி அறிக)

இப்படித் தாம் விரும்பிய தலைவியை அடையமுடியாமையால் மடலூரும் நிலை வந்து, பின் தமது எண்ணம் நிறைவேறியதால் அத்துன்பம் தீர்ந்த மானிடர் இங்கு ஸம்ஸாரபந்தம் நீங்கி முக்திபெறும் ஜீவனுக்கு உதாஹரணமாக்கப்பட்டனர்.

கருத்து:—இச்சரீரத்திலிருந்து புறப்பட்ட ஜீவர் பரமபதம் சேர்ந்து எம்பெருமானுடன் கலந்து ஈடுபடுவர்.

இந்த ப்ரபந்தத்தில் கூறிய 9 விஷயங்களாகிய படிகளை ஒன்றுசேர இப்பாசுரம் வெளியிடுகின்றது —

152 மண்ணுலகின் மயறீர்ந்து மனந்த தும்பி
மன்னாத பயனிகந்து மாலே யன்றிக்
கண்ணிலதென் றஞ்சியவன் கழலே பூண்டு
கடுஞ்சிறைபோய்க் கரையேறுங் கதியே சென்று
விண்ணுலகில் வியப்பெல்லாம் விளங்கக் கண்டு
விண்ணவர்தங் குழாங்களுடன் வேதம் பாடிப்
பண்ணுலகிற் படியாத விசையாற் பாடும்
பல்லாண்டே பல்லாண்டும் பாடு வோமே. 20

உரை — மண்ணுலகில் மயல் தீர்ந்து — இககாமபூமியில அஜஞாநம தீாநது (1 விவேகபாவம), மனம் ததும்பி — (வீணே கழிநத காலததை நினைநது) மனம ததததளிதது (2நிாவேதபாவம), மன்னாத பயன் இகந்து—ஸதிர மலலாத ஸமஸாரஸுகஙகளில ஆசையொழிநது (3 விரகதிபாவம), மாலே அன்றி — எமபெருமானைத தவிர, கண் இலது என்று— (வரப்போகும நரகத்தைத் தடுக்க வேறு) கதி இலலை எனறு, அஞ்சி — பயநது (4 பீதிபாவம), அவன் கழலே பூண்டு — (பகதி அலலது பரபததியால) அவனுடைய திருவடிகளையே பறறி (5 பரஸாதநபாவம), கடும் சிறை போய் — சரீரமென்னும கொடிய சிறையிலிருநது புறபபடடு (6 உதகரமணபாவம), கரை ஏறும் கதியே சென்று—(ஸமஸாரஸமுதரததின)அககரைககுச் செலலும ஆாசசிராதி கதியால சென்று (7 ஆாசசிராதிபாவம), விண்ணுலகில் — பரமபதததில உள்ள, வியப்பு எல்லாம் — ஆசசாயஙகளையெலலாம, விளங்கக் கண்டு — தெளிவாயக கணடு (8 திவயதேசபராபதிபாவம), விண்ணவர் தம் குழாங்களுடன் — நித்யஸூரிகள, முகதாகள ஆகியவாகளின கோஷடிகளுடன, வேதம் பாடி — வேததைதப் பாடி, பண் உலகில் படியாத இசையால் — ஸஙகீதவுலகில அமையாத தெயவகாநத்தால, பாடும் — பாடபபடுகிற, பல்லாண்டே — பலலாணடு எனறு தொடஙகும திவயப்ரபநததனைதயே, பல் ஆண்டும் பாடுவோம் — பலகாலமும பாடுவோம (9 பராப்திபாவம)

கருததது:— இப பிரபநதததிற கூறியபடி பரமபதம அடைநதோா அஙகே பகவானை மஙகளாசாஸநமசெயது கொணடு வாழவா. 20

153 மாளாத வினையனைத்து மாள நாம்போய்
வானேறி மலர்மகளா ரன்பு பூணுந்
தோளாத மாமணிக்குத் தொண்டு பூண்டு
தொழுதுகந்து தோத்திரங்கள் பாடி யாடிக்
கேளாத பழமறையின் கீதங் கேட்டுக்
கிடையாத பேரின்பம் பெருக நாளு
மீளாத பேரடிமைக் கன்பு பெற்றே
மேதினியி லிருக்கின்றோம் விதியி னாலே 21

உரை — மாளாத வினை அனைத்தும் – (லகுவாய) ஒழியாத கர்மங்கள முழுதும, மாள – (நாம அநுஷ்டித்த உபாயத்தால) ஒழிய, நாம் போய் – நாம் (ஆசசிராதிகதியால) சென்று, வான் ஏறி – பரமபதத்தை அடைந்து, மலர் மகளார் – தாமரையில வாழும பிராட்டியுடைய, அன்பு பூணும் – அன்பைப் பெற்றவனும, தோளாத மா மணிக்கு – துளைக்கப் படாத பெரிய (இந்திரநீல) ரத்நமபோன்றவனுமான எமபெருமானுக்கு, தொண்டு பூண்டு – கைங்கர்யத்தை ஏற்று, தொழுது – வணங்கி, உகந்து – மகிழ்ந்து, தோத்திரங்கள் பாடி – ஸ்தோத்ரங்களைப் பாடி, ஆடி – நர்த்தனம் செய்து, கேளாத பழமறையின் – (இதுவரை) கேட்டிராத பழமையான வேதத்தின், கீதம் கேட்டு – திவ்யகானத்தைக் கேட்டு, கிடையாத பேரின்பம் – (மற்றவர்களுக்கு) கிடையாத பெரிய(மோக்ஷ)ஆநந்தம், நாளும் பெருக– எந்நாளும் பெருகுமபடி, மீளாத பேரடிமைக்கு – திருமபுதலில்லாத பெரிய கைங்கர்யத்திற்குக் காரணமான, அன்பு பெற்றேம் – (எம்பெருமானுடைய) ப்ரீதியைப் பெற்றோம. விதியினால் – (நம்மைக்கொண்டு சேதநரை உஜ்ஜீவிப்பிக்கத் திருவுள்ளங்கொண்ட எமபெருமானுடைய) நியமனத்தால, அல்லது– (ஆச்சாவதாரத்தில ஈடுபட்டு அநுபவிக்கக் காரணமான) பாக்ய விசேஷத்தால், மேதினியில் இருக்கின்றேம் – இக்காமபூமியில இன்னும உயிர்தரித்திருக்கின்றோம.

கருத்து:— பரமபதத்திற்குச் செல்ல உரியராயிருந்தும இப்பூமியில சேதநர் இருப்பது பகவத்ஸங்கல்பத்தாலேயே அல்லது ஆசசையிலுள்ள ஈடுபாட்டினாலேயே ஆம 21

பரமபதசோபானம்-உரை முற்றிற்று

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

ஸ்ரீ:

# பரமதபங்கம் - உரை

ஸ்ரீமத் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் . . . தேசிகம் ||

ஸ்ரீமானு . . . வாழ்வு

---

[ விஷயச் சுருக்கம் ]

ஸ்ரீதேசிகன் பிறமதங்களின் முடிவுகளையும் அவற்றிலுள்ள தோஷங்களையும் நம் மதத்தின் மேன்மையையும் அனைவரும் நன்கு உணரவேண்டுமெனத் திருவுள்ளங்கொண்டு மணிப்ரவாளநடையில் பரமதபங்கமென்ற விரிவான ஒரு ரஹஸ்யத்தை அருளிச்செய்தார் அதில் ஒவ்வொரு அதிகாரத்தின் ஆதியிலும் முடிவிலும் அவ்வவற்றின் விஷயத்தைச் சுருக்கியருளிச்செய்த பாசுரங்கள் தொகுக்கப்பட்டுப் "பரமதபங்கம்" என்ற ஒரு ப்ரபந்தம் தோன்றியது

இதில் முதலில் ஸ்ரீதேசிகன், பிறமதங்களைக் கண்டிக்கத் தமக்கு அருள்புரியும்வண்ணம் திருவாழியாழ்வானைத் துதித்துப் பிறகு ஆசார்யர்கள் செய்த உபகாரத்தை அநுஸந்தித்து, நம் ஸித்தாந்தத்தின்படி மூன்று தத்துவங்களை விளக்கிப் பரமதங்களைக் கண்டிப்பதன் அவசியத்தைக் கூறி, பிறமதங்களில் பொதுவாய் உள்ள தோஷங்களை வெளியிட்டு, சார்வாக மதம், நான்குவகைப்பட்ட (மாத்யமிக, யோகாசார, ஸௌத்ராந்திக, வைபாஷிக) பௌத்தமதம், அத்வைதமதம், ஜைநமதம், பாஸ்கர-யாதவமதம்,

வையாகரணமதம், கணாதமதம், கௌதமமதம், மீமாம்ஸகமதம், ஸாங்க்யமதம், யோகமதம், பாசுபதமதம் ஆகியவற்றின் முக்கியக் கொள்கையைச் ... கூறிக் கண்டித்து, பாஞ்சராத்ரசாஸ்த்ரத்தின் பெருமையைப் பேசி, நம் ஸித்தாந்தத்தில் சரணாகதியின் ஸ்வரூபத்தையும் பெருமையையும் வெளியிட்டு, பலன்பெறும் வகையையும் எடுத்துக் காட்டி, நம் பூர்வாசார்யர்கள் கைக்கொண்ட ஸம்ப்ரதாயமே சிறந்தது என்று ஸ்தாபித்து ..., இவ்வாறு பரமதங்களைக் கண்டிக்கத் தமக்கு அருள்புரிந்தது வய திருவாழியாழ்வாருடைய பதினாறு திருக்கைகளின் வலிமையையும் பேசி நிலையிட்டுகிறா

பரமதங்களைக் கண்டிக்கும் சக்தியுண்டாகத் தமக்கு அருள்புரியு மாறு திருவாழியாழ்வானைத் துதிக்கிறார் ஸ்ரீதேசிகன்—

*கட்டளைக்கலித்துறை*

15. எட்டள வம்புயத் துள்ளிலங் கும்மறு கோணமிசை
வட்டணி லந்தி கிரிவளை வில்வளை வாய்முசலந்
திண்கையி லங்குசந் சீர்திக ழுங்கதை செங்கமல
மெண்படை யேந்திநின் றனேழி லாழி யிறையவனே. 1

[ பாசுரம 1, 2, 3– ப்ரஸ்தாவநாதிகாரம ]

பதவுரை — எழில் ஆழி இறையவன் – அழகிய திருவாழியாழ்வானாகிய ஸ்வாமி, எண் தள அம்புயத்துள் – எட்டு இதழ்களுள்ள தாமரைப்பூவினுள், இலங்கும் அறு கோணம் மிசை – பரகாசிக்கும் ஆறு கோணமுள்ள யந்த்ரத்தில், திண் கையில் – வலிய (எட்டுத) திருக்கைகளில், வண் பணிலம் – அழகிய சங்கம், திகிரி – சக்ரம், வளை வில் – வளைந்த திருக் ... வில், வளை வாய் – வளைந்த வாயையுடைய கோடரி, முசலம் – உலக்கை, அங்குசம் – மாவெட்டி, சீர் திகழும் கதை – பெருமையுள்ள கதை, செங்கமலம் – சிவந்த தாமரைமொட்டுப்போன்ற ஆயுதம (ஆகிய), எண் படை – எட்டு ஆயுதங்களை, ஏந்தி நின்றான் – தரித்துநின்றான்.

எட்டு இதழுள்ள தாமரையில ஆறு கோணமுள்ள யந்த்ரத்தில், எட்டுக் கைகளிலும் எட்டு ஆயுதங்களை ஏந்திநின்ற திருவாழியாழ்வானைப் புகழ்ந்தவாறு.

தளை வழுவுமாதலின் 'அம்புயத்துளிலங்குமறு' என்று பாடம் கொள்ளத்தகாது.

1

ஆசார்யர்கள் செய்த உபகாரத்தை மகிழ்ந்து பேசுகிறர்—

*பதினறுசீராசிரியச்சந்தவிருத்தம்*

155 விடுநெறி யஞ்சி விடத்தொ டக்கிய
விதியர டைந்து தொழத்த ழைத்தெழ
விழியரு டந்து விலக்க டிக்களை
விரகிலி யம்பி விலக்கி வைத்தனர்
கொடுவினை யென்ப தனைத்தி னைத்தனை
கொணர்தலி கந்த துணைத்த னத்தினர்
திருநகையில் வந்து தொழப்ப டக்கிய
குலபதி தந்த குறிப்பில் வைத்தனர்
கடுநர கன்பு கழற்றி மற்றெரு
கதிபெறு மன்பி லெமைப்பொ ருத்தினர்
கமலையு கந்த கடற்கி டைக்கடல்
கருணையு யர்ந்த திடர்க்கொ ருக்கினர்
படுமத லின்றி வளர்த்த நற்கலை
பலபல வொன்ற வெமக்கு ரைத்தனர்
பழமறை யந்தி நடைக்கி டைச்சுவர்
பரமத மென்ற திடித்த பத்தரே. 2

உரை — பரமதம் — பிறமதங்கள், பழ மறையந்தி நடைக்கு — பழமையான வேதாந்த மார்க்கத்திற்கு, இடைச்சுவர் — நடுவேயுள்ள சுவர் (போல தடையாயுள்ளன), என்று — என்று (நினைத்து), அது — அந்த மதமாகிய சுவரை, இடித்த பத்தர் — இடித்து ஒழித்த பகவத் பக்தர்களான எம் ஆசார்யர்கள், விடு நெறி அஞ்சி — நீக்கத்தக்க தீய வழியில் செல்லப்பயந்து, விடத் தொடக்கிய — (அவ்வழியை) விட்டுவிலகத் தொடங்கிய, விதியர் — பாக்யமுள்ள யாம், அடைந்து தொழ — (நம்மை) வந்து கிட்டி வணங்க, தழைத்து எழ — (மேன்மேலும்) வருத்தியாகிப் பெருகுகின்ற, அருள் விழி தந்து — கருணையுடன் கூடிய கடாக்ஷத்தைக் கொடுத்து, விலக்கு அடி — (உயர்ந்த பலனைப் பெறமுடியாமல்) விலக்குவதற்குக் காரணமான, களை — களை(போன்ற பாபங்)களை, இயம்பி — (எமக்கு) எடுத்துக்கூறி, விலக்கி — (அப்பாபச்செய்கையிலிருந்து எம்மை) விலக்கி, விரகில் வைத்தனர் — (எம் சக்திக்குத் தக்க) உபாயத்தில் (முயலவித்து) நிலைநிறுத்தினார்

(அவ்வாசார்யர்கள்), கொடு வினை என்பதனை — கொடிய கர்மங்களென்று சொல்லப்படுமவற்றை, தினைத்தனை கொணர்தல் இகந்த — சிறிதளவும் சேரவொட்டாது கழித்த, துணைத் தனத்தினர் — நற்குணமாகிய

செல்வத்தையுடையார் (எமக்குச் சிறிதும் பாபம் சேராதபடி சோகரும் சிறந்த குணமுடையவர்),

குருகையில் வந்து — திருக்குருகூரென்னப்படும் ஆழ்வார்திருநகரியில் அவதரித்து, கொழுப்பு அடக்கிய — (பிரமதஸாதர்களின்) கர்வத்தை (தம் ஸூக்தியின் மூலமாக) அடக்கிவிட்ட, குலபதி தந்த — (ப்ரபந்ந குலத்திற்குக்) கூடஸ்தரான நம்மாழ்வார் அருளிய, குறிப்பில் வைத்தனர் — ஸூக்ஷ்மமான கருத்தில் (எம்மை) நிலைநாட்டினர். (எம்மை ஆழ்வாருடைய கருத்தில் ஈடுபடச்செய்தனர்),

கடு நரகு — கொடிய நரக (த்தைத் தரும் பாபகார்ய) ங்களில், அன்பு கழற்றி—(எமக்கிருந்த) அன்பைப் போக்கி, மற்றொரு கதி பெறும் அன்பில்— மற்றொரு(சிறந்த) கதியாகிய மோக்ஷத்தைப் பெறுவதில் உள்ள ஆசையில், எ(ம்)மைப் பொருத்தினர் — எங்களை இசைவித்தனர் (தகாத விஷயத்தில் மனம்செல்லாது மோக்ஷத்தை விரும்புமாறு அவர்கள் செய்தனர்),

கமலை உகந்த — பிராட்டியின் அன்பிற்குரிய, கடல் கிடைக் கடல்— (பாற்) கடலில் பள்ளிகொண்டிருக்கும் (நீலக்) கடல்போன்ற எம் பெருமானுடைய, கருணை உயர்ந்த திடர்க்கு — கருணையாகிய உயர்ந்த மேட்டில், ஒருக்கினர் — (எம்மை) ஒன்றுசேர்த்தனர் (எம்பெருமான் எம்மீது கருணைபொழியுமாறு செய்தனர்),

படு முதல் இன்றி — அழியும் காரணம் இல்லாமல், வளர்த்த — (ஈசுவரனாலும் மஹர்ஷிகளாலும்) வருத்திசெய்யப்பட்ட, பல பல நல் கலை — பற்பல சிறந்த வித்யைகள், ஒன்ற — (எம்மிடம்) ஒன்றுகூடும்படி, எமக்கு உரைத்தனர் — எங்களுக்கு உபதேசித்தனர் (பற்பல சிறந்த வித்யைகளை எமக்கு உபதேசித்தனர்)

ஆசார்யர்கள் தம்மை அடைந்தவர்களைத் தீயவழியிற் செல்லவொட்டாது தடுத்து, ஆழ்வாருடைய கருத்தில் ஈடுபடச்செய்து, மோக்ஷத்தில் அவாவையுண்டாக்கி, உபாயத்தில் மூட்டி, பகவத்கடாக்ஷத்திற்குப் பாத்திரமாக்கினரென்றவாறு. 2

ஆசார்யர்கள் ஸாரார்த்தத்தையே உபதேசிப்பரென்கிறர்—

கட்டளைக்கலித்துறை

156 பொழுதைக் கும்பொருள் யாமறி யோம்பொரு ளார்மறையிற்
றுழுதைக் கின்றன தாமே யறியுந் தாழுடையா
ராழுதைக் கென்றிவை யாய்ந்தெடுத் தாரண நூல்வழியே
நாழுதைக் கும்வகை நல்லரு ளேந்தி நவின்றனரே 3

உரை — பொருள் ஆர் மறையில் — உண்மைக்கருத்து நிறைந்துள்ள வேதத்தில், போம் உரைக்கும் பொருள் — (தகாதென்று) நீக்கக்கூடியதும் (தக்கதென்று) சொல்லக்கூடியதுமான விஷயத்தை, யாம் அறியோம் — (ஆசார்யோபதேசத்திற்குமுன்) யாம் அறியமாட்டோம். தாம் உரைக்கின்றன — தம்மால் உபதேசிக்கப்படும் விஷயங்களை, தாமே அறியும் — தாமே (நேரில்) கண்டறியும்படியான, நம் உடையார் — பெருமையுடைய நம் ஆசார்யர்கள், நல் அருள் ஏந்தி — (நம் பக்கல்) சிறந்த க்ருபையைக் கொண்டு, ஆய்ந்து — (வேதத்தை) ஆராய்ந்து, இவை உரைக்க ஆம் என்று — இவ்விஷயங்கள் உபதேசிக்கத் தக்கனவாகும் என்று, எடுத்து — பொறுக்கியெடுத்து, ஆரண நூல் வழியே — வேதமார்க்கத்தைத் தழுவியே, நாம் உரைக்கும் வகை — நாம் (இந்த க்ரந்தத்தில்) விளக்கும்படி, நவின்றனர் — (நமக்கு) உபதேசித்தனர்.

வேதத்தில் ஸாரமான விஷயங்களையறியச் சக்தியற்ற நமக்கு ஆசார்யர்கள் தாம் ஆய்ந்தெடுத்த ஸாரார்த்தங்களை உபதேசித்ததால் நாம் இந்த க்ரந்தத்தைச் செய்யவல்லவரானோமென்றவாறு 3

வேதத்தால் உண்டாகும் தத்துவஜ்ஞானத்தைக் கெடுக்கும் பிறமதத்தினரைக் கண்டிக்கிறார்.—

157 சித்து மசித்து மிறையு மெனத்தெளி வுற்று நின்ற
தத்துவ மூன்றுந் தனித்தனி காட்டுந் தனிமறையால்
முத்தி வழிக்கிது மூல மெனத்துணி வார்களையுங்
கத்தி மயக்குங் கதகரை நாங்கடி கின்றனமே 4

[ பாசுரம் 4, 5—ஜீவதத்துவாதிகாரம் ]

உரை — சித்தும் — சேதநரும், அசித்தும் — அசேதநமும், இறையும் என — ஈச்வரனும் என்று, தெளிவுற்று நின்ற — தெளியப்பெற்று நின்ற, தத்துவம் மூன்றும் — தத்துவங்கள் மூன்றையும், தனித்தனி காட்டும் — (அவ்வவற்றின் ஸ்வரூபத்தையும் ஸ்வபாவத்தையும்) தனித்தனியாகப் பிரித்து வெளியிடுகின்ற, தனி மறையால் — ஒப்பற்ற வேதத்தால், இது — இந்தத் தத்துவஜ்ஞானம், முத்தி வழிக்கு — மோக்ஷமார்க்கத்திற்கு, மூலம் என — காரணமாகும் என்று, துணிவார்களையும் — நிச்சயித்தறிபவர்களையும், கத்தி மயக்கும் — ஆரவாரத்தால் மயக்குகின்ற, கதகரை — ப்ரதிவாதிகளை, நாம் — (ஆசார்யோபதேசம் பெற்ற) நாம், கடிகின்றனம் — (இவ்வதிகாரத்தில்) கண்டிக்கின்றோம்.

நல்ல விவேகமுள்ளவர்களையும் ஆரவாரத்தால் மயக்கப்பார்க்கும் ப்ரதிவாதிகளை இவ்வதிகாரத்தில் கண்டிக்கிறோமென்றவாறு 4

158 முத்தின் வடங்க ளெனமுகுந் தன்புனை மூவகையாஞ்
சித்தி லருஞ்சுரு திச்செவ்வை மாறிய சிந்தைகளாற்
பந்தி லிரண்டுமெய்க் கப்பகட் டும்பா வாதியர்தங்
கந்தில் விழுந்தடைந் தவ்வழுக் கின்று கழற்றினமே. 5

உரை:— முத்தின் வடங்கள் என — முத்துக்களின் ஹாரங்கள் என்னும்படி, முகுந்தன் புனை — எம்பெருமான் தரித்த, மூவகையாம் சித்தில் — (பத்த-முக்த-நித்யஸூரிகளாகிய) மூன்றுவகைப்பட்ட சேதநா விஷயத்தில், அரும் சுருதிச் செவ்வை மாறிய — (அறிவதற்கு) அருமையான வேதத்தின் நேர்மையை அழித்துப்பேசுகின்ற, சிந்தைகளால் — நினைவுகளால், பந்தில் இரண்டு மெய்க்க — (தாம் கூறும்) பத்துவிஷயங்களில் இரண்டே மெய்யாக, பகட்டும் — மயக்குகின்ற, பரவாதியர் தம் — ப்ரதிவாதிகளுடைய, கந்தில் விழுந்து அடைந்த — வீண்பிதற்றலில் மயங்கி (அதனால்) பெற்ற, அழுக்கு — களங்கத்தை (குற்றத்தை), இன்று—(இவ்வதிகாரத்தை எழுதிய) இன்று, கழற்றினம் — நீக்கிவிட்டோம்.

பிறமதத்தினரால் ஜீவனுடைய ஸ்வரூபத்தில் கூறப்பட்ட கொள்கைகளை இவ்வதிகாரத்தில் ஒழித்தோமென்றவாறு.

அடைந்த + அழுக்கு = அடைந்தவ்வழுக்கு- இங்கு வகரம் விரிந்தது செய்யுள்விகாரமாகும். 5

அசேதநதத்துவத்தை இவ்வதிகாரத்தில் விளக்குகிறர்—

159 நாக்கிய லும்வகை நம்மை யளித்தவர் நல்லருளாற்
பாக்கிய மேந்திப் பரனடி யார்திறம் பார்த்ததற்பின்
றாக்கியர் தங்க டலைமிசை தாக்கித் தனிமறைதான்
போக்கிய மென்றத னிற்பேரியம் மதங்களைப் போக்குவமே.

[ பாசுரம் 6, 7— அசித்தத்துவாதிகாரம் ]

உரை:— நம்மை — (அறிவற்றிருந்த) நம்மை, நாக்கு இயலும் வகை — நாவினால் (நன்றாய்ப்) பேசும்படி, அளித்தவர் — அருள்புரிந்த ஆசார்யர்களுடைய, நல் அருளால் — சிறந்த கருணையினால், பாக்கியம் ஏந்தி — (நல்ல ஜ்ஞானத்தைப் பெறும்) பாக்யத்தைப் பெற்று, பரன் அடியார் திறம் — ஸர்வேச்வரனுடைய தாஸர் (களான ஜீவர்) களுடைய ஸ்வரூபத்தை, பார்த்ததற்பின் — (முன் அதிகாரத்தில்) ஆராய்ந்தபின்பு, தாக்கியர் தங்கள் — (ஆபாஸயுக்திகளைக்கொண்டே விஷயத்தை ஸாதிக்க முற்படுகின்ற) யுக்திவாதிகளுடைய, தலைமிசை தாக்கி — தலையில் மோதி, தனி மறை — ஒப்பற்ற வேதம், "போக்கியம்" என்றதனில் —

"(ஆதமாவினுல) அநுபவிககப்படும வஸது'' எனக கூறிய அசேதநததததுவத தைபபறறி வருகினறு, பொய்ம்மதங்களை — விபரீதககொள்கைகளை, போக்குவம் — (இவவதிகாரத்தில நாம) ஒழிததிடுவோம தான்—அசை.

"ஹொக்தா ஹொக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா" எனறு உபநிஷதவாகயம ஒனறு உளது இது மூனறு தததுவஙகளின ஸவபா வததை வெளியிடுகினறது ஜீவனை அநுபவிபபவனுகவும, அசேதநததை அநு பவிககப்படும வஸதுவாகவும, ஈசுவரனை சேதநாசேதநஙகளை ஏவுபவனுக வும இவவாகயததால அறிகினமோம. (ஹொக்தா - அநுபவிபபவன, ஹொக்யம் - அநுபவிககபபடும வஸது, ப்ரேரிதா - ஏவுபவன) 6

160 தீவகை மாற்றியன் றோர்தேரி லாரணம் பாடியநந்
தேவகி சீர்மக ஞர்திறம் பாவருள் சூடியநா
மூவகை யாமறி யாத்தத் துவத்தின் முகமறிவார்
நாவகை யேநடத் துந்நடை பார்த்து நடந்தனமே. 7

உரை — தீ வகை மாற்றி — (ஜீவாகளிடமுளள) தீய பரகாரஙகளை நீககி (ஒழிககக் கருதி), அன்று — பாரதயுததகாலததில, ஓர தேரில்—ஒப்பற்ற (அர்ஜுநனுடைய) தேரில் (பாகனுயிருநது), ஆரணம் பாடிய— வேதத (தின அாததத)தை (கீதையின் வாயிலாக) அருளிசசெயததவரும, நம் தேவகி சீர் மகனுர் — தேவகியின் சிறநத புததிரருமான நம கணணனுடைய, திறம்பா அருள் — நீஙகாத கருணையை, சூடிய நாம் — பெறற நாம, மூவகை ஆம் — (பரகருதி, காலம, சுத்தஸததுவம எனறு) மூனறுவகைப்பட்ட, அறியாத் தத்துவத்தின்—அறிவறற (அசேதந) தததுவஙகளுடைய, முகம் அறி வார் — பரகாரஙகளை (நனகு) அறிநத(பராசரா - வயாஸா - ஆழவாா முதலிய)வாகளுடைய, நா வகையே — உபதேசததின வழியாகவே, நடத் தும் — (நம் ஆசாாயாகள) நடப்பிககினற, நடை பார்த்து — ப்ரகாரததை ஆராய்நது, நடந்தனம் — நடநதோம (இவவதிகாரததில வெளியிட்டோம).

ஆசாாயோபதேசததினபடியே அசேதநததின ஸவரூபம இஙகு விளக்கபபட்டதெனறவாறு. 7

ஆசார்யோபதேசத்தின்படியே ஈசுவரஸ்வரூபத்தை விளக்குகிறர்—

161 வேலைப் புறமகங் காண்பது போல்வேத நன்னெறிசேர்
நூலைப் புறமகங் காண்டலி னுண்ணறி வின்றிநின்றீர்
மாலைப் பெறவழி காட்டிய தேசிகர் வாசகமே
யோலைப் புறத்தி லெழுதுகின் றேமுள் ளெழுதுமினே. 8

[ பாசுரம 8, 9—பரததுவாதிகாரம் ]

உரை — வேலை — ஸமுத்ரத்தின், புறம் அகம் — வெளியிலும் உள்ளும் (முழுதும்), காண்பதுபோல் — காண்பதிறபோல், வேத நல் நெறி சேர் நூலை — வேதத்தின் சிறந்த மார்க்கங்களைப் போதிக்கும் சாஸ்த்ரங்களை, புறம் அகம் காண்டலில் — மேலேதோன்றும் அர்த்தத்தையும் உட்கருத்தையும் அறிவதில், நுண் அறிவு இன்றி நின்றீர்! — ஸூக்ஷ்ம புத்தி இல்லாமல் நின்றவர்களே! மாலைப் பெற — எம்பெருமானை (நாம்) அநுபவிப்பதற்கு, வழி காட்டிய — உபாயத்தை (நமக்கு)க் காட்டிக்கொடுத்த, தேசிகர்வாசகமே — ஆசார்யர்களுடைய உபதேச (த்தின் ஸார) த்தையே, ஓலைப்புறத்தில் எழுதுகின்றோம் — இவ்வோலையின்மேல் எழுதுகின்றோம்; உள் எழுதுமின் — (இதை உங்கள்) மனத்துள் பதிவித்துக்கொள்வீர்களாக.

சாஸ்த்ரார்த்தங்களை அறியமுடியாதவர்களுக்குப் பயன்படும்படி ஆசார்யோபதேசத்தின் ஸாரத்தையே இங்கு உரைப்போமென்றவாறு.

எழுதுமின் என்பது தளை வழுவுமாதலின் "உள்ளே யெழுதுமினே" யென்று பாடங்கொள்ளத் தகாது. 8

162 சிறைநிலை யாம்பவத் திற்சிறு தேனின்ப முண்டுழல்வார்
மறைநிலை கண்டறி யாமயல் மாற்றிய மன்னருளே
துறைநிலை பார மெனத்துளங் காவமு தக்கடலா
மிறைநிலை யாமுரைத் தோமெந் தருக்க ளியம்பினவே. 9

உரை — சிறை நிலை ஆம் பவத்தில் — சிறையின் தன்மையுள்ள ஸம்ஸாரத்தில், சிறு தேன் இன்பம் — ஒருதுளி தேன்போல (அற்பமான) ஸுகத்தை, உண்டு உழல்வார் — அநுபவித்து (அதிலேயே) மண்டியிருப்பவர்களுடைய (தாம), மறை நிலை — வேதத்தின் தாத்பர்யத்தை, கண்டு அறியா — தெளிந்து அறியமுடியாத(படி செய்வதுமான), மயல் மாற்றிய — அஜ்ஞானத்தைப் போக்கிய, மன் அருளே — வலிய கருணையினால், எம் தருக்கள் இயம்பின — எங்கள் ஆசார்யர்கள் உபதேசித்தபடி, துறை நிலை பாரம் என — (ஆனந்தக் கடலில் இறங்கும்) துறையும் நிலையான நிற்குமிடமும் (ஸம்ஸாரத்தின் அக்)கரையும் என்று கூறும்படி, துளங்கா — நிலைகலங்காத, அமுதக் கடல் ஆம் — அம்ருதமயமான ஸமுத்ரமாகிய, இறை நிலை — எம்பெருமானுடைய ப்ரகாரத்தை, யாம் உரைத்தோம் — யாம் (இவ்வதிகாரத்தில்) வெளியிட்டோம்.

ஆசார்யர்கள் ஸம்ஸாரத்தில் உழலும் சேதநரிடம் நின்று வேதார்த்தத்தை அறியமுடியாமற் செய்யும் அஜ்ஞானத்தை ஒழிக்கவல்ல தமது அருளால் எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை எமக்கு உபதேசித்தபடியே இவ்வதிகாரத்தில் விளக்கினேமென்றவாறு. ௯

பிறமதங்களைக் கண்டிப்பதன் பயன் கூறப்படுகின்றது—

163 வெறியார் துளவுடை வித்தகன் றன்மையின் மெய்யறிவார்
குறியார் நெடியவ ரென்றொரு குற்றம் பிறர்க்குரையா
ரறியார் திறத்தி லருள்புரிந் தாரண நன்னெறியாற்
சிறியார் வழிக ளழிப்பதுந் தீங்கு கழிப்பதற்கே 10

[ *பாசுரம் 10, 11– ஸமுதாயதோஷாதிகாரம்* ]

உரை — வெறி ஆர் துளவுடை — *வாஸனை மிகுந்த திருத்துழாயையுடையவனும்,* வித்தகன் — *அதிசயச்செய்கையையுடையவனுமான எம்பெருமானுடைய,* தன்மையின் — *ஸ்வபாவத்தின்,* மெய் அறிவார் — *உண்மையை அறிந்த ஆசார்யர்கள்,* பிறர்க்கு — *பிறர்விஷயத்தில்,* குறியார் நெடியவர் என்று — *குள்ளமானவர் உயரமானவர் என்றுபோன்ற (அற்பமான),* ஒரு குற்றம் உரையார் — *ஒரு தோஷத்தையும் சொல்லமாட்டார்கள்* (*அப்படியாயின்*) ஆரண நல் நெறியால் — *வேதத்தைத்தழுவிய சிறந்த மார்க்கத்தைக்கொண்டு,* சிறியார் — *அற்பர்களான பிறமதத்தாருடைய,* வழிகள் அழிப்பதும் — *ஸித்தாந்தத்தைக் கண்டிப்பதும்,(எதற்காக வென்றால்),* அறியார் திறத்தில் — (*நம ஸித்தாந்தத்தை*) *அறிந்துகொள்ளாத பாமரர் விஷயத்தில்,* அருள் புரிந்து — *கருணையை வைத்து,* தீங்கு கழிப்பதற்கே — (*பிறமதங்களின் தோஷம் தெரியாததால் அவர்களுக்கு வரும்*) *கெடுதியை நீக்குவதற்கே* (*யன்றி வேறில்லை*)

*காமக்ரோதங்களற்ற பெரியோர் பிறர்மீது குற்றங்கூறத் துணியார் ஆயினும், பிறமதங்களைக் கண்டிப்பது, ஸாமாந்யர்களான அதிகாரிகள் பிறமதஸ்தரின் வஞ்சனைக்குட்பட்டுக் கெடாதவாறு பிறமதங்களின் தோஷத்தை அறிவதற்காகவே என்றவாறு* 10

இனி ஒவ்வொரு மதத்தையும் தனித்தனியே விளக்கிக் கண்டிக்கத் தொடங்கி, இப்பாசுரத்தில், சிற்சில ப்ரதாநமான அம்சங்களில் பொதுவான கொள்கையுள்ள மதங்களை ஒவ்வொரு வகுப்பாக்கி நான்குவகையாகப் பிரித்துக்கூறுகின்றார்—

*எண்சீராசிரியவிருத்தம்*

164 மீண்டுரைக்க விரகுதருந் தருக்கங் கொண்டே
வேண்டுங்கால் வேண்டுவதே விளம்பு கின்றார்
கண்டதற்கு விபரீதங் கத்து கின்றார்
காணாத குறைமறையிற் காட்ட நிற்பார்

பண்டொருத்தன் கண்டுரைத்தே னேனே யென்னப்
பலவகையி லுபாதிகளாற் படிந்து வீழ்வார்
கொண்டலொக்குந் திருமேனி மாயக் கூத்தன்
துரைகழல்சேர் விதிவகையிற் கூடா தாரே 11

உரை — மீண்டு உரைக்க – (மேன்மேலும்) வித்தண்டாவாதம் பேசுவதற்கு, விரகு தரும் – இடம் கொடுக்கின்ற தருக்கம் கொண்டே — குயுக்திகளைமாத்திரம் கொண்டு, வேண்டுங்கால் – (தமக்கு) வேண்டிய ஸமயத்தில், வேண்டுவதே – இஷ்டமான விஷயத்தை (தாம் தோன்றியபடி). விளம்புகின்றார் – கூறுகின்றவ(ரான கணாத-கௌதம-வையாகரண-மீமாம்ஸக)ரும், கண்டதற்கு – (தாம்) நேரில் கண்டதற்கு, விபரீதம் – மாறுபட்ட விஷயங்களை, கத்துகின்றார் – ஆரவாரமாகப் பேசுகின்றவராக (ளான பாஸ்கர–யாதவ–அத்வைதிக)ளும், மறையில் – (அபௌருஷேயமான) வேதத்தில், காணாத குறை – காணமுடியாத (பௌருஷேயமென்னும்) குற்றத்தை, காட்ட நிற்பார்—எடுத்துக்கூறநிற்பவ(ரான சார்வாக—பௌத்த—ஜைந)ரும், பண்டு ஒருத்தன் – முன்பு (கபிலர், ப்ரஹ்மா, பசுபதி ஆகியவர்களில்) ஒருவன், நானே கண்டு உரைத்தேன் என்ன – நானே (இந்த மதத்தைக்) கண்டுபிடித்து உபதேசித்தேன் என்றுகூற, பல வகையில் உபாதிகளால் – பலவகைப்பட்ட (பொருளாசை, ஆஹாரஸௌகர்யம் முதலிய) காரணங்களால், படிந்து–(அந்தந்த மதத்தில்) ஈடுபட்டு, வீழ்வார்—அழிந்துபோகின்றவ(ர்களான ஸாங்க்ய– யோக– சைவர்) களும் (ஆகிய நால்வகையினரும்), கொண்டல் ஒக்கும் திருமேனி – மேகத்தைப்போன்ற திருமேனியையுடைய, மாயக் கூத்தன் – அதிசயச்செய்கையுள்ள எம்பெருமானுடைய, துரை கழல் சேர் – ஒலிக்கின்ற கழல (பூண்ட திருவடி) களைச் சேருவதற்குரிய, விதி வகையில் கூடாதாரே–பாக்யவிசேஷம் கிடைக்கப் பெறாதவரே (ஆவர்).

பிறமதத்தினருக்கு எம்பெருமானைச் சேர்ந்து அநுபவிக்கும் பாக்ய மில்லை என்றதாயிற்று இவ்வாறு பொதுப்படையான தோஷங்களைக் கூறியதாலேயே இந்த ரஹஸ்யத்தில் இவ்வதிகாரத்திற்கு 'ஸமுதாயதோஷாதிகார'மென்ப பெயர் வந்தது 11

இனி வரும் இரண்டு பாசுரங்களால் சார்வாகமதம் கண்டிக்கப் படுகின்றது—

கட்டளைக்கலித்துறை

165 கண்டது மெய்யெனிற் காணு மறையி லறிவுகண்டோங்
கண்ட தலாத திலதெனிற் கண்டிலங் குற்றமிதிற்
கண்டது போன்மறை காட்டுவ துங்கண்ட தொத்ததனு
லுண்டது கேட்டு முலோகா யதரொன்று மீறுவதே 12

[ பாசுரம் 12, 13– லோகாயதிகபங்காதிகாரம் ]

உரை — கண்டது – ப்ரத்யக்ஷத்தால் கண்ட வஸ்து, மெய் எனில் – உண்மையானதாகும் என்று கொள்வதாயின், காணும் மறையில் – ப்ரத்ய க்ஷத்தால் அறியப்படுகின்ற வேதத்தால், அறிவு கண்டோம் – ப்ரத்யக்ஷ மாக ஜ்ஞானம் (உண்டாவதைக்) காண்கிறோம் கண்டதல்லாதது – (மேலும்) ப்ரத்யக்ஷத்தால் அறியப்படாத வஸ்து, இலது எனில் – உண்மையல்ல வென்று கூறுவதாயின், இதில் – (வேதத்தால் உண்டாகும்) இந்த ஜ்ஞானத் தில், குற்றம் – ஒரு தோஷத்தையும், கண்டிலம் – காணவில்லை கண்டது போல் – ப்ரத்யக்ஷத்தை (ப்ரமாணமாக ஏற்றுக்கொள்வதை)ப்போல, மறை காட்டுவதும் – வேதத்தால் உண்டாகும் ஜ்ஞானமும், கண்டதோத்ததனால் – ப்ரத்யக்ஷமென்னும் ப்ரமாணத்தையே ஒத்திருப்பதால், உண்டது கேட்கும்– தாம் உண்டதையே பிறரைக் கேட்டுத் தெரிந்துகொள்ப (வரைப்போன்ற) வர்களான, உலோகாயதர் – சார்வாகமதத்தினர், என்று மீறுவது ? – எப்பொழுது (இவற்றை) மீறிப்பேசமுடியும் ?

சார்வாகமதக் கொள்கை— ப்ரத்யக்ஷம் ஒன்றே ப்ரமாணமாகும் ப்ரத்யக்ஷத்தால் அறியப்படும் வஸ்துக்களே உண்மையானவை ப்ரத்ய க்ஷத்தால் காணப்படாத வஸ்துக்கள் பொய்யானவையே (ப்ரத்யக்ஷத் திலும் தோஷம் ஒன்றுமில்லாமலிருக்கவேண்டும்) ஆதலின் வேதத்தில் கூறப்பட்டுள்ள தர்மம், அதர்மம், ஈச்வரன், பரலோகம் முதலிய ஸகலமும் ப்ரத்யக்ஷத்தால் காணப்படாமையால் பொய்யேயாம்—என்பதாம்

இவ்வாறு சார்வாகர் ப்ரத்யக்ஷமொன்றையே ப்ரமாணமாகக் கொண்டாலும், வேதத்தில் கூறப்படும் வஸ்துக்களை உண்மையென்று இசைந்தேயாகவேண்டும் எவ்வாறெனில்— கல்வி கற்று வ்யுத்பத்தியுள்ள வர்கள் வேதவாக்யங்களைத் தமது காதினால் கேட்கும்போதே அவற்றின் அர்த்தம் அவர்களுக்கு ஒருவாறு விளங்குகின்றதென்பது வெளிப்படை யான விஷயம் இப்பொழுது வேதமும் அதனால் உண்டாகும் அர்த்த ஜ்ஞானமும் ப்ரத்யக்ஷமாகவே ஆகிவிடுகின்றனவன்றோ ? ஆகவே ப்ரத்ய க்ஷத்தையே ப்ரமாணமாகக்கொண்ட சார்வாகரும் வேதத்தையும் அதனால் உண்டாகும் ஜ்ஞானத்தையும் ப்ரமாணமாகக் கொண்டு அவற்றுக்குப் புல னான தர்மம் அதர்மம் முதலியவற்றை உண்மையென்று இசையவேண்டிய தாயிற்றென்பது முதலடியாற் கூறப்பட்டது

ஆயினும் வேதத்தால் உண்டாகும் ஜ்ஞானத்தை ப்ரமமாகக் கொண்டு அந்த ஜ்ஞானத்திற்குப் புலனான வஸ்துக்களைப் பொய்யென்று மறுபடியும் அவர்கள் ஆக்ஷேபிக்கத் துணியலாம் இதற்கும் இடமில்லை. எவ்வாறெனில்— ஒரு ஜ்ஞானத்தில் ஏதாவது தோஷம் இருந்தாலன்றோ அந்தஜ்ஞானத்தை ப்ரமமென்னலாம். இங்கு வேதத்தால் உண்டாகும் ஜ்ஞானத்

தில் ஒரு தோஷமும் ப்ரத்யக்ஷமாகக் காணப்படவில்லை. ஆதலின் தோஷ மொன்றுமில்லையென்றே அவர்கள் அவசியம் இசையவேண்டியதாயிற்று. தோஷமாவது— ஜ்ஞானத்தை உண்டாக்கும் ஸாதநத்தில் ஏதாவது குற்றம் ஒருவராலும் இயற்றப்படாது அபௌருஷேயமாய் நித்யமாய்ப் ப்ரகாசிக்கும் வேதத்திலோ அதனால் உண்டாகும் ஜ்ஞானத்திலோ எவ்வித தோஷமும் காணப்படாததால் ப்ரத்யக்ஷமாகக் காணப்படாத வஸ்துவைப் பொய் யெனக் கொள்ளும் சார்வாகரும் வேதத்தால் அறியப்படுகின்ற வஸ்துவைப் பொய்யெனக் கொள்ளமுடியாதென்பது இரண்டாமடியால் கூறப்பட்டது.

ஆகவே தோஷம் ஒன்றுமில்லாத ப்ரத்யக்ஷத்தைச் சார்வாகர் ப்ரமாணமாகக் கொண்டாற்போல் தோஷம் ஒன்றுமில்லாத வேதத்தால் உண்டாகும் ஜ்ஞானமும் ப்ரத்யக்ஷத்தைப்போலாவதுபற்றி அதையும் ப்ரமாணமாகக்கொண்டு நமது இந்த்ரியங்களுக்குப் புலப்படாமல் வேதத்தால்மாத்திரம் விளக்கப்படுகின்ற ஸகலவஸ்துக்களையும் மெய்யாகக் கொள்ளவேண்டியதாயிற்று என்பது மூன்றாமடியால் கூறப்பட்டது.

உலகில் ஒருவன் தானுண்ட வஸ்துவின் சுவை எத்தகையதென்று மற்றொருவனிடம் கேட்டு ஆராயத்துணிவானாகில் அவனை அவிவேகி என்போம். அங்ஙனே ப்ரத்யக்ஷமொன்றே ப்ரமாணமென்று கொள்ளும் தம் மதத்தின்படியே வேதத்தை ப்ரமாணமாகக்கொண்டு அதிற்கூறிய அனைத்தையும் மெய்யாகக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்ட பிறகும் சார்வாகர் இதைப்பற்றிச் சர்ச்சை செய்யப்புகுவது முற்கூறிய அவிவேகத்தனமையை ஒத்ததாகும். ஆதலால் அந்தச் சார்வாகர் இவ் வம்சங்களை மீறிப் பேசுவது எப்பொழுது? ஒருபோதுமில்லையென்பது கடைசியடியால் கூறப்பட்டது. 12

சார்வாகரின் கொள்கையும் செய்கையும் ஒன்றுக்கொன்று முரண் படுதல் விளக்கப்படுகின்றது —

எண்சீராசிரியவிருத்தம்

166 கண்டதனுற் காணுத தனுமிக் கின்றார்
கண்டோருத்த னுரைத்ததனைக் கவரு கின்று
னுண்டுபசி கெடுமென்றே யுணர்ந்துண் கின்று
ரொன்றாலே யொன்றைத்தாஞ் சாதிக் கின்றார்
பண்டுமழை யுண்டதனன் மழையுண் கின்றார்
பார்க்கின்றார் பலவல்லாத் தம்மை மற்றுங்
கண்டுமதி கெட்டநிலை காண கில்லார்
காணுத தில்லதென்று கலங்கு வாரே. 13

உரை — காணுதது — ப்ரத்யக்ஷத்தால் அறியப்படாத வஸ்து, இலது என்று — (முயற்கொம்புபோல்) சூந்யம் என்று, கலங்குவார் — மனக் கலக்கமுள்ள சார்வாகர், கண்டதனால் — ப்ரத்யக்ஷத்தால் அறிந்த வஸ்து வைக்கொண்டு, காணுதது — (ப்ரத்யக்ஷத்தால்) அறியப்படாத வஸ்து இருப் பதை, அனுமிக்கின்றார் — ஊஹித்தறிகின்றனர் ஒருந்தன் கண்டு — வேறு ஒருவன் (ப்ரத்யக்ஷத்தால்) அறிந்து, உரைத்ததனை — கூறிய விஷயத்தை, கவருகின்றார் — ஏற்றுக்கொள்கின்றனர் உண்டு — உண்ட பிறகு, பசி கெடும் என்றே — பசி தொலைந்துபோம் என்றே, உணர்ந்து உண்கின்றார் — அறிந்து உண்கின்றனர் ஒன்றாலே — ஒரு ஸாதநத்தாலே, ஒன்றை — ஒரு வஸ்துவை, தாம் சாதிக்கின்றார் — தாங்கள் ஸாதித்துக்கொள்கின்றனர். பண்டு முலை உண்டு — முன்ஜந்மத்தில் தாய்ப்பாலைப் பருகி, அதனால் முலை உண்கின்றார் — அந்த வாஸனையால் (இந்த ஜந்மத்திலும்) தாய்ப்பாலைப் பருகுகின்றனர். மற்றும் — மேலும், பல அல்லாத் தம்மை — (கை கால் முதலிய) பல அவயவங்களைக்காட்டிலும் வேறுபட்டுநிற்கும் தம ஜீவாத்ம ஸ்வரூபத்தை, பார்க்கின்றார் — (இது என் சரீரம், இது என் கை என்ற முறையில் ப்ரத்யக்ஷத்தாலேயே) அறிகின்றனர் கண்டும் — (இப்படித் தம் ஸித்தாந்தத்திற்கு விரோதமான விஷயங்களை) அறிந்தும், மதிகெட்ட நிலை— புத்திகெட்டுத் தாம் பிதற்றும் நிலையை, காணகில்லார் — (தாங்கள்) அறிந்து கொள்ளவில்லை

சார்வாகர், தாம் நேரில் கண்ட புகையைக்கொண்டு காணுத அக்நி இருப்பதாய் அநுமாநம் செய்கின்றனர், மற்றொருவன் நேரில் கண்டு கூறிய விஷயத்தை நம்பி ஏற்றுக்கொள்கின்றனர். இவற்றால் அவர்கள் முறையே அநுமாநத்தையும் சப்தத்தையும் ப்ரமாணமாக ஏற்றுக்கொண்டதாயிற்று. மேலும் அவர்கள் பசியுள்ளபொழுது உணவுகொண்டால் பசி நீங்கும் என்று அறிந்தே உணவுகொள்கின்றனர் உண்டால் பசி நீங்குமென்பதை உண்பதற்குமுன் அவர்கள் ப்ரத்யக்ஷத்தால் அறிந்ததில்லையன்றே, மேலும் ப்ரதிவாதிகளிடம், இருவரும் இசைந்த ஒரு காரணத்தைக் கூறி, காணுத வஸ்து இருப்பதாய் ஸாதிக்கின்றனர். இவற்றாலும் அவர்கள் அநுமாநத் தையும் சப்தத்தையும் இசைந்ததாயிற்று மேலும் நேரில் கண்ட தேஹத் தைத் தவிரக் காணுத ஆத்மாவென்று ஒன்று இல்லையென்று கொண்ட சார் வாகர், குழந்தை பிறந்ததும் தன் தாய்ப்பாலைப் பருகுவதற்கு முற்பிறப் பின் வாஸனையைக் காரணமாகக் கூறுவதன்றி, அதற்கு அவர்கள் வேறு வழிகூற இடமில்லை இதனால் சரீரத்தைத் தவிர நித்யமான ஆத்மா இருப்பதாய் அவர்களும் இசையவேண்டியதாயிற்று மேலும், சரீரத்தையே ஆத்மாவாகக் கொண்ட சார்வாகர் 'என் சரீரம், என் கை, என் கால்' என்ற முறையில் ப்ரத்யக்ஷத்தால் பார்க்கும்போது "என்னுடைய" என்ற

உணாசசியையுடைய ஆதமாவைச சரீரம முதலியவறறிற காட்டிலும வேருகவே பாாகின்றனரன்ரு? இப்படித தம கொளகைகளுக்கும செயகைகளுக்கும பல முரணபட்ட அமசஙகளைத தாஙகள அறிநதும மதி கெட்டுத தஙகள கொளகைகளை விடாதிருககின்றனா எனறு கருதது 13

பௌத்தமதத்தினர், மாத்யமிகர்– யோகாசாரர்– ஸௌத்ராந்திகர்– வைபாஷிகர் என நால்வகைப்படுவர் இனி இரண்டு பாசுரங்களால் மாத்யமிகமதம் கண்டிக்கப்படுகின்றது —

கட்டளைககலித்துறை

167 காணு திலதெனுங் கல்வியி ஞரைக் கடிந்ததற்பின்
கோணர் குதர்க்கங்கள் கொண்டே குழப்பும் பவுத்தர்களி
ஞணு தனைத்து மிலதென்று நால்வகை யன்றிதென்றும்
வாணு ளறுக்கின்ற மத்திமத் தான்வழி மாற்றுவமே. 14

[ பாசுரம 14, 15– மாதயமிகபஙகாதிகாரம ]

உரை — காணு(த)து—(ப்ரதயகூததால) காணபபடாத வஸது, இலது—இடையாது, எனும் கல்வியினுரை — எனற ஸிததாநதமுடைய சாாவாகரை, கடிந்ததற்பின் — கண்டிததபின, கோண் ஆர் — வக்ரததன்மை நிறைநத, குதர்க்கங்கள் கொண்டே — குயுகதிகளை (ஸாதநமாக)க கொணடே, குழப்பும் பவுத்தர்களில் — (உலகததைக் கலககும) பௌததாகள் நாலவரில, நாணுது — வெட்கமடையாது, அனைத்தும் இலது என்றும் — ஸகலவஸதுவும் இலலையெனறும, இது — இநத பரபஞசம, நால்வகை அன்று என்றும் — நானகுவகையிலும் அடங்காதென்றும (கொணடு), வாழ் நாள் அறுக்கின்ற — (கணவன) வாழும் நாளிலேயே தாலியறுககினற (ஸத்ரீயைப்போன்ற), மத்திமத்தான் வழி — மாதயமிகனுடைய ஸிததாநததததை, மாற்றுவம் — கணடிபபோம்

புததருடைய சீடா நாலவரில் மாதயமிகன் எனபவன "ஸாவம சூந்யம" என்ற கொளகையுடையவன 'ஒரு தததுவமும இலலை' எனறு வாயகூசாது பேசும் இவனே புத்தருக்குப பிரிய சிஷயனும மெய்யான பொருளை 'ஸத்' எனறும், பொயயான பொருளை 'அஸத' என்றும, மெய்யும் பொயயுமான பொருளை 'ஸதஸத்' எனறும, மெயயுமன்றிப் பொய்யுமன்றி நிறகுமதை 'ஸதஸதவிலக்ஷணம' எனறும வழஙகுவதுண்டு. இநத ப்ரபஞசம இநத நாலவகையில எதிலும அடஙகியதனறு என்கிருன் மாத்யமிகன். இவன ஸகலலோகநாதனுய ப்ரகாசிககினற ஈசுவரனையும அவனுககுரிய ப்ரபஞசவஸதுக்களையும இலலையாக்கி, அவன தருளால் பெறும பலனகளையும இழநதவனுதலின, கணவன உயிருடன் வாழும நாளில மதிகெட்டு அவனை வெறுததுத தாலியையறுததுப் போட்ட பெண்போலாகின்ருனெனனபபட்டது. 14

எண்சீராசிரியவிருத்தம்

168 மானமிலை மேயமிலை யென்று மற்றோர்
வாதநெறி யிலையென்றும் வாது பூண்ட
தானுமிலை தன்னுரையும் பொருளு மில்லை
தத்துவத்தி னுணர்த்திசய மில்லை யென்றும்
வானவரு மானவரு மனமும் வெள்க
வளம்பேசு மதிகேடன் மத்தி மத்தான்
றேனநெறி கொண்டனைத்துந் திருடா வண்ணஞ்
செழுமதிபோ லெழுமதியாற் சேமித் தோமே. 15

உரை — வானவரும் – தேவர்களும், மானவரும் – மநுஷ்யர்களும், மனமும் – (தன்) மனமும், வெள்க – கூசும்படி, மானம் இலை – ப்ரமாணம் (ஒன்றும்) இல்லை, மேயம் இலை என்றும் – (ப்ரமாணத்தால்) அறியப் படும் பொருளும் இல்லை என்றும், மற்று ஓர் வாத நெறி – வேறு ஒரு வாதமார்க்கமும், இலை என்றும் – இல்லை என்றும், வாது பூண்ட தானும் இலை – வாதம் புரியும் தானும் இல்லை, தன் உரையும் பொருளும் இல்லை– தன் வாக்யமும் (அதன்) அர்த்தமும் இல்லை, தத்துவத்தின் உணர்த்தி – தத்துவத்தின் அறிவும், சயம் இல்லை என்றும் – (வாதத்தில்) ஜயமும் இல்லை என்றும் (இப்படி ஸர்வம் சூந்யம் என்று கூறி), வளம் பேசும் – (தன் மதத்தின்) பெருமையைப் பேசுகின்ற, மதிகேடன் – அறிவுகெட்டவனாகிய, மத்திமத்தான் – மாத்யமிகன், தேன நெறி கொண்டு – திருட்டு வழியைக் கைக்கொண்டு, அனைத்தும் – ஸகலதத்துவங்களையும், திருடாவண்ணம் – இல்லையாக்காதபடி, செழுமதிபோல் எழும் – பூர்ணசந்த்ரனைப் போல் வ்ருத்தியடைகின்ற, மதியால் – ஜ்ஞானத்தால், சேமித்தோம் – (உலகத்தை அவன் கையினின்று) ரக்ஷித்தோம்.

மாத்யமிகனுடைய மதக்கொள்கைகள் விசித்திரமாயிருப்பனவாதலின் தேவரும் மநுஷ்யரும் அவற்றைப் பரிஹஸிப்பதுடன் அவனுடைய மனமும் பரிஹஸிக்கின்றதாம். அவன் இப்படி ஸகலத்தையும் சூந்யமாக்கி எம்பெருமானையும் சேதநாசேதநங்களையும் இல்லையாக்கிக் கொள்ளை கொள்ளவிடாமல் அவன் மதக்கொள்கைகளைக் கண்டித்து நம் ஸித்தாந்தத்தைக் காத்தோமென்றதாயிற்று. 15

இனி இரண்டு பாசுரங்களால் யோகாசாரமதம் கண்டிக்கப்படுகின்றது—

கட்டளைக்கலித்துறை

169 முற்றுஞ் சகத்தில தென்றே யகட்டிய மூட்டரைநாஞ்
சுற்றுந் துறந்து துறையினின் றேதுக ளாக்கியபின்
மற்றென் றிலது மதிபல வுண்டென்று வஞ்சனையாற்
சற்றுந் துறந்தயோ காசார னைச்சதிக் கின்றனமே. 16

[ பாசுரம் 16, 17– யோகாசாரபங்காதிகாரம் ]

உரை — சகத்து முற்றும் – உலகம் முழுதும், இலது என்றே – இல்லையென்றே, பகட்டிய மூட்டரை – மயக்கிய மூடரான மாயமிகரை, நாம் சுற்றும் துறந்து – நாம் முழுதும் ஒழித்து, துறையில் நின்றே – வேதாந்தமார்க்கத்தில் நிலைபெற்றுநின்றே, துகளாக்கிய பின் – கண்டித்தொழித்த பிறகு, பல மதி உண்டு – பலவிதமான ஜ்ஞானம் உண்டு, மற்று ஒன்று இலது—(ஜ்ஞானத்தைத் தவிர) வேறு ஒருவஸ்துவும் இல்லை, என்று – என்று கூறி, வஞ்சனையால் – வஞ்சிக்கக்கருதியதால், சுற்றும் துறந்த – அற்பபலனையும் இழந்த, யோகாசாரனைச் சதிக்கின்றனம்–யோகாசாரனைக் கண்டிப்போம்.

யோகாசாரனுடைய முக்கியக் கொள்கை — அறிவொன்றே மெய்யான பொருளாகும் அது பலவகைப்படும் அதைத் தவிர அறிபவனும் அறியப்படும் பொருள்களும் இல்லையென்பதாம்.

இவன், அறிபவனை தனனையும் அநுபவிக்கப்படும் வஸ்துக்களையும் இல்லையாக்கியதால் இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கக்கூடிய அற்ப பலனையும் இழந்தானென்பதுபற்றிச ‘சற்றுந் துறந்த’ என்னப்பட்டது. 16

எண்சீராசிரியவிருத்தம்

170 உளக்கதியை நாழுள்ளி யுள்ளந் தேறி
யுலகத்தா ருகந்திசைய வுலதுண் டென்றே
மிளக்கவரி தாகியநற் றருக்கஞ் சேர்ந்த
வெழின்மறையி லீசனுட னெம்மைக் கண்டோம்
விளக்குநிரை போன்மதிகள் வேறய் வேறேன்
றறியாதே விளங்குமென விளம்பு கின்ற
களக்கருத்தன் கண்ணிரண்டு மழித்தோ நாணுக்
காகம்போற் றிரிந்தவனென் கதறு மாறே 17

உரை — நாம் உளக் கதியை – நாம (பிரமாணங்களை அநுஸரித்து நம்)மனம் செல்லுகின்ற முறையை, உள்ளி – ஆராய்ந்து, உள்ளம் தேறி– மனம் தெளிந்து, உலகத்தார் – உலகிலுள்ளோர், உகந்து இசைய – மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளும்படி, உலது உண்டு என்றேம் – உலகத்தை உண்மையென்று விளக்கினோம். இளக்க அரிதாகிய – அசைப்பதற்கு முடியாத, நல் தருக்கம் சேர்ந்த – சிறந்த யுக்திகளுடன் கூடிய, எழில் மறையில் – பெருமையுள்ள வேதத்தில், ஈசனுடன் எம்மைக் கண்டோம் – ஈசுவரனையும் (ஜீவர்களாகிய) எங்களையும் வகுத்தறிந்தோம் மதிகள்—ஜ்ஞானங்கள், விளக்கு நிரைபோல்—தீபத்தின (ஜ்வாலைகளின்) வரிசைபோல, வேறு ஆய் – வெவ்வேறாக இருந்து, வேறு ஒன்று அறியாதே – (தம்மைத் தவிர)

வேறு ஒருவஸ்துவையும் அறியாது, விளங்கும் என — ப்ரகாசிக்கும் என்று, விளம்புகின்ற — கூறுகின்ற, களக் கருத்தன் — கள்ளக் கருத்தை யுடைய யோகாசாரனுடைய, கண் இரண்டும் — இரண்டு கண் (போல முக்கியமான "அறிபவன பொய்", "அறியப்படும வஸ்துவும் பொய்" என்ற அம்சங்)களையும், அழித்தோம்–(ஒருவரும இசையாமல) ஒழித்தோம அவன் — அந்த யோகாசாரன, நாணுக் காகம்போல் திரிந்து — வெட்கமற்ற காகாஸுரனைப்போல அலைந்து, கதறுமாறு என்–கதறுமவிதம்என்னதகையது!

யோகாசாரனுடைய கொள்கை — ஒவ்வொரு க்ஷணத்திலும ஜ்ஞானம் புதிதுபுதிதாய் உண்டாகி அடுத்த க்ஷணத்திலேயே நசித்துவிடுகின் றது. இந்த ஜ்ஞானம தன்னைத்தவிர வேறு ஒரு வஸ்துவையும தனக்கு இலக்காகக் கொள்ளாது ஆதலின வெளிப்படையான பொருள் களே கிடையா. க்ஷணந்தோறும உண்டாகிக்கொண்டிருக்கும் ஜ்ஞானங் களின் ஸந்ததியே ஆத்மாவெனப்படுகின்றது. ஆனால்—இப்படியாயின் ஆத்மா அநித்யமென்று ஏற்படுகின்றது, "அதே ஆத்மா" என்று உண்டாகும ஜ்ஞானத்தாலோ ஆத்மா ஸ்திரமென்று தெரிகின்றது ஆதலால ஒன்றுக் கொன்று முரணபடுகின்றதேயெனனில, தீபத்தின் ஜ்வாலை க்ஷணந்தோறும் வெவ்வேறாயினும ஜ்வாலை ஒரேவிதமாயிருப்பதுபற்றி 'அதே தீபஜ்வாலை' யென்று அறிவுண்டாவதுபோல ஜ்ஞானமும ஒரேவிதமாய் உண்டாவதால 'அதே ஆத்மா' என்ற அறிவு உண்டாகின்றது—என்பதாம.

ஸித்தாந்தியான நாம, அவன் இல்லையாக்கிய சேதந - அசேதந - ஈச்வர தத்துவங்களை பரமாணம, அதைத் தழுவிய யுக்தி முதலியவற்றைக் கொண்டு ஸ்தாபித்தோம மேலும, அவன், தன் மதத்தில் இருகணகளைப் போல முக்கியமாய்க்கொண்டிருந்த "அறிபவன பொய்" "அறியப்படும் வஸ்துவும பொய" என்ற இரண்டு கொள்கைகளையும கண்டித்து அவன் மதத்தைப் பாழாக்கினோம பிராட்டியிடம அபராதியான காகாஸுரன் காப்பாரின்றி வெட்கமற்று உலகில திரிந்ததுபோல இரண்டு கொள்கை யையுமிழந்த அவனும கதறித் திரியுமாறு செய்தோமென்றவாறு. 17

இனி இரண்டு பாசுரங்களால் ஸௌத்ராந்திகமதம் கண்டிக்கப்படுகின்றது—

71 கட்டளைக்கலித்துறை

பொருளொன் றிலதென்று போதமொன் றுங்கொண்ட பொய்யரைநாந் தெருள்கொண்டு தீர்த்தபின் காணவொண் ணுப்பொரு டேடுகின்ற மருள்கொண்ட சூதுரைக் குஞ்சௌத் திராந்திகன் வண்ணிக்கைநா மருள்கொண்ட பாழ்ங்கிண றென்றிகழ்ந் தோட வியம்புவமே. 18

[ பாசுரம 18, 19– ஸௌத்ராந்திகபங்காதிகாரம் ]

உரை — பொருள் ஒன்று – (வெளிபபடையான) வஸது ஒனறும், இலது என்று– இலலையெனறு (நிசசயிததது), போதம் ஒன்றும் கொண்ட — ஜஞானம் எனற ஒரே வஸதுவைககொணட, பொய்யரை — பொயயே பேசும யோகாசாராகளை, நாம் தெருள் கொண்டு – நாம (சிறநத) ஜஞானத தைககொணடு, தீர்த்த பின் — கணடிததபின, காண வொண்ணுப் பொருள்— ப்ரதயகூததால அறியமுடியாத வஸதுவை (உணடு என்று அஙகீகரித்து), தேடுகின்ற — அநுமானததாலே ஸாதிகக முறபடுகினற (வனும), மருள் கொண்ட — அஜஞானததால கைககொணட, சூது உரைக்கும் — கபடயுகதி களைப் பேசுகின்ற (வனுமான), சௌத்திராந்திகன் — ஸௌதராநதிக னுடைய, வண்ணிக்கை—மதவாணடபரகாரததை, இருள் கொண்ட — இருள் நிறைநத, பாழ்ங்கிணறு என்று — பாழுஙகிணறு எனறு (ஜநஙகள் நினைத்து), இகழ்ந்து ஓட — வெறுதது விலகுமபடி, நாம் இயம்புவம் — நாம (கணடிததுப்) பேசுவோம

ஸௌதராநதிகன அநுமானததைககொணடு வெளிப்படைப் பொருளகளை ஸாதிககுமபோது அவனமதததில கபடயுகதிகளே நிறைந் திருபபதுபறறி இருளடைநத பாழுஙகிணறு உவமானமாககபபடடது 18

எணசீராசிரியவிருததம

172 நிலையில்லாப் பொருண்மதியை விளைத்துத் தான்சேர்
நிறங்கொடுத்துத் தானழியுந் தன்னுல் வந்த
நிலையில்லா மதிதன்னி னிறத்தைக் காணு
மிதுகாணும் பொருள்காண்கை யென்ற நீசன்
முலையில்லாத் தாய்கொடுத்த முலைப்பா லுண்ணு
முகமில்லா மொழியெனவே மொழிந்த வார்த்தை
தலையில்லாத் தாளுருங் கணக்காய் நின்ற
கட்டளைநாங் கண்டின்று காட்டி னேமே. 19

உரை — நிலையில்லாப் பொருள் – நிலையற்ற (க்ஷணிகமான) வஸதுவானது, மதியை விளைத்து – ஜஞானததை உணடாககி, தான்சேர்— தான அடைநத, நிறம் கொடுத்து – (நீலம, மஞசள முதலிய) நிறஙகளை (அநத ஜஞானததில்)கொடுதது, தான் அழியும்–(வஸதுவாகிய) தான் அழிநது போம தன்னுல் வந்த–(வஸதுவாகிய) தனனால உணடான, நிலை யில்லா மதி – அநித்யமான ஜஞானமானது, தன்னில் நிறத்தைக் காணும் — தன் னிடததில (நீலம, மஞசள முதலிய) நிறஙகளை ஸாக்ஷாத்கரிககும. இது காணும் – இ(ப்படி ஜஞானம தன்னிடத்து நிறஙகளைக காணப)துவே, பொருள்காண்கை — வஸ்துஸாக்ஷாதகாரமாகும, என்ற — எனறு னித்

-தாநதம கொண்டவனும, மூலையில்லாத் தாய் கொடுத்த — ஸதநமில்லாத தாயினுலை கொடுககப்பட்ட, மூலைப்பால் உண்ணும் — ஸதநயததைப் பருகுமவ (ன போனறவ) னுமான, நீசன் — அறபனை ஸெளதராநதிகனுலே, மூகமில்லா — வாய இல்லாமற பேசுகிற, மொழி எனவே — வாாததை என்று கூறுமபடி, மொழிந்த வார்த்தை — கூறப்பட்ட (தன் ஸிததாநத) வாகயமானது, தலையில்லா — தலையில்லாத, தாளுநும் — பாதஙகள நடககின்ற, கணக்காய் நின்ற கட்டளை — ரீதியிலே நிறகினற பாகாரததை, நாம் கண்டு— நாம அறிநது, இன்று காட்டினேம்— இன்று வெளியிட்டோம்

ஸெளதராநதிகன யோகாசாரனைப்போல வெளிபபடைபபொருள்கள (பாஹயவஸதுககள) இலலையெனறு கொளவதிலலை; அவறறை ஏற்றுககொளகினருன். அவனகொளகை— வெளிப்பொருள்கள் ஜ்ஞாநத்தையுணடாககித தமமுடைய வெணமை மஞசள முதலிய நிறஙகளை அநத ஜ்ஞாநததினிடம கொடுததுத தாம அழிநதுவிடுகினறன. ஆதலின அழிவதே தன்மையாயுளள அநதப் பொருளகளை இநதரியங்களால அறியமுடியாது ஆனுல அபபொருளகள் அழிநதுபோய்விடினும, ஜ்ஞாநததில கொடுதத நீலம வெணமை முதலிய நிறஙகளைக கொணடு அநுமாநம செயது அபபொருளகளை அறியலாம. மேலும அநதப பொருளகளால உணடாககப்பட்ட ஜ்ஞாநமும ஒரே க்ஷணம இருநது நசிககின்றது. இநத ஜ்ஞாநமே ஆதமாவெனப்படும இநத ஜ்ஞாநம் வெளிப்பொருளகளால தனனிடம கொடுககப்பட்ட நீலம் மஞசள் முதலிய நிறங்களை அநுபவிககும் இவவநுபவமே வஸதுஸாக்ஷாதகாரம் எனப்படும—எனபதாம்

இககொளகையில—வஸது, தான பிறந்த பிறகே ஜ்ஞாநத்தை உண்டாககவேணடுமாதலின், க்ஷணகாலமே இருநது அழிநதுவிடுவதாய்க கொணடுளள அநத வஸது, ஜ்ஞாநம பிறககும் க்ஷணததிலேயே நசிததுவிடுமென இசைநதேயாகவேணடும. ஜ்ஞாநம பிறநது அடுதத க்ஷணததில் தான அதனிடம வஸது, நீலம் மஞசள முதலிய நிறங்களைக கொடுக்க முடியும ஆகவே தான பிறநது, இரணடாவது க்ஷணததில அழியுநதனமை வாயநத வெளிப்பொருள், மூன்ருவது க்ஷணததில ஜ்ஞாநத்தினிடம நீலம முதலிய நிறததைக கொடுப்பதாய இசையவேண்டும். அது முறறிலும் அஸம்பாவிதமாகும மேலும அங்ஙனமே ஜ்ஞாநமும க்ஷணகாலமே இருந்து அழிநதுவிடுவதால, தான் பிறநத இரணடாவது க்ஷணததில வெளிப்பொருளினிடமிருநது நீலம முதலிய நிறததைப பெறுவதும அதறகு அடுத்த க்ஷணததில் தன்னிடம கொடுககப்பட்ட நிறத்தைப பாாததலாகிய வஸ்துஸாக்ஷாத்காரமும அஸமபாவிதமேயாம். இவறறைப்பற்றியே ஸெளதராநதிகனகொளகைககு ஸதநமில்லாத தாயினிடத்து ஸ்தநயபாநம்

செய்வதும் முகமில்லாமற் பேசும் வார்த்தையும் தலையில்லாது பாதம் வளர்வதும் உவமானமாகக் கப்பட்டன. 19

இனி இரண்டு பாசுரங்களால் வைபாஷிகமதம் கண்டிக்கப்படுகின்றது—

கட்டளைக்கலித்துறை

173 காண்கின் றவனிலை காட்சியுங் கண்டது முண்டவைதா
மேண்கொண் டனவன் றிவற்றிற் குணமு நிலையுமிலை
சேண்கொண்ட சந்ததி யாற்சேர்ந்து மொன்றென நிற்குமென்ற
கோண்கொண்ட கோளுரை வைபா டிகன்குறை கூறுவமே.

[ பாசுரம் 20, 21– வைபாஷிகபங்காதிகாரம் ]

உரை — காண்கின்றவன் – வஸ்துக்களை அறிபவனாகிய ஜீவன் என்பவன், இலை – இல்லை, காட்சியும் – அறிதல் எனும் செய்கையும், கண்டதும்– அறியப்படுகின்ற வஸ்துவும், உண்டு– உண்மையாய் உள்ளவை, அவைதாம் – அந்த அறிகையும் அறியப்படும் வஸ்துவும், ஏண் கொண்டன அன்று – எண்ணிக்கைக்கு அடங்கியனவன்று, இவற்றில் – இந்த அறிகையிலும் அறியப்படுமவற்றிலும், குணமும் நிலையும் இலை – ஒரு குணமும் நிலைத்துநிற்கும் தன்மையும் இல்லை, சேண்கொண்ட – நெடுங்காலவாழ்வைக்கொண்ட, சந்ததியால் – வரிசையினால், சேர்ந்தும் – (பரமாணுக்கள் ஒன்று) கூடியும், ஒன்று என – ஒன்று என்று கூறும்படி, நிற்கும் என்ற – நிற்கும் என்று கூறிய, கோண் கொண்ட – வக்ரத்தன்மை கொண்ட, கோளுரை–குறளைமொழி பேசுகின்ற, வைபாடிகன்–வைபாஷிகனிடமுள்ள, குறை கூறுவம் – தோஷங்களை விளக்குவோம்

வைபாஷிகன் கொள்கை— பொருளை அறிபவனை ஜ்ஞாதா பொய்யாவான்; ஜ்ஞானமும் அந்த ஜ்ஞானத்தால் அறியப்படும் வஸ்துவுமே உண்மைப்பொருள்களாம் அந்த ஜ்ஞானமும் அறியப்படும் வஸ்துவும் எண்ணுக்கடங்காமலிருப்பவை அவையிரண்டுக்கும் குணமே கிடையாது, நிலைத்துநிற்காமல் க்ஷணகாலமே இருந்து அழியும். வஸ்துக்கள் பரமாணுரூபமாகவே இருக்கும் இப்படியாயின, எண்ணற்ற பரமாணுக்களே குடத்தின் உருக்கொண்டனவென்று தோவதால 'அதே குடம் இது' என்று ஒன்றாகவும் நிலைத்துநிற்பதாகவும் தோற்றுவது எவ்வாறு பொருந்துமென்னில், பரமாணுக்கள் எண்ணற்றவையாயினும் அவற்றின் குவியல் ஒன்றேயாதலின 'குடம் ஒன்று' என்ற எண்ணமும், க்ஷணமே இருந்து அழிபவையாயினும் தீபத்தின் சுடர்கள் ஒரேவிதமாயிருத்தலால் 'அதே சுடர்' என்று அறிவு உண்டாவதுபோல பரமாணுக்கள் ஒரேவிதமாயிருப்பதுபற்றி 'அதே குடம்' என்ற எண்ணமும் உண்டாகின்றன — என்பதாம். 20

(ச் சாதநமு) மிலலாத, அடியோமை — தாஸர்களாகிய எஙகளை, அடைக்கலம்கோண்டு — காக்கபபடவேண்டிய வஸ்துவாகக் கொண்டு, உறவு என நின்ற எலாம் — பநது எனறுகூறும்படி நின்ற எல்லாம், உறவே நின்ற தான் — (தனனிடததில) பொருநதியிருக்கும்படி நின்ற எமபெருமாணுகிய தான, எமக்கு ஆய் — எமமை உஜ்ஜீவிபபிக்கக் கருதி, இன் அருளால் — (தனனுடைய) இனிய கிருபையால, மறு பிறவித் துயா — மறுபடியும ஜநமமாகிய துனபம, வாராவகை — நேரிடாதவாறு (செயது), எங்கள் சோகம் தவிாத்தனன் — எங்கள் துககததைப போககியருளினை.

ஸகலவஸதுககளுககும ஆதாரமாய் நம் மனததில் பொருந்திநிறகும் ஸாவேசுவரன வேறு உபாயஙகளில சகதியற்றுத் தனனைச சாணமடைந்த தாஸாகளாகிய நமமைக காககத திருவுள்ளங்கொணடு மறுபடியும் நமமை இககாமபூமியில் பிறவாதபடி செயது நம துககததைப் போககியருளினை— எனறவாறு

'மா சுசஃ' என்னுநதொடா 'நீ துக்கமடையாதே' என்ற பொருளைத் தருகினறது சேதநனுககுப பலபடிகளில துககம் ஸமபாவிதமாதலின் அததகைய துககஙகள அனைததையும் விட்டுவிடு எனறதாயிறறு. அதன் பொருளவிளககம பினவருமாறு :—

1 பகதியோகமாகிய உபாயம அநுவ்ஷ்டிக்கக் கடிநமாயிருபபதாலும் விரோதிகள் அதிகமாயிருபபதாலும பலனபெற மிகவும காலததாழ்வு ஏற்படுவதாலும உணடான சோகத்தை நீ அடையவேண்டா.

2 ப்ரபததியை நீ அநுஷ்டிததபினபு உன்னைக காககும பொறுப்பு எனனுடையதாகி, அதனல் வரும பலனை அடைபவனும் நானேயாகி, உனனைக காவாவிடில எனககுப பெரிய தீங்கு வரும் எனனலாமபடியான நிலைமையில் நான இருகக, என ஸ்வாதந்த்ரியததாலே உனனைக கைவிட்டு விடுவேன என்று எணணி நீ துக்கமடையவேண்டா.

3 பரபததி ஸகலஜாதியாருக்கும அநுவ்ஷ்டிககத தககதாயிருப்பதால், 'நான இதறகு அதிகாரியலலேன' எனறு சோகிக்கவேண்டா.

4. ப்ரபததி மிக எளிதாய் ஒரேமுறை ஒரேக்ஷணததில் அநுஷ்டிககக் கூடியதாய் வேறு உபாயஙகளையும் வகுத்த அஙகஙகளைத் தவிர வேறு அஙகஙகளையும் எதிாபாராததாய இருபபதால், 'வேறு பெரிய உபாயததை அநுஷ்டிககவேணடுமோ' என்று சோகிக்கவேண்டா.

5 சிறிய உபாயமாகிய பரபத்திக்கு வசப்பட்டுப் பலன்கொடுக்கிற ஸர்வேசுவரனாகிய நான் மிக எளியனாய், மிக நம்பத்தக்கவனாய், கருணை நிறைந்தவனாய், தடையற்ற சுதந்திரமுடையனாயிருப்பதால், வித்தோபாயமாய் நிற்கும் என்மீது ஸந்தேஹித்துச் சோகிக்கவேண்டா

6 பரபத்தியை அநுஷ்டித்தபிறகு என்னுடைய ப்ரீதியையே பலனாகக்கொண்டு வேறு பலனை விரும்பாமல் செய்யும் நித்யநைமித்திக காமங்கள் அனைத்தும் பரபத்திக்கு அங்கமல்லவாகையால், அவற்றை அநுஷ்டிக்கும்போது காலதேசாதிகளைப்பற்றி வரும் குறைகளை நினைந்து அங்கங்களில் குறைவு வருமோவென்று ஐயுற்றுச் சோகிக்கவேண்டா.

7 பரபத்திக்குப்பின் பாபம் நேரிடாதவாறு பரபத்திகாலத்தில் அதற்குக் காரணமான பாபத்திற்கும் சேர்த்து பரபத்திசெய்தோ, அல்லது பாபம் நேர்ந்தபின் ப்ராயச்சித்தமாக ஒரு பரபத்திசெய்தோ தீர்ந்தால், பின் பாகவதாபசாரம் முதலிய பாபங்கள் நேருமோவென்று சோகிக்கவேண்டா

8. அவ்வாறு முன்பே சேர்த்து பரபத்தி செய்யத்தவறி, பரபத்திக்குப் பிறகு தெரிந்தே பாபம் செய்வோருக்கும் ஒருவாறு பாபங்களை நான் போக்கிவிடுவதால், (64-வது பாசுரவுரையிற் காண்க) நரகம் முதலிய துன்பம் வருமோ என்று சோகிக்கவேண்டா

9 க்ஷணமுங்கூட விளம்பத்தைப் பொறுக்காது அப்போதே மோக்ஷம் வேண்டுமென்று ஆர்த்தப்ரபத்தி செய்வோருக்கு அப்போதே மோக்ஷத்தை நான் அளிப்பதால், நரகத்தைப்போன்ற இச்சரீரம் நெடுங்காலம் நிலை பெறுமோ என்று சோகிக்கவேண்டா

10 'சரணமடைந்தவனை ஒருபோதும் கைவிடேன்' என்று நான் உறுதிகொண்டிருப்பதால் ப்ரபந்நன் குறிப்பிட்ட காலம் வரையில் மோக்ஷம் கொடுக்க விளம்பித்தாலும் பலன் கொடுப்பதில் சிறிதும் ஐயமில்லையாதலின், சில பாபங்களாலே பரபத்தியாகிய புண்யமும் ஒழிந்து பலன் பெறுமற்போக நேரிடுமோவென்று சோகிக்கவேண்டா.

11 இச்சரீரம் முடிந்தவுடன் மோக்ஷம் கொடுக்கவேண்டுமென்று நீ காலத்தைக் குறித்தபடியால், மறுபிறவிக்குக் காரணமான காமங்களாலே மறுபடியும் பிறக்க நேருமோவென்று சோகிக்கவேண்டா

12 வேறு பலனை நாடாது பரபத்தியைச் செய்தவனுக்கு மோக்ஷத்திற்குத் தடையாயிருந்த ஸகலகாமங்களும் கழிந்துவிடுகையால், கைவல்யம் (தனியான ஆத்மாவை அநுபவித்தல்) முதலிய இடையூறுகளால் மோக்ஷம் ...ற விளம்பமுண்டாகுமோவென்று சோகிக்கவேண்டா

இப்படி ஸகலசோகங்களும் கழியப்பெற்ற நீ இனி சோகிக்கை பர பத்தியின் பெருமைக்கும், உன் பொறுப்பை ஏற்றுக்கொண்ட என் பெரு மைக்கும், ப்ரபத்தி செய்த உன் நிலைமைக்கும் தகுதியன்று ப்ரபத் திக்கு முன்பு சோகியாமையும் பின்பு சோகிக்கையும் அவிவேககசெயலாம்— என்றவாறு 11

## சரமசுலோகத்தின் ஸாரார்த்தம்.

சேதநனே! உன்னுடைய ஜ்ஞானம் அற்பமானது சக்தியும் அத் தகையதே நீ உயிர்வாழ்வது சிறிதுகாலமே மோக்ஷம்பெற விளம்பத்தை நீ பொறுக்காதிருக்கிறாய் மற்ற உபாயங்கள் உன்னால் அறிந்து அநுஷ் டிக்கமுடியாதவை மேலும் அவை விளம்பித்துப் பலன் தருவன ஆதலால் அவற்றில் நீ அலையவேண்டாம் நான் எல்லோர்க்கும் எளியன், ஸகல லோகங்களுக்கும் சரணமாயிருப்பவன், அனைத்தையும் காப்பதற்கு வேண்டிய ஸகலகுணங்களையுமுடையன் நீ என்னை ஒருவனையே உபாயமாகக் கொள் என்னிடம் ஐந்து அங்கங்களுடன்கூடிய ப்ரபத்தியைச் செய். இப்படிச் செய்தவுடன் நீ கடமையைச் செய்தவனாவாய் என்னால் காக்கப் படவேண்டியவனாகிவிடுவாய் எனக்கு மிகவும் ப்ரியனாக ஆகிவிடுவாய் எனக்கு உன்னிடமுள்ள கருணை அளவிடற்பாலதன்று உன்மீது அருள் புரிய முற்பட்டேன் என் சுதந்திரத்திற்குத் தடையே கிடையாது என் னுடைய ப்ரபத்திக்குப் பலனை அடைபவனும் நானேயாவேன் நான் செய்யும் கார்யத்திற்கு என் ஸங்கல்பம் ஒன்றே துணையாகும் உனக்கு உள்ள விரோதிவர்க்கம் பலவகைப்பட்டது, அளவற்றது, உன்னால் ஒழிக்க முடியாதது அதையெல்லாம் வேரறுத்துவிடுவேன். இனி அது தொட ராது என்னையும் என்னுடையவற்றையும் உனக்கு அநுபவிக்கத் தந்து உன்னை எனக்குச் சமமான போகமுடையவனாக்குவேன் இவ்வாறு முழுதும் நீ என்னை அநுபவித்தால் அதற்குப் போகுவீடாக எங்கும் எப்போதும் எந் நிலையிலும் செய்யத்தக்க கைங்கர்யத்தை உனக்குக் கொடுப்பேன். நீ ஒன் றுக்கும் சோகிக்கவேண்டாம்—என்றவாறு

## சரமசுலோகச்சுருக்கு — உரை முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஸிகாய நம:

ஸ்ரீ:

ஸ்ரீதூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

# கீதார்த்தசங்கிரகம் - உரை

பொதுத்தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் . . . . . தேசிகம் ||

சீரொன்று . வாழ்வு

[ சிறப்புத்தனியன் – உரை ]

நேரிசைவெண்பா

கட்டப் பொருள்விரித்த காசினியி னன்மறையி
னிட்டப் பொருளியம்பு மின்பொருளைச்—சிட்டர்தொழும்
வேதாந்த தேசிகனை மேவுவார் தங்கடிருப்
பாதாம் புயமடியேன் பற்று

உரை — காசினியில் – பூமியில், கட்டப் பொருள் விரித்த – (அறிவதற்குக்) கடினமான அர்த்தங்களை விரித்துக்கூறுகின்ற, நான் மறையின் – நான்கு வேதங்களின், இட்டப் பொருள் இயம்பும் – இஷ்டமான அர்த்தங்களை (த் தம் ஸூக்திகளால்) விளக்குகின்ற, இன் பொருளை – (அநுபவிக்க) இனிய வஸ்துவாயுள்ளவரும், சிட்டர் தொழும் – பெரியோர்களால் தொழப்படுமவருமான, வேதாந்ததேசிகனை – ஸ்ரீவேதாந்த தேசிகனை, மேவுவார்தங்கள் – (பக்தியுடன்) உபாஸிப்பவர்களுடைய, திருப்பாதாம்புயம் – திருவடிகளாகிய தாமரை, அடியேன் பற்று – அடியேனுக்கு அடைக்கலமாகும்.

குறள்வெண்பா

கீதை மொழிந்தருளும் வேதாந்த தேசிகனார்
பாதார விந்தமலர் பற்று

உரை — கீதை மொழிந்தருளும் – கீதையின் ஸாரார்த்தத்தை(த் தமது கீதார்த்தசங்கிரகமென்னும் நூலில்) அருளிச்செய்தவரான, வேதாந்த தேசிகனார் – ஸ்ரீவேதாந்ததேசிகனுடைய, பாதாரவிந்தமலர் – திருவடிக் கமலப்பூ, பற்று – (அனைவருக்கும்) தஞ்சமாகும்

---

[ விஷயச்சுருக்கம் ]

ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ-பூமி-நீளாதேவியருடன் நித்யஸூரிகளாலும் முக்தராலும் சூழப்பட்டுத் திருமாமணிமண்டபத்தில் வீற்றிருந்து செங்கோல்செலுத்திவருகின்ற ஸ்ரீமந்நாராயணன் இக்காமபூமியிலுள்ள ஸாதுக்களைக் காக்கவும், துஷ்டர்களை அழிக்கவும், தர்மத்தை நிலைநாட்டவும் திருவுள்ளங்கொண்டான், வடமதுரையில் கண்ணனாய்த் திருவவதரித்தான், தன்னைச் சரணமடைந்த பாண்டவர்க்குத் தூதுசெல்வதைப் பெருமையாகக் கொண்டான், போர்க்களத்தில் அர்ஜுனனைத் தலைவனாக்கித் தான் பாகனாகித் தேரில் தட்டுமாறித் தாழ்நின்றான், அர்ஜுனனைப் பெயரளவில் நிறுத்திவிட்டுத் தானே பகைவர்கூட்டத்தை ஒழிக்கக் கங்கணங் கட்டிநின்றான். இதைக் கண்ட அர்ஜுனன், பந்துக்கள் போரில் மடிவது உறுதியெனக் கண்டான், தகாத விஷயத்தில் அன்பும் இரக்கமும் அவனுள்ளத்துப் பெருகின; எதிரே நின்று உயிரிழக்கப்போகும் பந்துவர்க்கத்தையும் ஆசிரியர்கூட்டத்தையும் கண்டு மனமழிந்து நிலைகுலைந்தான்; க்ஷத்திரியர்களுக்குத் தர்மமாயுள்ள யுத்தத்தை அதர்மமென எண்ணிவிட்டான். இங்ஙனம் கலங்கிய அர்ஜுனன் கண்ணனைச் சரணமடைந்தான்; சிஷ்யனென்று தனக்கு நன்மையை உபதேசிக்குமாறு வேண்டினன்.

கண்ணன் அவன் துக்கத்தைப் போக்க மனங்கொண்டான், அவனைக் காரணமாகக்கொண்டு பகவத்கீதையாகிய அமுதத்தை உலகுக்குப் பொழியக் கருதினன், அர்ஜுனனுக்கு முதலில் சரீரத்திற்காட்டிலும் வேறுபட்டு எம்பெருமானுக்கு அடிமையாய் நித்யமாயுள்ள ஆத்மஸ்வரூபத்தை உபதேசித்தான், பின் இத்தகைய ஆத்மஸ்வரூபத்தை நன்கு உணர்ந்தவன் மோக்ஷத்தைப் பெறுவதற்குப் பரம்பராகாரணமான கர்மயோக-ஜ்ஞானயோகங்களையும் நேர்காரணமாக விதிக்கப்பட்ட பக்தியோகத்தையும் அவ்வவற்றின் அங்கங்களுடன் உபதேசித்தான், அர்ஜுனனை நன்கு பரீக்ஷிக்க வேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு, 'இன்னது மோக்ஷத்திற்கு ஸாதனம், இதையே முக்கியமெனக்கொண்டு செய்' என்று நிச்சயமான வழியைக் காட்டாமல் 'இவ்வுபாயங்களில் நீ விரும்புவதைக் கைக்கொள்' என்று கூறி நிறுத்தினன். அர்ஜுனனும் கண்ணன் தனக்கு நிலையான வழியைக் காட்டாமல் தன்னை உபேக்ஷிப்பதாய் நினைத்து முகத்தில் துக்கம் ததும்ப நின்றான். அதைக்கண்ட கண்ணனும் மறுபடியும் அந்தப் பக்தியோகத்தையே உறுதியாக உபதேசித்துப்பார்ப்போமெனக் கருதினன்; முதலில் தான்

உபதேசித்த பக்தியோகத்தையே இது எல்லாவற்றிலும் மிக ரகசியம் என்று பீடிகைபோட்டுக்கொண்டு அவன் மிக்க கவனத்தோடு கேட்குமாறு மறுபடி உபதேசித்தான்

அதைக் கேட்ட பின்பு அர்ஜுனனுடைய சோகம் இரண்டு மடங்காயிற்று பக்தியோகத்தை அதன் அங்கங்களுடன் அநுஷ்டிப்பது மிக்ககடினம் ஜ்ஞானமும் சக்தியும் நிறைந்திருக்கவேண்டும் நெடுங்காலம் மிக்க கவனத்துடன் அநுஷ்டிக்கவேண்டும் பலன் விரைவில் கிட்டாது ஆதலின் அர்ஜுனன் மறுபடி கலங்கினன் அவனுடைய அகத்தைக் கண்ட கண்ணன் அவனைத் தக்க பாத்ரமாகக் கருதினன், அவனைக் காரணமாக வைத்துக் கொண்டு உலகை வாழ்விக்கத் திருவுள்ளங்கொண்டான், உடனே மோக்ஷத் திற்கும் மற்ற பலன்களுக்கும் ஸாதநமாய், வருத்த அங்கங்களன்றி வேறோர் அங்கமில்லாததாய் மிகச் சுலபமாய் க்ஷணகாலத்தில் அநுஷ்டிக்கக் கூடியதாய்ப் பரமரஹஸ்யமான ப்ரபத்தியை உபதேசித்தருளினன் இதைக் கேட்ட அர்ஜுனனும் கலக்கம் நீங்கிக் கண்ணனது கட்டளையைச் சிரமேற் கொண்டு நடந்து உஜ்ஜீவித்தான்

இந்த வரலாறே ஸ்ரீபகவத்கீதையாய்த் திருவவதரித்தது 18-அத்யாயம் கொண்ட இந்தக் கீதையை உபநிஷத்துக்களின் ஸாரமென்றும் மஹாபாரதத்தின் உயிர்நிலையென்றும் முன்னோர் கொண்டாடுவர் இதற்குக் கண்ணனது திருப்பவளச்செவ்வாயினின்று நேரில் தோன்றிய பெருமை உளது இதன் மேன்மையையும் அவசியத்தையும் கண்டு **ஆளவந்தார்** இதன் ஸாரத்தைப் பொதிந்து **கீதார்த்தஸங்க்ரஹ**மென்னும் ஒரு சிறிய திவ்யஸூக்தியை அருளிச்செய்தார் **ஸ்ரீபாஷ்யகாரரும்,** இந்தக் கீதையின் அர்த்தத்தை விபரீதமாகக்காதபடி அனைவரும் உள்ளவாறு அறிந்து வாழ வேண்டுமென்ற குளிர்ந்த எண்ணங்கொண்டு ஒரு **பாஷ்ய**மிட்டருளினார் **ஸ்ரீதேசிகனும்** இந்தப் பாஷ்யத்திற்குத் **தாத்பர்யசந்த்ரிகை** என்ற விரிவான ஒரு வ்யாக்யானத்தை அருளிச்செய்து அதில் பிறமதத்தினரின் அர்த்தங்களைக் கண்டித்து ஸ்ரீபாஷ்யகாரரின் உரையே கண்ணன் கருத்துக்கும் வேதத்துக்கும் இசைந்ததென்று ஸ்தாபித்தருளினார் **கீதார்த்தஸங்க்ரஹத்** திற்கும் **கீதார்த்தஸங்க்ரஹரக்ஷை**யென்ற ஓர் அழகிய உரையை ஸ்ரீதேசிகன் அருளிச்செய்துள்ளார் இவ்வாறு முக்கியத்தன்மைவாய்ந்து விளங்கும் ஸ்ரீபகவத்கீதையின் ஸாரார்த்தத்தைத் தமிழ்ப்பற்றுள்ள ஆஸ்திகரும் அறிந்து உய்யும்படி ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியின் மொழிபெயர்ப்புவடிவத் தில் அமைந்துள்ள இப்பிரபந்தத்தில் ஸ்ரீதேசிகன் அருளிச்செய்தார்.

---

**முதற்பாசுரத்தில் கீதை முழுவதின் ஸாரார்த்தம் கூறப்படுகின்றது—**

*இப்பிரபந்தம் முழுதும் கட்டளைக்கலித்துறையால் அமைந்ததாம்*

326 கருமமு ஞானமுங் கொண்டெழுங் காதலுக் கோரிலக்கென்
றருமறை யுச்சியு ளாதரித் தோது மரும்பிரமந்
திருமக ளோடு வருந்திரு மாலென்று தானுரைத்தான்
றரும முகந்த தனஞ்சய னுக்கவன் சாரதியே 1

உரை — தருமம் உகந்த — *தாமத்தில் விருப்பமுள்ள,* தனஞ்சயனுக்கு — *அர்ஜுநனுக்கு,* அவன் சாரதி — *அவனுடைய தேர்ப்பாகனாகிய கண்ணன்,* கருமமும் ஞானமும் கொண்டு — *கர்மயோகத்தையும் ஜ்ஞாநயோகத்தையும் (ஸாதநமாகக்) கொண்டு,* எழும் — *வருத்தியடைகின்ற,* காதலுக்கு — *பக்தியோகத்திற்கு,* ஓர் இலக்கு என்று — *ஒரே லக்ஷ்யம் என்று,* அரு மறை உச்சியுள் — *(அறிதற்கு) அருமையான வேதாந்தத்தில்,* ஆதரித்து ஓதும் — *கொண்டாடிக் கூறப்படுகின்ற,* அரும் பிரமம் — *(அடைதற்கு) அரிய பரஹ்மம்,* திருமகளோடு வரும் — *(எப்பொழுதும்) பெரியபிராட்டியாரோடு தோன்றுகின்ற,* திருமால் என்று — *ஸ்ரீமந்நாராயணனே என்று,* தான் உரைத்தான் — *தானே அருளிச்செய்தான்*

*முதலில் கர்மயோகத்தை அநுஷ்டித்து மனத்தை வசப்படுத்திக் கொண்டபின் ஜ்ஞாநயோகத்தை அநுஷ்டித்து அதனால் ஆத்மாவின் ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றுப் பக்தியோகத்தை அநுஷ்டிக்கவேண்டியதுபற்றிக் 'கருமமும் ஞானமும் கொண்டெழும் காதலுக்கு' என்னலாயிற்று*

*வேதாந்தங்கள் முழுதும் இத்தகைய பக்தியோகத்திற்கு இலக்காயிருப்பவன் ஸ்ரீமந்நாராயணனாகிய பரப்ரஹ்மமே என்று கூறும் தாமத்தில் கருத்தூன்றிய அர்ஜுநனுக்குக் கண்ணன், தன்னையே அத்தகைய பரப்ரஹ்மமாகக் கூறி வெளியிட்டான்—என்றவாறு*

*ஸ்ரீபகவத்கீதையின் 18-அத்யாயங்களை ஆறு ஆறு அத்யாயங்களாகப் பிரித்து மூன்று ஷட்கமாகக் கொள்ளலாம் முதல் ஷட்கத்தில் கர்மயோகமும் ஜ்ஞாநயோகமும், இரண்டாவது ஷட்கத்தில் பக்தியோகமும், மூன்றாவது ஷட்கத்தின் முற்பாதியில் சேதநம், அசேதநம், அவற்றின் சேர்க்கையாகிய ப்ரபஞ்சம், பரப்ரஹ்மம் இவற்றின் ஸ்வரூபஸ்வபாவங்களும், பிற்பாதியில் கர்மம் ஜ்ஞாநம் பக்தி ஆகிய இவற்றை அநுஷ்டிக்கும் முறை, சாஸ்த்ரத்திற்குக் கட்டுப்பட்ட தன்மை முதலியனவும் ப்ரதாநமாய் விளக்கப்படுகின்றன*

இபபாசுரததில 'கருமமுஞானமும' எனறதால முதல ஷட்கததின அாததமும, 'காதலுககு' எனறதால இரணடாம ஷட்கததின அாததமும, 'அருமபிரமம' எனறு சேதநாசேதநஙகளைக காட்டிலும வேறுபட்டிருககும ப்ரஹமததைச சொலலியதால மூனறுவது ஷட்கததின முறபாதியின அாததமும, 'தருமமுகநத' எனறு சாஸதரததிறகுக கட்டுபபட்ட தனமை சொனனதால பிறபகுதியின அாததமும கூறபபட்டன 1

*ஸ்வதர்மஜ்ஞாநவைராக்யஸாத்யபக்த்யேககோசர: ।
நாராயண: பரம் ப்ரஹ்ம கீதாசாஸ்த்ரே ஸமீரித: ॥

ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே யோகலக்ஷ்யே ஸுஸம்ஸ்க்ருதே ।
ஆத்மாநுபூதிஸித்த்யர்த்தே பூர்வஷட்கேந சோதிதே ॥

மத்யமே பகவத்தத்த்வயாதாத்ம்யாவாப்திஸித்தயே ।
ஜ்ஞாநகர்மாபிநிர்வர்த்யோ பக்தியோக: ப்ரகீர்த்தித: ॥

ப்ரதாநபுருஷவ்யக்தஸர்வேச்வரவிவேசநம் ।
கர்ம தீர்பக்திரித்யாதி: பூர்வசேஷோ(அ)ந்திமோதித: ॥

---

**முதல் அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—**

327 உகவை யடைநத வுறவுடை யாாபோர வுறறவநநாட
டகவுட னன்பு கரைபுர ளாததரு மததளவின
மிகவுள மஞசி விழுநதடி சோநத விசயனுககோா
நகையுட னுணமை யுரைகக வமைநதன னாரணனே

உரை:— உகவை அடைநத — களிபபையுடையராயிருநத, உறவுடையாா — பநதுககள, போரலுறற அநநாள — போாசெயதலை மேறகொணடுவநதுநினற அககாலததில, தகவுடன் — கருணை யுடன, அன்பு கரைபுரள — அனபு கரைபுரணடோட, தருமதது அளவில — தாமததைபபறறிய ஜஞாநததில, உளம மிக அஞ்சி — மனம மிகப பயநது, விழுநது அடி சோநத — திருவடிகளில விழுநது சரண ... விசயனுககு — அாஜுநனுககு, நாரணன் — (கணண

*ஒவவொரு பாசுரததின உரைககுறிபபின முடிவிலும ...றகு மூலமான ஆளவநதாா அருளிய ஸ்தோததஸ... கொடுககபபடுகினறன

ளுக அவதரித்த) ஸ்ரீமந்நாராயணன், ஓர் நகையுடன் — ஒப்பற்ற புன்சிரிப்புடன், உண்மை உரைக்க — (ஆத்மாக்களின்) உண்மையை உபதேசிக்க — அமைந்தனன் — பொருந்தினன்.

பீஷ்மர்முதலிய பந்துக்களும் த்ரோணர்முதலிய ஆசார்யர்களும் தங்களிடம் மிக்க அன்புடையராயிருந்தனர் அவர்களே இப்பொழுது தங்களை எதிர்த்துப் போர்செய்யப் போர்க்களத்தே வந்துநின்றதை அர்ஜுநன் கண்டான் அர்ஜுநனுக்கு அவர்கள்மீது அன்பும் கருணையும் கரைபுரண் டோடின அதனால் க்ஷத்ரியர்களுக்குச் சிறந்த தர்மமாயுள்ள யுத்தத்தை அதர்மமெனக் கருதி அஞ்சினன் பகைவராயிருப்பவர்களை எதிர்க்கத் துணிய வில்லை வில்லையும் அம்பையும் கீழே போட்டுவிட்டுத் தேரினடியில் அயர்ந்து உட்கார்ந்தான் பின் கண்ணனைச் சரணமடைந்து தனக்கு நன் மையை உபதேசிக்கவேண்டினன் கண்ணனும் புன்சிரிப்புடன் ஜீவாத்மா பரமாத்மா இவர்களின் ஸ்வரூபம், பகவானை அடைய உபாயம் முதலிய ஸகலவேதாந்தங்களின் ரஹஸ்யார்த்தங்களை இனிமை மிக எளிதில் அறிந்து கொள்ளக்கூடியவகையில் அநாயாஸமாக அர்ஜுநனுக்கு உபதேசிக்கத் தொடங்கினன்—என்றவாறு 2

ஸ்தா நஸ்நேஹகாருண்யதர்மாதர்மதியாகுலம் ।
பார்த்தம் ப்ரபந்நமுத்திஸ்ய ஶாஸ்த்ராவதரணம் க்ருதம் ॥

---

2-வது அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—

328 உடல் மழிந்திடு முள்ளுயி ரோன்றழி யாதெனைப்போல்
விடுமது பற்று விடாத தடைத்த கிரிசைகளே
கடுக வுனக்குயிர் காட்டு நினைவத னுள்ளதாம்
விடுமய லென்று விசயனைத் தேற்றினன் வித்தகனே 3

உரை·— வித்தகன் — அதிசயச்செய்கையுடைய கண்ணன், உடலம் —சரீரம், அழிந்திடும் — அழிந்துபோகும், உள் உயிர் ஒன்று — சரீரத்திற்குள் இருக்கும் ஜீவாத்மாவாகிய ஒரு வஸ்து, எ(ன்)னைப் போல — (பரமாத்மாவாகிய) என்னைப்போல், அழியாது — நாசமடை யாதிருக்கும், பற்று — (பலன் முதலியவற்றில்) பற்றுதல், விடுமது — விடத்தக்கதாகும், அடைத்த கிரிசைகள் — விதிக்கப்பட்ட காமங்கள், விடாதது — விடத்தகாதவையாகும், அதனால் — (பற்று இல்லாமல் செய்த) அந்தக் காமயோகத்தால், உயிர் காட்டும் நினைவு — ஆத்மஸ்வ

ரூபத்தைக் காட்டக்கூடிய ஜ்ஞாநயோகம், கடுக — விரைவில், உனக்கு உள்தாம்—உனக்கு ஏற்படும், மயல் — மோஹத்தை, விடு என்று — விட்டுவிடு என்று, விசயனை — அர்ஜுநனை, தேற்றினன் — தெளிவித்தான்

[உடலம் ' எனைப்போல்] அர்ஜுநனே! ஸர்வேச்வரனாகிய நான் அழிவற்று நித்யனாயிருப்பவன் இவ்விஷயத்தில் சிறிதும் ஸந்தேஹமில்லை இவ்வாறே ஜீவாத்மாக்களும் அழியாது நித்யமாயிருப்பவராகையென்பதில் ஸந்தேஹமில்லை ஆனால் 'இறந்தான்' 'பிறந்தான்' என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? என்று கேட்கலாம் அதற்கும் இடமில்லை குழவிப்பருவம் இளம்பருவம் வாலிபம் முதுமை முதலிய பருவங்களில் ஒரு பருவத்தினின்று மற்றொன்றுக்குச் சரீரத்திலுள்ள ஜீவன் போகும்போது இறந்ததாக நினைத்து ஒருவரும் வருந்துவதில்லை இதற்குக் காரணம் ஆத்மா அழிவற்றவன் என்ற நிச்சயமேயாகும் இங்ஙனமே ஜீவன் ஒரு சரீரத்தைவிட்டு மற்றொன்றுக்குச் செல்வதே இறத்தல் எனக் கூறுவதுபற்றி இதற்கும் ஆத்மாவை நித்யனென்ன உணர்ந்தவன் வருந்தமாட்டான் ஆத்மாவை ஆயுதத்தால் வெட்டமுடியாது, தீயால் எரிக்கமுடியாது, நீரினால் நனைக்கமுடியாது, காற்றினால் உலர்த்தமுடியாது ஜீவன் அழிவற்றவன், எங்கும் ஊடுருவிச் செல்லுமாறு மிகச் சூக்ஷ்மமானவன் இத்தகைய ஆத்மாவைக் கொல்லமுடியாது ஆத்மாவைக் கொல்லுபவனாக ஒருவனை நினைப்பதும் ஆத்மாவைக் கொல்லப்பட்டதாகக் கருதுவதும் அறிவற்ற செயலாம் உலகத்தில் 'இறத்தல்' என்பது நித்யமான ஆத்மா ஒரு சரீரத்தைவிட்டுப் பிரிவதேயாகும் இப்பொழுது போரில் உன்னால் கொல்லப்படும் பகைவர்களின் அந்த அந்த ஆத்மா ஸ்வர்க்கலோகத்திற்குச் சென்று, இழந்த சரீரத்திற்காட்டிலும் சிறந்த சரீரத்தையே பெற்று உயர்ந்த ஸுகத்தை அநுபவிக்கப்போவதால் நீ மகிழ்ச்சிகொள்வதே முறையாகும் கந்தலாடைகளைக் கழற்றியெறிந்து புதிய ஆடையை அணிவதற்கு ஒருவனும் வருந்தமாட்டானல்லவா?

ஜீவன் அழியாவிடினும் சரீரம் அழிந்துபோமேயென்று ஒருகால் வருந்துகின்றாயோ? அதுவும் முறையன்று இச்சரீரம் பஞ்சபூதங்களாலாகியது, நித்யனான ஜீவன் தான் செய்த கர்மங்களின் பலனை அநுபவிப்பதற்கு உரிய இடமாகவே அமைந்துள்ளது ஆதலின் கர்மம் கழிந்ததும் சரீரம் அழிந்துபோம் சரீரத்திற்கு மாறுபாட்டை அடைவதே இயற்கை போரில் நீ அடிக்காவிடினும் அவர்கள் சரீரம் எப்படியும் அழிந்தே தீரும் ஆதலால் சரீரம் அழிவதற்கும் வருந்த இடமில்லை

[விடுமது கிரிசைகளே] சாஸ்த்ரங்களால் ஆத்மாவின் ஸ்வரூபத்தை நன்கு தெளிந்து, பின் கர்மயோகத்தை அநுஷ்டிக்கும்போது அதன் பலனில் பற்று வைக்காது பகவத்கைங்கர்யமென்றே அநுஸந்தித்துச் செய்யவேண்டும். பலனில் பற்றுதலைமட்டும் விடவேண்டுமேயன்றி விதிக்கப்பட்ட கர்மங்களை ஒருபோதும் விடக்கூடாது. யுத்தமென்பது க்ஷத்திரியனுக்குத் தன் கடமையாகும். ந்யாயமான யுத்தத்தைக் காட்டிலும் க்ஷத்திரியனுக்கு நன்மையைத் தருவது ஒன்றுமில்லை. ஆதலின் நீயும் பலனைக் கருதாது உன் கடமையெனக் கருதிப் பகவத்கைங்கர்யமெனக்கொண்டு ந்யாயமான யுத்தமென்ற கர்மயோகத்தைச் செய்தால் கடைசியில் மோக்ஷத்தையும் பெறுவாய்.

[கடுக உளதாம்] இத்தகைய கர்மயோகத்தாலே மனம் வசப்பட்டபின் ஸர்வேசுவரனுக்குச் சரீரமாயுள்ள ஆத்மாவின் ஸ்வரூபத்தை இடைவிடாது சிந்தித்தலாகிய ஜ்ஞாநயோகம் விதித்துப் பின் ஆத்மஸாக்ஷாத்காரம் ஏற்படும். ஆதலின் ஆத்மஸ்வரூபத்தையும், யுத்தமாகிய கர்மயோகம் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு ஸாதநமென்பதையும் அறிந்துகொண்டு 'சரீரமே ஆத்மா' என்ற அஜ்ஞாநத்தைப் போக்கிக்கொள்.

இவ்விஷயங்களை இரண்டாம் அத்தியாயத்தில் கண்ணன் அர்ஜுநனுக்கு உபதேசித்தான்—என்றவாறு.

தேரில் பாகனாயின்றபோதே ஆசார்யனாகவும் நின்று உபதேசித்த அதிசயச்செய்கையை நினைந்து 'வித்தகன்' என்னலாயிற்று.

விடாத்து கிரிசைகள்—பன்மையொருமைமயக்கம். 3

நித்யாத்மாஸங்ககர்மேஹாகோசரா ஸாங்க்யயோகதீ: ।
த்விதீயே ஸ்திததீலக்ஷா ப்ரோக்தா தந்மோஹஶாந்தயே ॥

---

**3-வது அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—**

329 சங்கந் தவிர்ந்து சகஞ்சதிர் பெற்ற தனஞ்சயனே
போங்குங் குணங்கள் புணர்ப்பனைத் தும்புக விட்டவற்று
ணங்கண் ணுரைத்த கிரிசை யெலாமென வுந்நினைவு
ரேங்கும் மறிவாக ளேயென்று நாத னியம்பினனே. 4

**உரை** — நாதன் – ஸர்வேசுவரனாகிய கண்ணன், சகம் – உலகத்தில், சதிர் பெற்ற – பெருமை பெற்ற, தனஞ்சயனே – அர்ஜுநனே! சங்கம் தவிர்ந்து – (கர்மபலன்களில்) பற்று விட்டு,

போங்கும் குணங்கள் — (மாறிமாறி) வருத்தியடைகின்ற (ஸத்துவம், ரஜஸ, தமஸ ஆகிய மூன்று) குணங்களால் நிகழும், புணாபபு அனைத்தும் — காரியங்கள் எல்லாவற்றையும், அவற்றுள் புகவிட்டு — அந்தக் குணங்களுக்குள் ஏற்றிவைத்து, உரைத்த கிரிசை எலாம் — (சாஸ்த்ரங்களில்) விதிக்கப்பட்ட காமங்கள் எல்லாவற்றையும், நங்கண் — (ஈசுவரனாகிய) நம்மிடத்தில் (ஸமாப்பிக்கவேண்டும்), எனவும் நவின்றோர — என்று அநுஸந்தித்த பெரியோர்கள், எங்கும் அறிவார்களே என்று — எல்லா விஷயங்களையும் அறிந்தவர்களே (ஆவர்) என்று, இயம்பினன் — உபதேசித்தான்

[சகம் தனஞ்சயனே] கீழ், காமயோகம் அநுஷ்டித்து மனத்தை வசப்படுத்திப் பின் ஜ்ஞாநயோகம் அநுஷ்டிக்கவேண்டுமென்று கூறப்பட்டது இங்கு ஜ்ஞாநயோகத்தை நேராகவே செய்ய அதிகாரமுள்ளவன் காமயோகத்தை ஏன் அநுஷ்டித்துத் துன்புறவேண்டும் என்று ஓர் ஆக்ஷேபம் வரக்கூடும் அதற்குப் பரிஹாரம்—காமயோகத்தைச் செய்யாவிடில் ஜ்ஞாநயோகமே வித்திக்காது பலனில் பற்றில்லாது காமயோகத்தைச் செய்து எம்பெருமானது அன்பைப் பெறவேண்டும் அதனால் பாபம் கழியும் பின் மனம் தெளிவடையும் அதனால் ஆசை, பகை முதலிய குற்றங்கள் மனத்தினின்று அகலும் பின் இந்த்ரியங்கள் வசப்பட்டுநிற்கும் அதனால் ஜ்ஞாநயோகம் வித்திக்கவேண்டும் இம்முறையன்றி நேராக ஜ்ஞாநயோகத்தையே தொடங்குபவன், ஏழு மாடங்களுள்ள ஒரு கோபுரத்தைக் கட்டவிரும்பியவன் முதலில் ஏழாவது மாடத்தைக் கட்டமுயல்வது போல பரிஹஸிக்கத்தற்கு உரியனாவான்.

மேலும் பாளயம் தவிர மற்றக் காலங்களில் யாதொரு வேலையும் செய்யாது க்ஷணகாலமும் எவனும் இருக்கமுடியாது ஜீவன் தன் வயமின்றி ஸத்துவம் முதலிய குணங்களால் எதையாவது செய்யும்படி தூண்டப்படுகிறான் காமயோகம், செய்வதற்கு எளிது இதில் தவறுகள் நேரா இதைச் செய்யாமலிருக்கமுடியாது காமயோகத்தைக் கைவிட்டால் சரீரவாழ்க்கையும் நடைபெறாது ஜ்ஞாநயோகத்திற்கு அதிகாரிகளான ஜநகர் முதலிய மஹான்களும் காமயோகத்தை அநுஷ்டித்துப்போந்தார்கள் மேலும் நீ உலகத்தில் மிகப் பெருமை பெற்று நாட்டார் உன்னைப் பார்த்து நடக்கும்படி பெரியோனாயிருப்பதால் நீ காமயோகத்தைக் கைவிடுவதைக் கண்டு ஜ்ஞாநயோகத்தில் அதிகாரமில்லாதாரும் ஜ்ஞாநயோகத்தையே தொடங்கி அழிந்துபோவர் அந்தப் பாபம் உன்னைச் சேருவதுடன் ஜ்ஞாநயோகத்தினின்று உன்னைத் தள்ளியும்விடும்.

[ சங்கம்தவிர்ந்து ] காமயோகம செயயுமபோதும பகவானுடைய மகிழசசியைத தவிர, ஸவாககம முதலிய ஒரு பலனையும விருமபககூடாது

[ போங்கும் அவற்றுள் புகவிட்டு ] ஸததுவம, ரஜஸ, தமஸ ஆகிய மூனறும பரகருதியின குணஙகளாம சேதநனுடைய சரீரததில் இவை மூனறும மிகுவதும குறைவதுமாயிருககினறன இநதக குணஙகள சில காரியஙகளைச செயகினறன (14-வது அதயாயததில விவரிககபபடும) ஜீவன இககாரியஙகளைச செயபவனாகத தனனை நினைததுககொளகினறான இதறகுக காரணம சரீரததையே ஆதமாவென நினைததிருபபதேயாகும இஙஙனனறி ஆதமஸவரூபததை உளளவாறு அறிநதவன, அததகைய காரியஙகளைச செயயுநதனமை ஆதமாவுககு இயறகையாய அமைநததலலவெனறும ஸததுவம முதலிய குணஙகளின ஸமபநதததால வநததேயெனறும அநுஸநதிபபான இதுவே குணஙகளில காதருதவததை அநுஸநதிததல எனபபடும

[நங்கள் அறிவர்களே] இததகைய காமஙகள அனைததும ஸாவேசுவரனால செயயபபடுகினறனவெனறும, ஸாவேசுவரன தனனுடைய அடியனாகிய ஜீவனைககொணடு தனனுடையவையான ஸாதநஙகளால தானே மகிழுமபொருடடுத தனனுடைய காரியஙகளைத தானே செயவிககினறான எனறும அநுஸநதிததுக காரியஙகளைச செயயவேணடும இததகைய அநுஸநதாநமுளளவா ஸகலசாஸதரஙகளின ஸாரததையும நனகு அறிநதவராவா

இவவகையில தன கடமையான யுததததைச செயயுமாறு மூனறும அதயாயததில் அாஜுநனுககுக கணணன உபதேசிததான—எனறவாறு

‘நஙகணணுரைதத’ ‘எஙகுமறிவா’ ‘எனவுநரவினறா’—ணகர—மகர—நகரஙகள் விரிநதது செயயுளவிகாரம

அஸக்த்யா லோகரக்ஷாயை குணேஷ்வாரோப்ய கர்த்ருதாம் । 4
ஸர்வேஶ்வரே வா ந்யஸ்யோக்தா த்ருதீயே கர்மகார்யதா ॥

---

**4-வது அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—**

330 பிறவாமை தந்திடத் தானே பிறக்கும் பெருமைகளுந்
துறவாக கிரிசைக ளேதி தன்ஞெற றுலங்குகையு
மிறவா வுயிர்தன் னிலைகண் டிடுமுல கின்னிலையு
மறைவாழு மாயவ னேயனுக கன்றறி விததனனே. 5

உரை:— மறை வாழும் — வேதத்தில் (போற்றப்பட்டு) வாழ் கின்ற, மாயவன் — (எம்பெருமானாகிய) கண்ணன், நேயனுக்கு — நண்ப (னாகிய அர்ஜுந) னுக்கு, பிறவாமை தந்திட — (தன்னை அடைந்தவருக்கு) மறுபிறவியில்லாமையை அருளுவதற்காக, தானே பிறக்கும் பெருமைகளும் — (ஸர்வேச்வரனாகிய) தானே (காமபூமி யில்) பிறத்தலால் உண்டாகும் பெருமைகளும், துறவாக கிரிசைகள் — விடமுடியாத காமங்கள், தூ மதிதன்னால் — பரிசுத்தமான (ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றிய) ஜ்ஞாந (த்தைத் தம்முள் அடக்கிக்கொண் டிருப்ப) தால், துலங்குகையும் — (ஜ்ஞாநயோகமாக) ப்ரகாசித்த லும், இறவா உயிர் — அழிவற்ற ஆத்மாவின், நல நிலை — நல்ல ஸ்வ பாவத்தை, கண்டிடும் — அறிந்த, உலகின் — அதிகாரியின், நிலை யும்— மேன்மையும் (ஆகிய இவற்றை), அன்று — பாரதப்போரன்று, அறிவித்தனன் — உபதேசித்தான்

[பிறவாமை பெருமைகளும்] ஸாதுக்களான ஸம்ஸாரி களை இக்காம பூமியில் மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து அலைறபடாதவாறு செய்ய நினைந்து ஸர்வேச்வரன் தானே பல அவதாரங்களைச் செய்து அவர் களை உஜ்ஜீவிக்கச்செய்கின்றான் அவனுடைய அவதாரரஹஸ்யத்தை அறிப வர் மறுபிறவியின்றி மோக்ஷத்தைப் பெறுவர்

**அவதாரரஹஸ்யம்** — (1) எம்பெருமானுடைய அவதாரம் இந்த்ர ஜாலம்போல் பொய்யானதல்ல, உண்மையானதே (2) நம்முடைய ஜ்ஞாநம் இக்காமபூமியில் சுருங்கிக்கிடப்பதுபோல் எம்பெருமானுடைய ஜ்ஞாநம் அவ தரித்திருக்குங்காலத்திலும் சுருங்குவதில்லை அவன் தனக்கு இயற்கையாயுள்ள பிறவாமை, அழியாமை, எல்லாவற்றுக்கும் தலைமை முதலிய தன்மைகளை விடாதபடியே அவதரிக்கின்றான் (3) இங்கு அவதரித்துள்ள அவனுடைய திருமேனி நம்முடைய சரீரத்தைப்போல் ஸத்த்வம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களாலாகியதல்ல, சுத்தஸத்த்வமயமானது (4) அவனுடைய பிறப்பு நம்மைப்போல் கர்மத்தால் வருவதல்ல, தன் ஸங்கல்பத்தாலேயே ...கும் (5) அவனுடைய பிறப்பு நம்முடையதுபோல் காமம் பரி ... காலத்தில் வருவதல்ல, வர்ணாச்ரமதர்மங்கள் குறைந்து அதர ...காலத்தில் வருவதாம் (6) அவனுடைய அவதாரத்திற்குப் ...களை கலந்த பலனை அநுபவிப்பதல்ல அவனைக் காணு ...ல் அவனைப் பிரிந்த க்ஷணகாலத்தையும் ஆயிரம் கல்ப ...ங்கமங்குலைந்து அழிகின்ற சிறந்த பக்தருக்குத் தன் உரு

வததையும செயகையையும காடடுவது, பேசுவது முதலியவறறால அவாகள உயிாதரிககுமாறுசெயவதும, அவாகளுககு எதிரிகளாயுளள துஷடாகளை அழிபபதும, தாமததை ஸதாபிபபதுமே அவதாரததிறகுப பலனும

ஆக இநத 6 அமசஙகளே அவதாரரஹஸயமெனபபடும

[துறவாக் துலங்துகையும்] காமயோகததை ஒருவனும விடமுடியாதெனக கீழக கூறபபடடது இததகைய காமயோகததைப பலனில பறறுவைககாது செயயவேணடும பரகருதியின ஸமபநதம நீஙகிப பரிசுததமான ஆதமஸவருபததை அநுஸநதிபபவன ஸததுவமமுதலிய குணங களாலே செயயபபடும காாயஙகளில ஆதமாவாகிய தனனைக காரணமாக நினைககமாடடான, மேலும பரகருதியின குணமாகிய ஸததுவம முதலிய மூனறையும, இளைததல—பருததல, வெணமை—கருமை முதலிய சரீரததின தனமைகளையும ஆதமாவைப பறறியனவாகவும நினைககமாடடான இத தகைய அதிகாரி பரகருதிஸமபநதமறற ஆதமஸவருபததை அநுஸநதிததுக கொணடே காமஙகளை அநுஷடிபபான ஆக, காமயோகம ஆதம ஜஞானததைத தனனுள அடககிககொணடிருபபதால ஜஞானயோகமாகவும ஆகினறது மேலும மோக்ஷததை விருமபுமவன தான செயயும ஸகல காமஙகளையும பரபரஹமததின ஸவருபமாகவே நினைததுச செயயவேணடு மாதலாலும காமயோகம ஜஞானஸவருபமாகினறது

‘கிரியைகள’ எனற பனமையால தன அறிவுககும சகதிககும விருபபததிறகும ஏறறவாறு முககியமாயக கைககொளளபபடடனவாயக காமயோகததின பிரிவுகளான தேவதாராதநம, இநதரியஙகளை அடககுதல, பராணாயாமம, யாகம, தானம, ஹோமம, தவம, புணயதீாததஸநானம, புணயக்ஷேததரயாததிரை, வேதததை ஆவருததிசெயதல, வேதாநதபரிசயம செயதல முதலியன கூறபபடடன

[இறவா வுயிர் நிலேயும்] கீழக கூறியபடி ஜஞான யோகமாகவும ஆகினற காமயோகததில காமம எனற ஓா அமசமும ஜஞானம எனற ஓா அமசமும உளவெனத தீாநதது இவவிரணடு அமசஙகளில ஜஞானாமசமே பரதானமாகும ஏனெனில, இநத ஜஞானாமசம தினந தோறும பழககம செயயச்செயய உறுதிபபடடு ஆதமாவை ஸாக்ஷாத கரிககுமபடி செயகினறது இநத ஸாக்ஷாதகாரததைப பெறறவனுககு அஹஙகார—மமகாரஙகள கழிநதுவிடும, ஆதமஸவருபம அனைததும ஜஞான ஸவருபமாயிருபபதுபறறி ஸமமெனறும, அஙஙனமே பரமாதமஸவருபமும ஜீவாதமஸவருபமும ஸமமெனறும அறிவு உணடாகும இததகைய அதி காரி ஆதமஜஞானமாகிய தெபபததால, அநாதிகாலமாகச செயதுளள

*அளவற்ற பாபங்களாகிய கட்டைகளைக் கட்டைவிடுவான பெரிய தீ விறகுகளை எரித்துவிடுவதுபோல ஆத்மஜ்ஞானம் இவனுடைய புண்யபாபங்களாகிய ஸகலகர்மங்களையும் ஒழித்துவிடுகின்றது இங்ஙனம் இவனுடைய பெருமை அளவிடற்பாலதன்று*

*இவ்வாத்தங்களை விசித்திரமான அவதாரங்களால மிக்க பெருமையுடையனாக வேதாந்தங்களால போற்றப்படும் கண்ணன் தன் நண்பனான அர்ஜுனனுக்கு நான்காவது அத்யாயத்தில் உபதேசித்தான—என்றவாறு*

*உலகின்னிலையும்— னகரமவிரிந்தது செய்யுள்விகாரம்* 5

ப்ரஸங்காத் ஸ்வஸ்வபாவோக்தி: கர்மணோ(அ)கர்மதாஸ்ய ச |
பேதா ஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்தாத்யாய உச்யதே ||

---

**5-வது அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—**

331 கண்டெளி தாங்கரு மம்முயிர் காட்டக் கடுகுதலு
மண்டி யதன்படி யின்மனங் கொளளும் வரிசைகளுங்
கண்டறி யாவுயி ரைக்காண லுற்ற நினைவுகளும்
வண்டுவ ரேச னியம்பினன் வாசவன் மைந்தனுக்கே 6

உரை:— வண் துவரேசன் — *வளமமிக்க துவாரகைக்கு நாயகனான கண்ணன்*, வாசவன் மைந்தனுக்கு — *இந்திரனுடைய புத்திரனான அர்ஜுனனுக்கு*, கண்டு—(*சாஸ்த்ரங்களைக்கொண்டு*) *அறிந்து*, எளிதாம் — (*அநுஷ்டிக்க*) *ஸுலபமான*, கருமம் — *கர்மயோகம்*, உயிர் காட்ட — *ஆத்மாவைக் காட்டுவதற்கு*, கடுகுதலும் — *விரைதலும்*, அதன் படியில — *அந்தக் கர்மயோகத்தின் ப்ரகாரங்களில்*, மண்டி — *ஈடுபட்டு*, மனம் கொளளும் வரிசைகளும் — *மனத்தில் நினைக்கவேண்டிய ப்ரகாரங்களும்*, கண்டு அறியா உயிரை — (*நேரில்*) *கண்டறியமுடியாத ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை*, காணலுற்ற — (*எங்கும் ஜ்ஞானஸ்வரூபமாகப்*) *பார்க்கும்படியான*, நினைவுகளும் — (*பரிபக்வமடைந்த*) *ஜ்ஞானங்களும்* (*ஆகிய இவற்றை*), இயம்பினன் — *உபதேசித்தான*

[**கண்டெளிதாம் கடுகுதலும்**] *கர்மயோகம் ஜ்ஞானயோகத்தைப்போலன்றி அநுஷ்டிக்க மிகவும் எளிதாகும், பலனையும் விரைவில் தரும் எங்ஙனே எனனில், கர்மயோகத்திற்கு அதிகாரியான ஒருவன் சாஸ்த்ரங்களில விதிக்கப்பட்டு எம்பெருமானுக்கு மகிழ்ச்சியைத் தரும் கர்மயோகத்தைச் செய்யமுயலகின்றான அதனால அவனுக்கு ரஜோகுணமும*

தமோகுணமும நீஙகி ஆசை துவேஷம முதலியனவும ஒழிகினறன அதனுல மனம தெளிவடைகினறது முன செயது பழகிய காமயோகததிலே மனத தைச செலுததுவதால மனம வசபபடுகினறது அதனுல மறற இநதரியங களும வசபபடுகினறன பின ஆதமாவின உணமையான ஸவரூபததை அறிநத இவனுககு ஜஞாநஸவரூபமான எலலா ஆதமாககளும ஒரேவித மானவை எனற நிசசயம உணடாகினறது இவவாறு அறிநது மிகச சுலப மான காமயோகததைச செயபவன விரைவிலே ஆதமஸாக்ஷாதகாரததைப பெறுகினறுன ஜஞாநயோகம, செயவதறகு மிகக கடினமாய வெகு காலம கழிததுப பலனைத தருகினறது

[ மண்டி வரிசைகளும் ] கண முதலிய ஜஞாநேநதரி யஙகளும, வாககு முதலிய காமேநதரியஙகளும, பராணவாயுககளும சரீரத தில நினறு தததம காரியஙகளைச செயயுமபோது ஜீவாதமாவாகிய தனனை அவவேலைகளைச செயபவனுக நினையாமல, காமததால வநத இநதரியஙகள பராணவாயுககள் இவறறின ஸமபநதததாலேயே ஜீவனுககு அவறறைச செயயும தனமை உளளதாகக கருதவேணடும ஜஞாநஸவரூபனுக உளள ஜீவனுககு இயறகையில அநதத தனமை இலலையென உணரவேணடும

[ கண்டறியா நினைவுகளும் ] ஜீவன ஆசாரயனுடைய உபதேசததாலே ஆதமஸவரூபததை உளளவாறு அறியவேணடும பின அதி லேயே பழகிவநதால சரீரததையே ஆதமாவெனக கருதுதலாகிய விபரீத ஜஞாநம ஒழியும, ஆதமஸாக்ஷாதகாரததைப பெற உறுதிபூணடு உலகத தில தனககு பரியமானதொனறைப பெறருல மகிழாமலும அபரியமான விஷயததிறகு வருநதாமலும இருககவேணடும இவவாறு இருககும அதி காரி கலவிகறறு வணககமுளளவனிடததும, ஸாதாரணபராஹமணனிடத தும, பசுவினிடததும, யானையினிடததும, நாயினிடததும, அதைத தின கினற சணடாளனிடததும ஆதமஸவரூபததைப பாாககுமபோது எலலா ஆதமாககளையும ஸமமாகப பாாககவேணடும அநத அநதச சரீரம வேறு பட்டிருபபினும பரிசுததமான ஆதமஸவரூபம அனைததும ஜஞாநஸவரூபமா யிருபபதுபறறி ஸமமாகும

இவவிஷயஙகளை ஐநதாம அதயாயததில கணணன அாஜுநனுககு உபதேசிததான—எனறவாறு

கருமம்முயிா—மகரம விரிநதது செயயுள விகாரம 6

கமயோகஸ்ய ஸௌகயம் ஶைக்ர்யம் காஶ்சந தத்விதா: ।
ப்ரஹ்மஜ்ஞாநப்ரகாரஶ்ச பஞ்சமாத்யாய உச்யதே ॥

**6-வது அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—**

332 யோக முயற்சியும் யோகிற் சமநிலை நால்வகையும்
யோகி னுபாயமும் யோகுத் தலைவரும் பேறுகளும்
யோகு தனிற்றன் றிறமுடை யோகுதன் முக்கியமு
நாகணை யோகி நவின்றன னன்முடி வீரனுக்கே

உரை — நாக அணை யோகி – திருவனந்தாழ்வானாகிய திரு
பள்ளியில் யோகநித்திரைகொண்டருளுகின்ற எம்பெருமானாகி
கண்ணன், நன் முடி வீரனுக்கு – சிறந்த கிரீடத்தையுடைய வீ
னாகிய அர்ஜுநனுக்கு, யோக முயற்சியும் – (ஜீவாத்மாவைப்பற்றி
யோகாப்யாஸத்தின் முறையும், யோகில் – யோகத்தில், சமநிலை
நால்வகையும் – ஸமமாகப்பார்க்குந்தன்மையின் நான்குவகையும்
யோகின் உபாயமும் – யோகத்தின் ஸாதநங்களும், யோகுத்தலை
வரும் – யோகத்தால் உண்டாகின்ற, பேறுகளும் – பலன்களும்
யோகுதனில் – (கீழ்க்கூறிய நான்கு நிலையுள்ள) யோகத்தைக்காட்ட
லும், தன் திறமுடை – தன்னைப் பற்றியதான, யோகுதன் முக்கி
மும் – பக்தியோகத்தின் முக்கியத்தன்மையும் (ஆகிய இவற்றை)
நவின்றனன் – உபதேசித்தான்

[யோகமுயற்சியும்] கர்மயோகத்தைக் கைக்கொண்டவன் தின
தோறும் யோகம்செய்ய விதிக்கப்பட்ட காலத்தில் மனத்தை ஆத்மாவினிட
தில் செலுத்தி யோகத்தைத் தொடங்கவேண்டும் ஜனங்கள் இல்லாது நி
சப்தமான இடத்தில் தனியாக இருந்து கவலைகளையொழித்து ஆத்மாவை
யன்றி வேறொன்றையும் விரும்பாது நின்று யோகம்செய்யவேண்டும் ஒ
வஸ்துவையும் தன்னுடையதென்று உரிமைபாராட்டக் கூடாது பாஷண்
பதிதன் முதலிய அசுத்த மனிதர்களுக்குச் சொந்தமான இடத்திலோ, அவ
களுக்குச் செல்வாக்கு உள்ள இடத்திலோ யோகம் செய்யக்கூடாது இட
இயற்கையாகவே சுத்தமாயிருக்கவேண்டும் மரம் முதலியவற்றால் செய்ய
பட்டு அசையாதிருக்கும் ஆஸநத்தைத் திடமாகப் பூமியில் பதியும்பட
க்கவேண்டும் மெத்தென்றிருக்கும்படி அதன்மேல் ஒரு வஸ்த்ரத்தை
வேண்டும் அந்த வஸ்த்ரம் சுருங்காமலிருப்பதற்கும் பரிசுத்தமாவத
மீது மான்தோலை விரிக்கவேண்டும் பின்னும் பரிசுத்தமா
...ஸத்வகுணம் வளர்வதற்கும் எல்லாவற்றுக்கும் மேல் தருப்பையை
பரப்பவேண்டும். இத்தகைய ஆஸநத்தில் அமர்வதால் மனத்தெளிவு வரு

பினபுறததில ஒரு சாயமணை இருககவேணடும இலலாவிடின, பினபுறத தில தாஙகிநிறக முயலநேரிடடு அதனல யோகததிறகுத தடை நேரும

நினறால சிரமமும படுததால தூககமும வருமாதலின இரணடும கூடா மனததை ஒருமுகபபடுததி யோகததைச செயயவேணடும மனத தின விபரீதபபோககுகளையும இநதரியஙகளையும அடககிககொளளவேண டும சரீரததின நடுபபாகததையும தலையையும கழுததையும கோணலினறி நேராக வைததுககொளளவேணடும, அசைககககூடாது சாயமணை இருபபதால பினபுறததைத தான தாஙகி நிறக முயலவேணடியதிலலை ஆதலின அஙகம அசைவதறகு இடம இலலை இவவாறே வெகுநேரம இருககமுடியும

வெளியேயுளள ஒரு வஸதுவையும பாாககககூடாது கணணை மூடிககொளளவும கூடாது தூககம வாராதிருககுமாறு தன மூககின முனை யையே நோககவேணடும மனம மகிழவுறறிருககவேணடும பயமடையக கூடாது கொஙகையுடனகூடிய மாமஸபிணடம எனனுமபடியுளள மங கையரை விருபபததோடு நினைபபது, காணபது, பேசுவது முதலியன யாவும கூடா மிகக கவனம வேணடும பகவானிடம கருததைச செலுதத வேணடும இதனல மனம சுததமடைநது வேறெனறையும நாடாத நிலை யையடையும அதனல ஆதமாவைபபறறிய யோகம நனகு நடைபெறும

யோகம செயபவன அதிக உணவைக கொளளககூடாது படடினி கிடககவும கூடாது அதிகமாய நடககககூடாது நடககாமலிருககவும கூடாது அதிகத தூககம — முழுதும விழிததல, அதிக வேலை—வேலையே யிலலாமை இவை கூடா எலலாம குறிபபிடட அளவுககுக கைககொண டால யோகம அநுஷடிகக எளிதாகும இலலாவிடின தடை உணடாகும

காறறு இல்லாத இடததில வைதத தீபம அசையாது ஒளிகுனறா திருபபதுபோல, யோகததைச செயபவனுடைய ஆதமஸவரூபம மறற விஷ யஙகள அனைததினினறும மனம நீஙகபபெறறு ஒரே ஞானஸவரூபமாய பரகாசிககும அபபொழுது மனததிறகுப பெருமகிழசசி எறபடும, அளவறற ஸுகம உணடாகும அநத அநுபவததிலேயே யோகி வெகுநேரம இருப பான, யோகம ஓயநத பிறகும அவவநுபவததையே விருமபுவான யோகத தில இருககுமபோது நறகுணமுளள புததிரனுடைய மரணம முதலிய பெரிய துனபம வநதாலும அவனுககு உறசாகம குனறாது, யோகததிறகும தடை வாராது இததகைய யோகததின சிறபபை அறிநது முறகூறிய முறைபபடி யோகாபயாஸததைச செயயவேணடும

[யோகிற் சமநிலை நால்வகையும்] யோகாப்யாஸம் செய்பவனுக்கு அந்த யோகம் பக்குவமாவதற்குத் தக்கவாறு நான்கு நிலைகள் வருகின்றன அவற்றுள் முந்திய நிலைக்குப் பிந்திய நிலை பக்குவமானதாகும் அவையாவன—

(1) ஸகலமான ஜீவாத்மாக்களும் ப்ரக்ருதியின் ஸம்பந்தமற்ற பரிசுத்தமான நிலைமையில் ஜ்ஞாநஸ்வரூபமாகத் தோற்றுகின்றன இந்த அநுஸந்தாநமுள்ள அதிகாரி, தன் ஆத்மாவை மற்ற ஆத்மாக்கள் போன்றதாகவும், மற்ற ஆத்மாக்களைத் தன் ஆத்மாவைப் போன்றனவாகவும் பார்ப்பான் எல்லா ஆத்மாக்களும் ஒரே தன்மையனவாகவிருப்பதுபற்றி ஓர் ஆத்மாவைக் கண்டால் எல்லா ஆத்மாக்களும் அதே தன்மையுள்ளனவாகப் பார்க்கப்பட்டனவாம் ஆக ஜ்ஞாநஸ்வரூபமாயிருப்பதில் ஆத்மாக்கள் ஒன்றுக்கொன்று ஸமமாயிருப்பதைக் காண்பதுவே ஸமதாசநத்தின் முதல்நிலையாகும்

(2) புண்யபாபங்கள் கழிந்து பரிசுத்தமான ஜீவன் ஈச்வரனைப் போன்றவனுவான் ஆகவே ஸகல ஆத்மாக்களும் ஈச்வரனும் ஸமமாயிருப்பதால் ஜீவாத்மா பரமாத்மா ஆகிய இரண்டினுள் ஒன்றைக் கண்டவன் மற்றொன்றையும் 'இதுபோன்றதே' என்று பார்ப்பான் ஆக, பரிசுத்தமான ஜீவாத்மாக்களைப் பரமாத்மாவுக்குச் சமமாகப்பார்ப்பதுவே இரண்டாவது நிலையாகும் இது முந்திய நிலையைக் காட்டிலும் பரிபக்குவமான நிலையாகும்

(3) காமஸம்பந்தமில்லாமலும் சுருங்குதலில்லாத ஜ்ஞாநஸ்வரூபமாகவும் நிற்கும் ஜீவாத்மா பரமாத்மாவைப்போன்றவனுவான் இவ்வாறு யோகத்தையில் அநுஸந்திப்பவன் இதன் ஸம்ஸ்காரத்தை மிகப்பெற்று யோகம் கலைந்த காலத்திலும் இவ்வநுஸந்தாநம் தொடர்ந்து நிற்கப்பெறுவான் இவ்வாறு தன் ஆத்மாவையும் பிற ஆத்மாக்களையும் யோகம் கலைந்தகாலத்திலும் ஈச்வரனுக்குச் சமமாக அநுஸந்திப்பதுவே மூன்றும் நிலையாகும் இது முந்திய நிலையைக்காட்டிலும் பரிபக்குவமானதாகும்

(4) ஸகலஆத்மாக்களும் குறைவுபடாத ஜ்ஞாநஸ்வரூபமாயிருப்பதால் ஸுகதுக்கங்களை ஸமமாகப் பாவிக்கவேண்டும் அதாவது— உலகில் ஒருவனுக்குப் புத்திரன் பிறந்தால் மற்றொருவனுக்கு மகிழ்ச்சியும், ஒருவனுடைய புத்திரன் இறந்தால் மற்றொருவனுக்கு வருத்தமும் உண்டாவதில்லை ஆனால் யோகி இவ்வகையின்பமும் துன்பமும் தனக்கு வந்திடினும் முறையே மகிழ்ச்சியும் வருத்தமும் கொள்ளாதிருப்பான் இவ்வாறு ஸுக துக்கங்களை ஸமமாகப் பாவிப்பதே நான்காம் நிலையாகும் இதுவே ஜீவாத்மாவைப் பற்றிய யோகத்தின் உச்சநிலையாகும்

இவ்வாறு ஸமதாசனம் நால்வகைப்படும்

**[ யோகினுபாயமும் ]** சேதநனுடைய மனம நெடுஙகாலம அறப விஷயஙகளிலேயே ஒனறுபபடடுப பழகிவிடடபடியால அதை அடககி ஆதமா வினிடததில செலுததி யோகம செயவது மிகக கடினமே ஆயினும, ஆதமா இயறகையாக அழிவறறிருபபதையும, ஜஞாநம ஆநநதம இவறறின ஸவரூபமாயிருபபதையும, காமததிறகு வசபபடாதிருபபதையும, தோஷஙகள தடடாதிருபபதையும ஆராயநதுபாாததுப பழகினுல மனம ஆதமாவினிடத தில ஈடுபபடடு யோகததிறகு அநுகூலமாகிவிடும அவவாறே ஆதமாவைத தவிர மறற வஸதுககளில உளள தோஷஙகளைச சிநதிததால வைராககியம ஏறபடடு ஆதமாவைபபறறிய யோகததில மனம ஈடுபடடுவிடும. இதுவே யோகததின உபாயமாகும

**[ யோகத்தனுல் வரும் பேறுகளும் ]** சிரததையோடு யோகததைச செயயததொடஙகியவன, பிறகு அதில மிகதத திடமான பழககமிலலாமை யால தொடஙகுமபோதே யோகததிலிருநது தவறிவிடடாலும அவனுககுத தீஙகு ஒனறும வருவதிலலை எவவகையான போகஙகளை அநுபவிகக ஆசைப படடிருநது பின யோகததிலிருநது தவறினுனே, அவவகைப போகஙகளை மஹாபுணயசாலிகள அநுபவிககும புணயலோகஙகளில பல வாஷஙகள இருநது அவவாசை தீருமவரையில யோகததின மஹிமையால அநுபவிததுப பிறகு பெரியோாகளின குலததில வநது பிறநது அபபெரியோரின சோக கையால மறுபடியும யோகாபயாஸததைத தொடஙகுவான

யோகம பரிபககுவமான நிலையில விததி பெறுவதறகு முன தவறி னுனேயாகில யோகாபயாஸம செயதுகொணடிருபபவாகளும யோகததை உபதேசிகக வலலமையுடையவாகளுமான பெரியோாகளுககுப புததிர னுகவோ மறற உறவினனுகவோ பிறபபான அதனுல முநதிய தேஹததி லிருநதபடி யோகததைபபறறிய உணாசசியே உணடாகித தூஙகி விழிதத தலைபபோல மறுபடியும விததி பெற முயலவான, பின இடையூறு இலலாமல விததிபெறுவான இவையனைததும யோகததின மஹிமை யாலேயேயாம

யோகம ஆரமபிககாமல ஆரமபிகக விருமபியபொழுதே அநதவிருபபத திலிருநது நழுவிவிடடால யோகததின மஹிமையால மறுபடியும அவ விருபபம உணடாகபபெறறுப பின காமயோகம ஜஞாநயோகம இவறறைச செயது ஜஞாநாநநதஸவரூபனுன ஆதமாவை ஸாக்ஷாதகரிககப பெறுவான

இவவாறு யோகததின ஸமபநதமுளள ஒவவொருவனும எநத நிலையில வழுவினுலும இறுதியில விததியைப பெறறுவிடுவான.

[யோகத்தனில் முக்கியமும்] பக்தியோகத்தைச் செய்ப வன் அளவற்ற பக்தியோடு எம்பெருமானை க்ஷணம் பிரிந்தாலும் உயிர் தரிக்க மாட்டாத நிலையுடையனாய், பகவானை அடைந்து அநுபவிக்கப் பேராவல் கொண்டு மிக விரைபவனாய், எம்பெருமானையே நேரில் உபாஸிப்பவனாத லின் அவனே கீழ்க்கூறிய யோகிகளைக் காட்டிலும் மிகச் சிறந்தவனாவன். அவன் செய்யும் யோகமே முற்கூறிய யோகங்களினும் சிறந்ததாம்

ஸர்வேச்வரனைப்பற்றிய யோகம் சிறந்து நிற்பதிலும் வஸுதேவ புத்திரனாய் அவதரித்த கண்ணன் திருமேனியை இலக்காய்க்கொண்டு அநுஷ் டிக்கும் பக்தியோகமே மிகச் சிறந்ததாமென்று ஸூசிக்கப்பட்டதாகின்றது.

இவ்விஷயங்களை ஆறாவது அத்யாயத்தில் கண்ணன் அர்ஜுந னுக்கு உபதேசித்தான்—என்றவாறு

நாக + அணை = நாகணை—தொகுத்தல், செய்யுள்விகாரம் 7

யோகாப்யாஸவிதிர்யோகீ சதுர்தா யோகஸாதநம் ।
யோகஸித்தி: ஸ்வயோகஸ்ய பாரம்யம் ஷஷ்ட உச்யதே ॥

இனி 7-வது அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—

333

தானின்ற வுண்மையைத் தன்றனி மாயை மறைத்தமையுந்
தானன்றி மாயை தனைத்தவிரப் பான்விரகற்றமையு
மேனின்ற பத்தர்க ணால்வரின் ஞானிதன் மேன்மைகளுந்
தேனின்ற செங்கழ லானறெளி வித்தனன் பார்த்தனுக்கே. 8

உரை — தேன் நின்ற – தேன் தங்கியிருக்கின்ற, செம் கழ லான் – சிவந்த திருவடி (த் தாமரை) யையுடைய கண்ணன், பார்த்த னுக்கு, அர்ஜுநனுக்கு, தான் நின்ற உண்மையை – (ஈச்வரனாகிய) தான் (மற்ற வஸ்துவைக் காட்டிலும்) விலக்ஷணமாய் நின்ற தத் துவத்தை, தன் தனி மாயை – தனக்குச்சேஷமான ஒப்பற்ற ப்ர க்ருதி, மறைத்தமையும் – மறைத்து நிற்பதும், தான் அன்றி – தன்னைத் தவிர, மாயைதனைத் தவிர்ப்பான் – ப்ரக்ருதியின் ஸம் பந்தத்தை ஒழித்தற்கு, விரகு அற்றமையும் – உபாயம் ஒன்று மில்லாதிருத்தலும், மேல் நின்ற – (முன்னவருக்குப் பின்னவர்) உயர்ந்தவர் என்னும்படி நின்ற, பத்தர்கள் நால்வரில் (ஆர்த்தன்

ஆர்த்தார்த்தி, ஜிஜ்ஞாஸு, ஜ்ஞாநி என்ற) பக்தர்கள் நால்வரில், ஞானிதன் மேன்மைகளும் — ஜ்ஞாநியின் ஏற்றங்களும் (ஆகிய இவற்றை), தெளிவித்தனன் — தெளிவாக உபதேசித்தான்.

[**தானின்ற மறைத்தமையும்**] ஸர்வேச்வரன் சேதந-அசேதநங்களைக்காட்டிலும் வேறுபட்டவன், அவற்றைத் தனக்குச் சேஷமாகக் கொண்டவன், அவற்றுக்குக் காரணமாயிருப்பவன், அவை அவனிடத்திலேயே லயத்தையடைகின்றன, அவனுக்குச் சரீரமாயிருக்கின்றன. அவன் ஜ்ஞாநம் முதலிய ஸகலமான திருக்கல்யாணகுணங்களுக்கும் இருப்பிடமானவன், எவ்வகையாலும் அவனே மிகச் சிறந்தவன். அவனைக்காட்டிலும் சிறந்தவன் இல்லை. இத்தகைய அவனது பெருமையைச் சேதநர் அறியாதவாறு எம்பெருமானால் படைக்கப்பட்டு அவனுக்குச் சேஷமான மாயை மறைத்துவிடுகின்றது. இம்மாயையே ப்ரக்ருதியெனப்படும். இது ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் மூன்று குணங்களடங்கியது. இதுவே சரீரம் இந்த்ரியம் முதலியனவாக மாறுபாட்டை அடைகின்றது.

[**தானன்றி விரகற்றமையும்**] இவ்வாறு எம்பெருமானது பெருமையை மறைக்கும் மாயையைக் கடந்து அவனை உபாஸிப்பதற்கு உபாயம் அவனது திருவடியைச் சரணமடைவதேயாகும். இந்த மாயையை ஒழிக்க எம்பெருமானைச் சரணமடைவதைத் தவிர வேறு உபாயமில்லை.

[**மேனின்ற மேன்மைகளும்**] எம்பெருமானைச் சரணமடைந்து உபாஸிக்கும் புண்யசாலிகள் நால்வர். அவர்களாவார்— ஆர்த்தன், ஆர்த்தார்த்தி, ஜிஜ்ஞாஸு, ஜ்ஞாநி என்பவர்.

(1) **ஆர்த்தன்**—ஐச்வர்யத்தை இழந்து பின் அதை அடைய விரும்புமவன். (2) **அர்த்தார்த்தி**—புதிதாக ஐச்வர்யத்தைப் பெற விரும்புமவன். (3) **ஜிஜ்ஞாஸு**—ப்ரக்ருதிஸம்பந்தமற்ற பரிசுத்தமான ஆத்மஸ்வரூபத்தை அடைய விரும்புமவன். (4) **ஜ்ஞாநி**—பகவானுக்கு அடிமையாயிருத்தலையே இயல்பாகக்கொண்ட ஆத்மஸ்வரூபத்தை அறிந்து, ப்ரக்ருதி ஸம்பந்தமற்ற அதை அநுபவிப்பதுடன் ஓய்ந்துவிடாமல் பகவதநுபவத்தையே சிறந்த பலனாகக்கொள்பவன். இந்த நால்வகையினரும் வேறு தேவதையை உபாஸிக்காமல் எம்பெருமானையே உபாஸிப்பவர்கள். இவ்வுலகில் பெரும்பாலோர் பழைய வாஸனையால் அறிவுகெட்டு அற்ப பலனுக்காக இந்த்ரன் முதலிய தேவதைகளைப் பூஜிக்கின்றனர். இவ்வாறின்றி எம்பெருமானையே உபாஸிக்கும் இந்த நால்வகையினரை இவ்வுலகில் காண்பதுவும் அரிதேயாகும். இந்த நால்வருள்ளும் ஜ்ஞாநியின் மேன்மை சொல்லுந்தரமன்று. முதல் மூன்று வகையினரும் தாங்கள் விரும்பிய

பலனைப பெறுமவரை எமபெருமானிடம ஈடுபடடிருபபா, தாஙகள பலனை விருமபியதால அதறகுச சாதனமாகவுளள எமபெருமானிடமும அவாகள பகதியைக கொளளவேணடியதாயிறறு ஜஞானியோ எமபெருமானைத தவிர வேறு பலனைக கனவிலும கருதாதவனாதலின எபபொழுதும அவனிடமே ஈடுபடடிருபபன, அவனிடமே பகதியைக கொணடிருபபன மேலும ஜஞானிககு எமபெருமானமீது உளள காதலை அளவிடடுக கூறுவதறகு அனைததையும அறியவும செயயவும வலலமைகொணட எமபெருமானாலும முடியாது அனறியும பகவானைப பிரிநது அவன க்ஷணமகூட உயிாதரிககமாடடான அவன இநநிலையிலிருபபதுபறறி எமபெருமானும அவனைப பிரிநது க்ஷணமும உயிாதரிககமாடடாரெனனுமபடி ஜஞானியைத தனககு உயிராகக கொணடுளளான பகவானுககு அடிமையாயிருததலே ஆதமாவின ஸவரூபமெனபதை அறிநது பகவானைச சரணமடைவதெனபது முன பறபல புணயஜனமஙகளைத தொடாநது பெறறவனுககே வரக கூடியதாகும இததகைய மஹாபாகயம பெறற ஜஞானியை உலகில காணபது அரிதினும அரிதாகும

இவவாததஙகளை ஏழாம அதயாயததில கணணன ஆாஜுனனுககு உபதேசிததான—எனறவாறு 8

ஸ்வயாதாத்ம்யம் ப்ரக்ருத்யாஸ்ய திரோதி: ஶரணாகதி: ।
பக்தபேத: ப்ரபுத்தஸ்ய ஶ்ரைஷ்ட்யம் ஸப்தம உச்யதே ॥

---

**8-வது அத்யாயத்தின் ஸாரம் கூறப்படுகின்றது—**

334 ஆராத செலவமு மாருயிா காணு மரும்பயனும
பேராது தன்கழற கீழம ரும்பெரு வாழ்சசிகளுஞ
சோரா துகந்தவா றுமதி கோளவதுஞ் செயவனவுந
தேரா விசயனுக் குததிரு நாரணன் செப்பினனே 9

உரை:—திருநாரணன் — ஸ்ரீமநநாராயணன ஆகிய கணணன, தேரா விசயனுககு — தெளிவுபெறாத ஆாஜுனனுககு, ஆராத — போதுமெனறு தோனறாத, செலவமும் — ஐசுவாயததையும, ஆா உயிா காணும் — அருமையான ஜீவனைக கணடு அநுபவிபபதாகிய, அரும் பயனும் — அருமையான பலனையும, தன் கழல கீழ் — (ஸாவேசுவ்ரனாகிய) தன் திருவடியின கீழ, பேராது அமரும் — பிரியாது தஙகுதலாகிய, பேரு வாழ்ச்சிகளும் — பெரிய வாழவுகளையும,

உரை — பண்டை மறைக்கு — அநாதியான வேதத்திற்கு, பகை என நின்ற — விரோதி என்னும்படி நின்ற, பரமதங்கள் — பிறமதங்களை, கொண்டவர் கொள்ளும் — கைக்கொண்டவரால் அடையப்படுகின்ற, பயன் ஒன்று இலது எனும் — பலன் ஒன்றும் இல்லை என்று அறிந்துகூறும்படியான, கூர் மதியால் — ஸூக்ஷ்மமான புத்தியோடு, வண் துவரைக்கு அரசான — அழகிய த்வாரகாநகரத்தின் நாயகனான, நம் மாயனை — அதிசயச்செய்கையுடைய நம் கண்ணனை, வானுலகில் — பரமபதத்தில், கண்டு களிப்பது எனும் — ஸேவித்து ஆநந்திப்பது என்ற, காதல் ஒன்றை — ஆவல் ஒன்றையே, கருதுவம் — எண்ணுவம்.

அநாதியான வேதத்திற்கு விரோதியாய் நிற்கும் பிறமதத்தைப் பற்றியவர்கள் இம்மை மறுமைப்பயன் யாதுமில்லாது வீண்பாடுபடுவதை யறிந்த நாம் எம்பெருமானைப் பரமபதத்தில் அநுபவித்தலாகிய மஹா புருஷார்த்தத்தைப் பெற ஆவலுடையோம் — என்றவாறு. 48

எண்சீராசிரியவிருத்தம்

202 கலந்திகழும் போகங்கள் கண்டு வெள்கிக்
காரியமுங் காரணமுங் கடந்து நாம்போய்க்
குலந்திகழுங் குருக்களடி சூடி மன்னுங்
குற்றேவல் அடியவர்தங் குழாங்கள் கூடி
வலந்திகழுந் திருமகளு மற்றி டத்தே
மன்னியமண் மகளாரு நீளை யாரு
நலந்திகழ வீற்றிருந்த நாதன் பாத
நமக்கிதுவே முடிபென்ன நண்ணி னேமே 49

உரை — கலந்து இகழும் — (விஷம் கலந்த தேன்போல துக்கத்துடன்) கலந்திருந்து (அதனால்) இகழப்படுகின்ற, போகங்கள் கண்டு வெள்கி — லௌகிகபோகங்களைப் பார்த்து வெட்கமடைந்து (உபாயத்தை அநுஷ்டித்து), காரியமும் — (மஹான் அஹங்காரம் அல்லது சரீரம் இந்த்ரியம் முதலிய) காரியங்களையும், காரணமும் — மூலப்ரக்ருதியையும், கடந்து — தாண்டி, நாம் போய் — நாம் (ஸ்ரீவைகுண்டத்திற்குச்) சென்று, குலம் திகழும் குருக் கள் — (அங்கே) கூட்டமாய் ப்ரகாசிக்கின்ற (நம்) ஆசார்யர்களின், அடி சூடி — திருவடியை (நம் தலையில்) சூடி, மன்னும் குற்றேவல் — நிலையான கைங்கர்யத்தைச் செய்கின்ற, அடியவர்தம் — (நித்யஸூரிகளும் முக்தர்களுமாகிய) பாகவதர்களின், குழாங்கள் கூடி — கோஷ்டிகளில் கூடியிருந்து, வலம் திகழும் திருமகளும் — வலப் பக்கத்தில் ப்ரகாசிக்கின்ற லக்ஷ்மியுட

சோராது – குறைவுபடாது (பெறவேண்டுமென்று), உகந்தவர் – விரும்பிய அதிகாரிகள், தூ மதி கோள்வதும் – பரிசுத்தமான (தம்) மனத்தால் அறியவேண்டியனவும், செய்வனவும் – அநுஷ்டிக்க வேண்டியனவும் (ஆகிய இவற்றை), செப்பினன் – உபதேசித்தான்.

[ஆராத செல்வமும்] இந்த்ரன், ப்ரஹ்மா, ருத்ரன் இவர்களுடைய போகங்களைக்காட்டிலும் மிகச் சிறந்துள்ள போகம் ஐசுவர்யம் எனப்படும். இதை விரும்புமவர் ஐசுவர்யார்த்திகளென்னப்படுவர். இழந்த செல்வத்தை அடைய விரும்பும் ஆர்த்தரும், நூதனமான செல்வத்தை விரும்பும் அர்த்தார்த்திகளும் இங்கு ஐசுவர்யார்த்திகள் என்று ஒரு வகுப்பாக்கப் பட்டனர்.

[ஆருயிர்காணும் அரும்பயனும்] ப்ரக்ருதியின் ஸம்பந்தம் நீங்கிப் பரிசுத்தமான ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்து அநுபவிப்பது கைவல்யம் எனப்படும். இதை விரும்புமவர் கைவல்யார்த்திகள் எனப்படுவர்.

[போராது............வாழ்ச்சிகளும்] எம்பெருமானுடைய திரு

னும், இடத்தே மன்னிய — இடப்பக்கத்தில் நித்யவாஸம் செய்கின்ற, மலர் மகளாரும் நீளையாரும் — பூமிப்பிராட்டியுடனும் நீளாதேவியுடனும், மலர் திகழ — ஆநந்தம் மிகும்படி, வீற்றிருந்த நாதன் பாதம் — எழுந்தருளியுள்ள எம்பெருமானுடைய திருவடியை, நமக்கு இது முடி போலவே — "நமக்கு இதுவே கிரீடமாகும்" என்னும்படி, நண்ணினேம் — பொருந்தினோம்.

மற்று — அசை

உலகசுகங்களை வெறுத்து, உபாயத்தை அநுஷ்டித்து, ஸம்ஸாரத்தினின்று விடுபட்டு, ஸ்ரீவைகுண்டத்தில் ஆசார்யர்களை வணங்கி, பாகவத கோஷ்டியுள் கலந்து, ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளை முடியில் தரிக்கும் கைங்கர்யம் செய்வோம்—என்றவாறு 49

இனி மூன்று பாசுரங்களால் முன்னோர்கள் காட்டிய வழியே ஆஸ்திகர்கள் ஏற்றுக்கொள்ளத்தக்கதென்று அருளுகின்றார்—

கட்டளைக்கலித்துறை

203 மானங்க ளின்றி வகுத்துரைக் கின்ற மதங்களெலாந்
தானங்க ளன்று தரும நெறிக்கென்று சாற்றியபின்
வானங் கவர்ந்து மறைமுடி சூடிய மாதவத்தோர்
ஞானங்க ளொன்ற நடக்கின்ற நல்வழி நாடுவமே. 50

[ பாசுரம் 50-முதல் முடிவுவரை—நிகமநாதிகாரம் ]

உரை— மானங்கள் இன்றி — (வேதம் முதலிய) ப்ரமாணங்களைக் கொள்ளாமல், வகுத்து உரைக்கின்ற — (தோன்றியவாறு) பிரித்துச் சொல்லுகின்ற, மதங்கள் எலாம் — மதங்கள் அனைத்தும், தரும நெறிக்கு — தர்ம மார்க்கத்திற்கு, தானங்கள் அன்று — இடங்களாகமாட்டா, என்று சாற்றிய பின் — என்று ஸ்தாபித்த பின், வானம் கவர்ந்து — பரமபதத்தை ஆசைப்பட்டு, மறை முடி சூடிய — வேதாந்தத்தில் முடிசூடி நிற்பவரான, மா தவத்தோர் — பெரிய தவமாகிய ப்ரபத்தியை அநுஷ்டித்தவர்களான நம் பூர்வாசார்யர்கள், ஞானங்கள் ஒன்ற நடக்கின்ற — சாஸ்த்ரங்கள் (ஒன்றோடொன்று விரோதமில்லாது) ஒருமுகமாய்ச் சேரும்படி நடக்கின்ற, நல் வழி நாடுவம் — சிறந்த மார்க்கத்தைப் பற்றுவோம்

வேதத்தைத் தழுவாத எந்த மதநூலும் தர்மத்தைப் போதிக்கமாட்டாது என்று ஸ்தாபித்து, பூர்வாசார்யர்கள் சாஸ்த்ரங்களில் ஒன்றோடொன்று விரோதமில்லாதபடி ஒருமுகப்படுத்தி அதற்குத்தக்க அநுஷ்டித்த முறையைக் கைக்கொள்வோம்—என்றவாறு. 50

கட்டளைக்கலித்துறை

204 தன்னடிக் கீழுல கேழையும் வைத்த தனித்திருமால்
பொன்னடிக் கேற்கின்ற புண்ணியர் கேண்மின் புகலறிவார்
முன்னடி பார்த்து முயலுத லாலவர் சாயையெனப்
பின்னடி பார்த்து நடந்து பெரும்பத மேறுவமே 51

உரை:— தன் அடிக் கீழ் – தன் திருவடியின் கீழ், உலகு ஏழையும் வைத்த – ஏழுலகத்தையும் நிறுத்தியாளுகின்ற, தனித் திருமால் – ஒப்பற்ற எம்பெருமானுடைய, பொன் அடிக்கு–அழகிய திருவடிகளைப் பெற்று அநுபவிப்பதற்கு, ஏற்கின்ற–உரிமையுள்ள, புண்ணியர் – புண்யசாலிகளே! கேண்மின் ! – (நமக்கு நன்மையானதொன்றைக் கூறுகின்றேன்) கேட்பீராக. புகல் அறிவார் – உபாயங்களின் ஸ்வரூபத்தை அறிந்த நம் ஆசார்யர்கள், முன் அடி பார்த்து – தங்கள் பெரியோர் அடிச்சுவட்டைக் கவனித்து, முயலுதலால் – (அதன்படியே நடக்க) முயலுதலால், அவர் பின் சாயை என – (நாமும்) அவர்பின் நிழல் எனும்படி, அடி பார்த்து – (அவர்கள்) அடிச்சுவட்டையே கவனித்து, நடந்து – (அவ்வாறே) நடந்து, பெரும் பதம் ஏறுவம் – மிக உயர்ந்த ஸ்தான (மாகிய பரமபத) த்தை அடைவோம்.

சேதநர் அனைவருக்கும் மோக்ஷத்தைப் பெற உரிமையுண்டு ஆதலின் நம் பூர்வாசார்யர்கள் கைக்கொண்ட வழியையே பின்பற்றி நாமும் மோக்ஷானந்தத்தைப் பெறுவோம்—என்றவாறு. 51

எண்சீராசிரியவிருத்தம்

205 வையமெலா மிருணீக்கு மணிவி ளக்காய்
மன்னியநான் மறைமௌலி மதியே கொண்டு
மெய்யலது விளம்பாத வியாசன் காட்டும்
விலக்கில்லா நல்வழியே விரைந்து செல்வீ
ரையமற வறுசமயக் குறும்ப றுத்தோ
மணியரங்க ரடியவர்க்கே யடிமை செய்தோ
மையகடல் வட்டத்துள் மற்றுந் தோற்றும்
வாதியர்தம் வாய்ப்பகட்டை மாற்றி னோமே. 52

உரை — ஐயம் அற – ஸந்தேஹமில்லாமல், அறு சமயக் குறும்பு – ஆறு மதங்களின் வலிமையை, அறுத்தோம் – ஒழித்துவிட்டோம், அணி அரங்கர் அடியவர்க்கே-அழகிய ஸ்ரீரங்கநாதனுடைய தாஸர்களுக்கே,அடிமை செய்தோம் – கைங்கர்யம் செய்யப்பெற்றோம். மைய கடல் வட்டத்துள்–

யாகச்சென்று, துயரம் தீர்த்த—(உலகினுடைய)துக்கத்தைப்போக்கிய, மாதவனார்—எம்பெருமான், பொன் அயிந்தை நகரில்— அழகிய திருவயிந்திரபுரத்தில் (தெய்வநாயகனாக அவதரித்து), வடகொங்கில் — வடபுறத்தில், வானி ஆற்றின் — பெருகுகிற கருடநதியின், வண்ணிகை — புகழத்தகுந்த, நல் நடம் கண்டு — சிறந்த நடனத்தைக் கண்டு, மகிழ்ந்து வாழும்போது — ஸந்தோஷித்து எழுந்தருளியிருந்தபோது, முன்னாள் புணராத — முன்பு செய்யப்படாத, இவை பரமதப் போர் — இந்தப் பரமதபங்கஸூக்தியை, நாம் பூரித்தோம் — நாம் தலைக்கட்டினோம்

திருவயிந்திரபுரத்தில் ஸ்ரீக்ருஷ்ணன் தெய்வநாயகனாக அவதரித்து வடபுறத்தில் பெருகுகிற கருடநதியின் அலைகள் அசைந்து நடனமாடுவதைக் கடாக்ஷித்துக்கொண்டு மகிழ்ந்து எழுந்தருளியிருந்த ஸமயத்தில் அவனைக் கண்ணாரக் கண்டு களித்த நாம், பிறமதக் கொள்கைகளில் ஸ்ரீபாஷ்யம் முதலிய ஸ்ரீஸூக்திகளால் கண்டிக்கப்பட்ட அம்சங்களைத் தவிர, இன்னும் ஆக்ஷேபிக்கக்கூடிய பல அம்சங்களையும் கண்டித்துப் பரமதபங்கத்தைப் பூர்த்திசெய்தோம்— என்றவாறு

[ இவ்வாறு பதவுரையும் கருத்துரையும் பழைய வ்யாக்யானத்தையே தழுவி இங்கு எழுதப்பட்டன இப்பாசுரத்தின் பிற்பகுதிக்குப் பொருள்கொள்வதில் சிற்சில இடர்கள் உள ‘கொங்கு’ எனுஞ்சொல் பக்கம் என்ற பொருளைத் தருவதாகத் தமிழ் நிகண்டுகளிலோ இலக்கிய நூல்களிலோ காணப்படவில்லை மேலும் ‘வானி’ எனுஞ் சொல் பவானி நதியையோ அமராவதிநதியையோ கூறுமேயன்றிப் ‘பெருகுகிற’ என்னும் பொருளைத்தருமாவென்பர் தமிழர். ‘வண்ணிகை’ யெனுஞ் சொல் ‘வாணிக்கத் தகுந்த’ என்ற பொருளைக் கொடுப்பதும் ஆராயவேண்டியதாகும். இங்ஙனம் இடர்கள் உளவாதலின் பிற்பகுதிக்குப் பின்வருமாறு பொருள்கொள்ளுதல் சிறக்குமென்பர் பலர்—

வடகொங்கில் — கொங்குநாட்டின் வடபுறத்தில், வானி ஆற்றின்— பவானிநதி(க்கரை)யின்கண், மாதவனார் — ஸ்ரீக்ருஷ்ணனுடைய, வண்ணிகை நல் நடம் கண்டு— வேஷம் பூண்டு ஆடுவதுபோன்ற சிறந்த நடனத்தை ஸேவித்துக்கொண்டு, நாம் மகிழ்ந்து வாழும்போது — நாம் மகிழ்ச்சியுடன் வசிக்குங்காலத்தில், பொன் அயிந்தை நகரில் — அழகிய திருவயிந்திரபுரமென்னும் நகரத்தில், முன் நாள் புணராத — முன்பு ஆரம்பிக்கப்பட்டுக் கூடிவரப்பெறாத, பரமதப் போர் இவை—பரமதபங்கம் செய்கின்ற இந்த ஸூக்திகளை, பூரித்தோம் — பூர்த்திசெய்தோம்.

கொங்குநாடு என்பது கோயம்புத்தூர்—சேலம் ஜில்லாவைச் சார்ந்ததும், மைசூரிலுள்ள ஒரு பகுதியுமான தமிழ்நாடு [தமிழ் அகராதி.]

பரமதபஙகம, திருவயிநதிரபுரததிலேயே ஆரம்பிககப்பட்டிருநதும நடுவில கலாபம முதலிய இடையூறுகளால பூாததிசெய்யப்பெறுமலிருந்து, ஸ்ரீதேசிகன கொஙகுநாட்டில எழுநதருளியிருககநேரிட்டு அப்பொழுது பூாததிசெயயப்பட்டிருககுமென்றும சிலா கருதது உரைப்பர்.]

[இவவாறு பொருள கொளளுமிடததும, ஸ்ரீதேசிகன் பவானி நதிககரையில பரமதபஙகததைப் பூாததிசெய்வித்த ஸதலம இதுவென்று விளஙகாமலிருககின்றது மேலும அஙகே எமபெருமானுடைய ஸநநிதி இருநத வரலாறும புலனுகவில்லை. ஆதலின பினவருமாறு பொருள் கொளளததகுமாவெனப் பெரியோா ஆய்க—

வடகோங்கில் வான் யாற்றின் — வடககேயுளளதும் பரிமளம மிகுந்ததுமான சிறநத (யமுனா)நதி(ககரை)யினகண, மாதவனூர் — கண்ணன் (செய்தருளிய), வண்ணிகை நல் நடம் — வேஷம பூண்டு ஆடுவதுபோன்ற சிறநத நடனததை (ராஸகரீடை முதலிய திருவிளையாடல்களை), பொன் அயிந்தை நகரில் — அழகிய திருவயிநதிரபுரமென்னும நகரத்தில, நாம் கண்டு மகிழ்ந்து வாழும்போது — நாம் ஸேவிததுககொண்டு மகிழநது வஸிக்குஙகாலத்தில, முன்னுள் புணராத பரமதப்போர் இவை — இதறகு முனபு அமையாத பரமதபஙகமாகிய இநதக் கிரநததனை, பூரித்தோம் — முறறுவிததோம.

இதனுல, முன்பு கிருஷ்ணவதாரததில யமுனாநதிக்கரையில தான செய்தருளிய பல திவயசேஷ்டிதஙகளையெல்லாம தெய்வநாயகன் திருவயிநதிரபுரததிலேயே தமககுக காட்டியருள, அவ்வநுபவத்தால மிக மகிழ்நதிருநத நிலையில அபூாவமான இபபிரபநதம் முறறுவிக்கப்பெற்றது— என்றவாறு ]

53

இங்ஙனே பிறமதங்கள் அனைத்தையும் கண்டிக்குமாறு அருள்புரிந்துதவிய திருவாழியாழ்வானுடைய பதினுறு திருக்கைகளின் வலிமையையும் பெருமையையும் பேசிப் பிரபந்தம் தலைக்கட்டப்படுகின்றது—

பதினுறுசீாசசந்தவிருத்தம

207 திகிரிமழ வுயர்குந்தந் தண்டங்கு சம்போறி
சிதறுசத முகவங்கி வாள்வேல மர்ந்ததுந்
தெழிபணில சிலைகண்ணி சீரங்க செவ்விடி
செழியகதை முசலந்தி சூலந்தி கழ்ந்தது

மகிலவுல தகள்கண்டை யாயோர லங்கலி
லடையவடை விலிலங்க வாசின்றி நின்றது
மடியுமரு கணையுமா வாமென்ன நின்றடி
யடையுமடி யரையன்பி னலஞ்ச லென்பது

மகிழமம ரர்கணங்கள் வானங்க வர்ந்திட
மலியுமசு ரர்புணர்த்த மாயந்து ரந்ததும்
வளருமணி மணிமின்ன வானந்தி கோலிட
மறைமுறைமு றைவணங்க மாறின்றி வென்றதுந்

திகிரிரவி மதியமமிழ் தேசுந்த வெண்டிசைத்
திணிமருள்செ கவுகந்து சேமங்கள் செய்ததுந்
திகழரவ ணையரங்கர் தேசென்ன மன்னிய
திரிகுதரி சனர்செய்ய வீரேன்பு யங்களே 54

உரை — திகிரி — சக்கரமும், மழு — மழுவும், உயர் தந்தம் — மனமைபொருந்திய ஈட்டியும், தண்டு — தண்டாயுதமும், அங்குசம் — ாவெட்டியும், பொறி சிதறு சுடர்முக அங்கி — தீப்பொறிகளைச் சிதறுகின்ற தமுகாக்கியும், வாள் — வாளும், வேல் — வேலும் (ஆகிய ஆயுதங்கள்), மர்ந்ததும் — பொருந்திய இடமும்,

தெழி பணிலம் — ஒலிக்கின்ற சங்கமும், சிலை — வில்லும், கண்ணி — ாசமும், சீரங்கம் — கலப்பையும், செவ்விடி — சிவந்த வஜ்ராயுதமும், ழிய கதை — செழுமையுள்ள கதையும், முசலம் — உலக்கையும், சூலம்—த்ரிசூலமும் (ஆகிய ஆயுதங்கள்), திகழ்ந்ததும்—ப்ரகாசிக்குமிடமும்,

அகில உலதுகள் — ஸகலலோகங்களும், ஓர் அலங்கலில் — ஒரு ாலையில், கண்டையாய் — மணிகளாய், அடைய — முழுவதும், அடை ில் — வரிசையாக, இலங்க — ப்ரகாசிக்கும்படி, ஆசு இன்றி — குற்றம் லலாது, நின்றதும் — நின்ற இடமும்,

அடியும் அருகணையும் ஆம் — திருவடிநிலை(பாதுகை)யும் பக்கத்தே ாய்ந்துகொள்ளும் அணையும் ஆகின்ற, அரவு என்ன நின்று—ஆதிசேஷன் 'பால கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்) என்னும்படி நின்று, அடி அடையும் டியரை — திருவடிகளைச் சரணமடையும் பாகவதர்களை, அன்பினால் — துவர்களிடம் உள்ள) அன்பினாலே, அஞ்சல் என்பதும் — அஞ்சவேண்டா மன்று அபயப்ரதானம் செய்வனவும்,

மகிழும் அமரர் கணங்கள்—மகிழ்வுள்ள தேவாகூட்டஙகளின, வானம் கவர்ந்திட — ஸவாககலோகததைக கொளளையிடுவதறகாக, மலியும் அசுரர் புணர்த்த — ஒனறுகூடிததிரணட அஸுராகள செயத, மாயம் துரந்ததும்— மாயசசெயகைககளை ஒழிததனவும,

வளரும் அணி — நிறைநதுளள திருவாபரணஙகளிலுளள, மணி மின்ன — ரதநஙகள ப்ரகாசிகக, (அநத பரகாசததால) வான் அந்தி கொண் டிட — ஆகாசம செவவானம கொணடாறபோல ஆக, மறை — வேதம, முறை முறை வணங்க — வகைவகையாகப போறறி வணஙகிநிறக, மாறு இன்றி வென்றதும் — பகைவா மீதமினறி ஜயிததனவும,

சிகி — அக்நியையும, இரவி — ஸூாயனையும, மதியம் — சநதரனை யும, உமிழ் — கககுகின்ற, தேசு—தேஜஸ்ஸை, உந்த — வீசியெறிதலால, எண் திசை — எட்டுத திசையிலும, திணி மருள் சேக உகந்து — அடாநத அஜ்ஞாநம ஒழியுமபடி (செயய) மனஙகொணடு, சேமங்கள் செய்ததும் — உலகிறகு) க்ஷேமஙகளைச செயதனவும,

திகழ் அரவு அணை — பரகாசிககினற ஆதிசேஷனாகிய படுககையை யுடைய, அரங்கர் — ஸ்ரீரஙகநாதருடைய, தேசு என்ன மன்னிய — தேஜஸ (வடிவெடுத்துவநதது) எனனுமபடி ஸதிரமாயிருநத, திரி சுதரிசனர் — சுழலகினற திருவாழியாழவானுடைய, செய்ய ஈர் எண் புயங்கள் — சிவநத பதினாறு திருககைகளுமே ஆம

பரமதஙகளைக கணடிககுமபோது திருவாழியாழவானது அருள பெறுவதறகாக இப்பிரபநததின் முதல - கடைசிப்பாசுரஙகளிலும அவா பெருமையே பேசப்பட்டது.

திருவாழியாழவானுடைய திருககைகளில, மாலையில மணிகள்போல உலகமுழுவதும அடஙகியிருககினறது அததிருக்கைகள திருவநநதாழ வானைப்போல பகவதகைஙகாயததை விருமபிச சரணமடையும பாகவதா களுக்குக கருணையுடன அபயப்ரதாநம் செயகினறன, தேவாகளின செலவததைக் கொளளையிடும அஸுராகளை ஒழிககினறன, மறறப பகைவரையும அழிககினறன, தம தேஜஸஸால உலகில அஜ்ஞாநததைப போக்கி க்ஷேமததைக கொடுககினறன, ஆதலின அவறறின பெருமை பேசறபாலதன்று—எனறவாறு 54

'தரிசூலம' எனுஞசொல 'திசூலம' என மருவிநினறது.

பரமதபஙகம-உரை முறறிறறு

ஸ்ரீமதே நிகமாநதமஹாதேசிகாய நம:

ஸ்ரீ:

# மெய்விரத மான்மியம்-உரை

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் தேசிகம்

சீரொன்று • வாழ்வு

---

[ விஷயச்சுருக்கம் ]

ஸத்யவ்ரதமாஹாத்ம்யம் என்று ஒரு ரஹஸ்யம் ஸ்ரீதேசிகனால் மணிப்ரவாளநடையில் அருளிச்செய்யப்பட்டுளது அதிற் சேர்ந்த பாசுரங்கள் அடங்கப்பெற்றது இப் பிரபந்தம் மெய்விரதம்—ஸத்யவ்ரதம் இந்த க்ஷேத்ரம் காஞ்சீபுரம், ஹஸ்திகிரி, பெருமாள்கோயில் எனவும் வழங்கப்பெறும் இந்த க்ஷேத்ரத்தில் அநுஷ்டிக்கப்படும் வ்ரதங்கள் முதலிய புண்ய கர்மங்களுக்கு உடனே பலன்கிடைப்பது நிச்சயமாதலின் *'மெய்விரதம்'* எனப் பெயர் வந்தது. இந்தத் திவ்யதேசத்தில் பேரருளாளன் திருவவதாரம் செய்த வரலாற்றை இப் பிரபந்தத்தால் நாம் நன்கு அறியலாம்

*முன்னொருகால் ப்ரஹ்மா நேரில் எம்பெருமானை ஸேவிக்க விரும்பி முயன்றான், ஜந்மாந்தரபாபத்தால் காரியம் கைகூடவில்லை, மிக வருந்திப் பாரத தேசத்திற்கு வந்து கடுந்தவம் புரிந்தான் அப்பொழுது ஆகாயத்தில் ஓர் அசரீரிவாக்குப் பிறந்தது ஸத்யவ்ரதமென்னும் க்ஷேத்ரம் சென்று அத்திகிரியை யாகவேதியாகக்கொண்டு அசுவமேதயாகம் புரியுமாறு அது கட்டளையிட்டது. உடனே ப்ரஹ்மா தேவசிற்பியான விசுவகர்மாவை அழைத்து யாகவேதியை அங்கு அமைக்கக் கட்டளையிட்டான். சிற்பியும் அவ்வாறே செய்துமுடித்தான் ப்ரஹ்மாவும் அந்நகருக்குக் காஞ்சியெனப் பெயரிட்டு அங்கு அசுவமேதயாகம் செய்யத்தொடங்கினான்*

*ப்ரஹ்மாவின் மனைவி ஸரஸ்வதி ப்ரணயகலஹத்தால் கணவனைப் பிரிந்து தனியே சென்று ஸரஸ்வதியெனும் நதியின் கரையில் தவம்புரிந்து*

கொண்டிருந்தாள்.மனைவியைப் பிரிந்தவனுக்கு யாகம்செய்ய உரிமையில்லை யன்றோ? ஆதலால் அவளை அழைத்துவருமாறு ப்ரஹ்மா தன் புத்திரனை வஸிஷ்டனை அனுப்பினான் அவன் தன் தாயிடம் சென்று தந்தையின் கட்டளையைக் கூறித் தன்னுடன் வரும்படி அழைத்தான் அவள் வர மறுத்தாள். வஸிஷ்டன் திரும்பிவந்து, நிகழ்ந்ததைத் தந்தையிடம் கூறினான் ப்ரஹ்மா ஸாவித்ரி முதலிய மற்ற மனைவியரை வைத்துக்கொண்டு யாகத்தைத் தொடங்கினான்.

அஸுரர்கள், தேவர்களின் நன்மையைப் பொறுதவர்களன்றோ? அவர்கள் இந்த யாகத்தைக் கெடுக்க எண்ணி, ஸரஸ்வதியிடம் போய் "உன் கணவன் உன்னை அவமதித்து யாகம் நடத்துகின்றான்" என்று கூறினர். அவளும் கோபித்து ஒரு நதியாகப் பெருகி யாகசாலையை அழிக்க முற்பட்டாள். இதுகண்ட எம்பெருமான் ஓர் அணையாகத் தானே குறுக்கே பள்ளிகொண்டான். ஸரஸ்வதியும் கோபம் தணிந்து தன் கணவனிடம் வந்தாள். ப்ரஹ்மா அவளையும் சேர்த்துக்கொண்டு யாகத்தை நடத்தினான்.

முடிவில் ப்ரஹ்மா அக்நியில் வபையை ஹோமம்செய்தான். உடனே யாகவேதியின் மத்தியிலிருந்து ஒரு பெரிய தேஜஸ்ஸும், அதன் நடுவில் புண்யகோடி என்னும் விமானமும் தோன்றின. அவ்விமானத்தின் நடுவில் பேரருளாளனும் ஆவிர்பவித்தான். ப்ரஹ்மா ஆனந்தக்கடலில் மூழ்கி அவனை நன்கு அநுபவித்துத் துதித்தான் பேரருளாளனும் வேண்டிய வரம் கேட்குமாறு ப்ரஹ்மாவைக் கட்டளையிட்டான். ப்ரஹ்மா அங்கேயே எழுந்தருளியிருக்கும்படி வரம் கேட்டான் பகவானும் இசைந்தான். பின் ப்ரஹ்மா யாகத்தை முடித்து எம்பெருமானிடம் விடைபெற்று ஸத்ய லோகம் சென்று பகவத்தியானத்திலேயே மூழ்கிக்கிடந்தான்.

[இவ்வரலாற்றை ஸ்ரீதேசிகன் அந்தந்த ஸந்தர்ப்பத்திற்கு ஏற்ற பாக்களில் பாடியிருக்கும் அழகை நம்மால் வர்ணிக்கமுடியாது ஸரஸ்வதிதேவி ப்ரஹ்மாமீது கோபங்கொண்டு ஆவேசத்துடன் யாகத்தைக் கெடுக்கவரும் முறையைக் கூறும் பாசுரத்தைக் கவனிக்கும்போது அவளுடைய ஆவேசத்தையும் கோபத்தையும் நேரில் காண்பதுபோலிருக்கின்றது பேரருளாளனின் திருமேனியழகையும், அவன் இருபிராட்டிமாருடன் காட்சியளிப்பதையும் தக்க உதாஹரணங்களுடன் வர்ணித்திருக்கும் அழகு நம் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுகின்றது இதனுள் ஸ்ரீபாஷ்யத்தின் பதினாறு பாதங்களின் ஸாரார்த்தங்களையும் ஒரே பாசுரத்தில் அமைத்து அருளிச்செய்திருக்கும் வல்லமைக்கு ஈரேழுலகையளித்தாலும் ஈடாமோ? அதிகம் கூறுவானேன்? இதன் பெருமை அநுபவித்தே அறியற்பாலது ]

*வெண்பா*

208 வாழி யருளாளர் வாழியணி யத்திகிரி
வாழி யெதிராசன் வாசகத்தோர் — வாழி
சரணு கதியெனுஞ் சார்வுடன்மற் றொன்றை
யரணுகக் கொள்ளாதா ரன்பு. 1

உரை — அருளாளர் – *பேரருளாளர்*, வாழி – *வாழுக*, அணி த்திகிரி – (*பூமிக்கு*) *அலங்காரமான ஹஸ்திகிரி*, வாழி–*வாழுக*, எதிராசன் ாசகத்தோர் – *ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸூக்திகளில் ஈடுபட்டவா*, வாழி–ாழுக, சரணுகதி எ(ன்)னும் சார்வுடன் – *ப்ரபத்தியென்னும உபாயத் டன*, மற்று ஒன்றை – *வேறு ஒன்றை*, அரணுக – *உபாயமாக*, கொள் ாதார் அன்பு – *கொள்ளாதவாகளுடைய பக்தி*, வாழி – *வாழுக*

*பேரருளாளனும, அவன எழுந்தருளியுள்ள ஹஸ்திகிரியும, ஸ்ரீபாஷ்ய ாரருடைய ஸம்ப்ரதாயஸ்தாகளும, ப்ரபத்தியையே உபாயமாகக் கொண்ட ாகளுக்குப பேரருளாளனிடமுள்ள ஈடுபாடும் நீடூழிவாழுக என்று கைளாசாஸநம செய்தவாறு* 1

*எண்சீராசிரியவிருத்தம்*

209 எண்டிசையுங் கடலேழு மலைக ளேழு
மீரேழு வையகமும் படைத்தி லங்கும்
புண்டரிகத் தயன்புணர்த்த பெரிய வேள்விப்
புனிதநறும் போக்கியத்தை யுவந்து வந்து
தொண்டையெனு மண்டலத்தி னடுவிற் பாரிற்
றூநிலமெய் விரதத்துத் தோன்றி நின்ற
கொண்டலருட் குணமேநாங் கூறு கின்றேங்
கூர்மதியீர் குறியாகக் கொண்மி னீரே. 2

உரை — கூர் மதியீர்! – *கூர்மையான அறிவுபெற்றவர்களே!* ண் திசையும் – *எட்டுத் திசைகளையும*, கடல் ஏழும் – *ஏழு ஸமுத்ரங்களை ம*, மலைகள் ஏழும் – *ஏழு குலபாவதங்களையும்*, ஈர் ஏழு வையகமும்– *பதி ாகு லோகங்களையும*, படைத்து – *ஸ்ருஷ்டித்து*, இலங்கும்–*ப்ரகாசிப்ப மும*, புண்டரிகத்து அயன் – (*எமபெருமானுடைய நாபிக*) *கமலத்து இருப ானுமான ப்ரஹ்மாவால*, புணர்த்த – *நடத்தப்பட்ட*, பெரிய வேள்வி – ரிய(*அசுவமேத*)*யாகத்தின*, புனித நறும் போக்கியத்தை – *பரிசுத்தமான ஸனையுள்ள ஹவிஸ்ஸை*(*ப் பெறுவதற்கு*), உவந்து வந்து – *மகிழ்ந்து*

வந்து, பாரில் — பூமியில், தொண்டையெனும் மண்டலத்தின் நடுவில் — தொண்டைமண்டலமென்னும் தேசத்தின் நடுவில், தூ நிலம் — பரிசுத்தமான ஸ்தலமாகிய, மெய்விரதத்து — ஸத்யவ்ரதமென்னும் க்ஷேத்திரத்தில், தோன்றி நின்ற — அவதரித்து நிலைபெற்ற, கொண்டல் — (பேரருளாளனென்னும்) மேகத்தின், அருள் குணமே — கருணையென்னும் குணத்தையே, நாம் கூறுகின்றோம்— நாம (இப்பிரபந்தத்தில்) பேசுகின்றோம், நீர் — நீங்கள், குறியாகக் கொண்மின்—(இதனை) கவனத்துடன் அறிந்துகொள்க

எம்பெருமானுடைய திருநாபிக்கமலத்தில் பிறந்து ஸகலலோகங்களையும் படைக்கவல்ல ப்ரஹ்மா எம்பெருமானைக் குறித்து ஸத்யவ்ரதக்ஷேத்திரத்தில் செய்த பெரிய அசுவமேதயாகத்தில் ஹவிஸ்ஸைப் பெறுவதற்காக அங்கு அவதரித்த பேரருளாளனுடைய பெருமையை ரஸிகர்களும் பாகவதர்களும் கூரிய அறிவுள்ளவர்களுமான நீங்கள் அனைவரும் கேட்டு மகிழவேண்டும் இதற்காக மனத்தில் கருத்தும், வாக்கில் ராகமும், கையில் தாளமுமாகப் பொருந்தவேண்டுமென வகுத்த பரதசாஸ்த்ரத்தைத் தழுவிய பண்ணும் இசையும் அமையுமாறு பேரருளாளன்பெருமையைப் பாடுகின்றோம் நீங்கள்அனைவரும் கருத்துடன் கேட்பீராக — என்றவாறு.

எட்டுத்திசைகளை 84-வது பாசுரவுரையிலும், ஏழுகடல்களை 120-வது பாசுரவுரையிலும் காண்க

ஏழுமலைகள்— மஹேந்த்ரம், மலயம், ஸஹ்யம், சுக்திமான், ருக்ஷம், விந்த்யம், பாரியாத்ரம் என்பன

பதினான்கு உலகங்கள்— அதல,விதல, ஸுதல, தராதல, மஹாதல, ரஸாதல, பாதாலங்கள் என்பன கீழுலகம் பூ, புவ, ஸுவ. மஹ, ஜந, தப, ஸத்யம் என்பன மேலுலகம். 2

[வேதாந்தங்கள் ஸகலலோகத்திற்கும் மிக்க நன்மையையே உபதேசிப்பனவாகும் அவற்றின் பொருளைப் புராணங்கள் தெளிவுபடுத்துகின்றன. அவற்றுள் ப்ரஹ்மாண்டபுராணம் மிக முக்கியமாதலின் முற்பட எண்ணப்பட்டதாகும் அதில் ஸத்யவ்ரதக்ஷேத்திரத்தின் மேன்மையை விளக்கும் வாயிலாகப் பேரருளாளன் பெருமை விவரித்துக்கூறப்பட்டுளது.]

210 செந்தொடை — வெண்டுறை

வம்மின் புலவீர் அருளாளப் பெருமா னென்று மருளாழி
யம்மா னென்றுந் திருமகளைப் பெற்றுமே னெஞ்சங் கோயில்கொண்ட
பேரரு ளாளரென் றும்பியப்பா விருதூ தும்படி கரைபுரண்ட
கருணைக் கடலை யிவ்வண்ணம் பேசுவீ ரீதென்ன பாங்கே. 3

உரை — புலவீர் – புலவர்களே! வம்மின் – வாருங்கள். ருளாளப் பெருமாள் என்றும் – அருளாளப் பெருமாள் என்றும், ருளாழியம்மான் என்றும் – அருளாழியம்மான் என்றும், திரு ளைப் பெற்றும் – பிராட்டியைத் தேவியாகக்கொண்டதுமன்றி, என் ஞ்சம்– என் மனத்தை, கோயில் கொண்ட – வாஸஸ்தலமாகக்கொண்ட, ாருளாளர் என்றும் – பேரருளாளர் என்றும், வியப்பா– ஆச்சரியமாய், ருது ஊதும்படி – விருதுகளைக் கூறிமுழங்கும்படி நின்ற, கரை புரண்ட ணைக் கடலை – கரை புரண்டுபெருகும் கருணைக் கடலான எம்பெரு னை, இவ்வண்ணம் – (நாம் பேசுகின்ற) இம்முறையிலேயே, பேசுவீர்— ங்களும்) பேசுவீர்களாக ஈது – (அங்ஙனன்றி அற்பவிஷயங்களைப் பேசு ிற) இத்தன்மை, என்ன பாங்கு – என்ன நேர்மை?

புலவர்களே! வாருங்கள். பேரருளாளனுடைய கருணையெனும் த்தைப் பற்றி ஆழ்வார் முதலிய பரமபாகவதர்கள் பல விருதுகளைக் ி முழங்குகின்றனர். அத்தகைய கருணைக்கடலான பேரருளாளன் பெரு மையை நாம் பேசுவதுபோல நீங்களும் பேசி உய்வீர்களாக இங்ஙனன்றி பமான விஷயங்களில் ஈடுபடுவது நேர்மையன்று—என்றவாறு.

'அருளாளப் பெருமாள்' 'அருளாழியம்மான்' 'பேரருளாளர்' ாபன கருணையெனும் குணத்தின் காரணமாக அத்திகிரியெம்பெருமா க்கு வந்த திருநாமங்கள். 3

கட்டளைக்கலித்துறை

1 ஒன்றே புகலென் றுணர்ந்தவர் காட்டத் திருவருளா
லன்றே யடைக்கலங் கொண்டநம் மத்தி கிரித்திருமா
லின்றே யிசையி னிணையடி சேர்ப்ப ரினிப்பிறவோ
நன்றே வருவ தெலாநமக் குப்பா மொன்றிலதே 4

இதன் உரையை 18-வது பாசுரத்தில் காண்க.

பேரருளாளன்திருவடிகளில் பரந்யாஸத்தைச் செய்து மோக்ஷத்தை ாபார்த்திருக்கும் நாம் இனிப் பலனைக் கருதி ஒன்றையும் செய்யவேண வாயினும், இங்கு இருக்கும் நாள் நற்பொழுது போக்கி மனமகிழப ாருளாளன் பெருமையைப் பேசுகின்றோம்—என்றவாறு 4

கட்டளைக்கலித்துறை

2 வம்பவிழ் போதமர் மாத ருகந்தவம் மாநிதியைத்
தன்பல மேகொண்டு காணக் கருதிய தாமரையோன்
முன்பல துற்றத்து வல்வினை மொய்க்க முகிழ்மதியா
யம்புலி வேண்டிய பாலனைப் போல வழுதனனே 5

உரை — வம்பு அவிழ் — வாஸனையுள்ள மலர்ந்த, போது அமர் — புஷ்பத்தில் வஸிக்கின்ற, மாதர் — பிராட்டியின், உகந்த — அன்புக்கு உரியனான, அம் மா நிதியை — பெரிய புதையல்போன்ற அவ்வெம்பெருமானை, தன் பலமே கொண்டு — தன்னுடைய யோகபலத்தையேகொண்டு, காணக் கருதிய தாமரையோன் — ஸாக்ஷாத்கரிக்க நினைத்த ப்ரஹ்மா, முன் பல குற்றத்து — முன்பு பல அபசாரங்களால் ஏற்பட்ட, வல் வினை மொய்க்க — வலிய கர்மங்கள் நெருக்க, முகிழ் மதியாய் — சுருங்கிய அறிவுடையனாய், அம்புலி வேண்டிய — (எட்ட முடியாத) சந்திரனைப் பிடிக்கத் தருமபடி விரும்பிய, பாலனைப்போல — குழந்தையைப்போல, அழுதனன்— (தன் எண்ணம் நிறைவேறாமையால்) அழுதான்.

ஸர்வேசுவரன், மஹான் அஹங்காரம் என்ற வரிசையில் ப்ரஹ்மாண்டம் வரையில் உள்ள வஸ்துக்களையும் பின் ப்ரஹ்மாவையும் படைத்து, ப்ரஹ்மாவாகிய சரீரத்தில் தானே அநுப்ரவேசித்து மற்ற ஸகலவஸ்துக்களையும் படைத்து, தன் வயிற்றுதித்த மகனாய்த் தனக்கு நேரே சிஷ்யனான ப்ரஹ்மாவைப் பதினான்கு உலகங்களுக்கும் தலைவனாக்கி யருளினன். இவ்வதிகாரம்பெற்ற ப்ரஹ்மா, தன்னுடைய உயர்பிறவியையும், ஒரேகாலத்தில் நான்குமுகங்களாலும் வேதங்களை ப்ரவசநம் செய்தலையும், ஸரஸ்வதிக்குக் கணவனாயிருத்தலையும், நான்கு வர்ணங்களையும் படைத்த பலவகைப்பட்ட ஸாமர்த்தியத்தையும் நினைந்து, தனக்கு நிகர் ஒருவரும் இல்லையெனக் கருதி, சுதந்திரச்செருக்குக் கொண்டான். இத்தகைய கர்வம்கொண்ட அவன், எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாய் நிற்கும் ஸர்வேசுவரனைத் தன் சக்தியால் யோகம் செய்து ஸாக்ஷாத்கரிக்கலாமென நினைத்து முயன்றான். அப்பொழுது எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்கு விரோதியாயுள்ள ஒரு ப்ரபலமான கர்மம் அவனை யோகத்தினின்று விலக்கிவிட்டது. பின் அவனது அறிவு மழுங்கி, வானத்திலுள்ள அம்புலியைப் பிடிக்க விரும்பி அது கூடாமையால் அழுதுநிற்கும் சிறுவனைப்போல அவன் புலம்பினன்.

நான்கு வருணம்— ப்ராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்பன.
5

கட்டளைக்கலித்துறை

213 அடங்காக் கரணங்க ளைந்துட னுற மடக்கிமுன
நெடுங்கால மீந்நில மேநிலை யாப்பூண்டு நீடுறைவான்
சடங்காற் பெரிய தவங்கள்செய் தேனென்ன தன்மையிதேன்
றிடங்காத் திருந்த திசைமுகன் றன்னை யிகழ்ந்தனனே. 6

உரை — இடம் காத்திருந்த – (தனனுடைய ப்ரஹ்ம)பதவியை (வழுவாது) ரக்ஷித்துககொணடிருநத, திசைமுகன் – ப்ரஹ்மா, நெடுங்காலம்–நீணடகாலம, இந்நிலமே – இநத ப்ரஹ்மலோகததையே, நிலையாப்பூண்டு – ஸதிரமாயிருப்பதாககொணடு, நீடு உறைவான் – நெடுநாள (அப்பதவியில்) வாழவிருமபி, முனம் – முனபே, அடங்காக் காணங்கள் – அடங்காத இநதரியஙகளாகிய, ஐந்துடன் ஆறும் அடக்கி– காமேநதரியஙகள ஐநதுடன் ஜ்ஞாநேநதரியஙகள ஆறையும அடககி, சடங்கால் பெரிய – வ்ரதஙகளால பெரிய, தவங்கள் செய்தேன் – தபஸஸுகளைச செய்தேன், இது என்ன தன்மை என்று – (நான் செய்த) இக்காரியம எததகையது? (எவ்வளவு இழிவானது?) எனறு, தன்னை இகழ்ந்தனன் – தனனையே வெறுததுககொணடான.

இப்படிக கலஙகின பரஹமா "எனனே !! எனனே !!! ஸாவாந்தாயாமியான ஸாவேசுவரனைபபறறி நான செயயும யோகம கூடிவராத காரணம் யாது?" எனறு ஆராய்நது, குரஙகுபோல சஞசலமான மனம தெளிவடையாதிருபபதே காரணமாமெனத துணிநது இநத மனக்கலககததிறகுக் காரணமான காமததைக கழிக்காமல இததனைநாளும் எனன காரியம செய்தேன ? இநதப் பதவியையே சாசுவதமெனக கருதி இந்த்ரியஙகளை அடககிப் பெரிய தவமபுரிநது வீணே சரீரததையும துனபுறுததிக கொணடேன எனறு நெஞசுருகிக கணணீா சொரிநது நெடுமூசசெறிந்து நிலத்தைப் பாாத்திருநது தனனையே வெறுததுககொணடான்–என்றவாறு.

எண்சீராசிரியவிருத்தம

214 விண்ணுலகில் வீற்றிருந்த மேன்மை யாலும்
வேதங்க ளீரிரண்டும் விரித்த லாலுங்
கண்ணனைநான் கருத்துறவே காண்ப னென்னக்
காணமல் விலக்கியதன் வினையைக் காணு
வெண்ணியநற் புவனங்க ளேழ மாறு
மிருமூன்று தீவமமேட் டிடமும் விட்டுப்
பண்ணியநல் விரதமெலாம் பலிக்க மென்று
பாரதத்திற் பங்கயத்தோன் படிந்திட் டானே. 7

உரை·— பங்கயத்தோன்– (பகவானுடைய நாபிக)கமலத்தில பிறநத ப்ரஹமா, விண்ணுலகில் – ப்ரஹமலோகத்தில, வீற்றிருந்த மேன்மையாலும்– பரஹமபதவி வஹித்த பெருமையாலும, வேதங்கள் ஈர் இரண்டும்– வேதஙகள் நானகையும், விரித்தலாலும்–(உலகுககு)வெளியிட்டமையாலும, கண்ணனை – எமபெருமானை, கருத்து உறவே – மனத்தில நிலைபெறறு

நிற்கும்படி, நான் காண்பன் என்ன — நான் நேரில ஸாக்ஷாத்கரிப்பேன் என்று நினைதது (யதநம செயது), காணுமல் விலக்கிய—அவ்வாறு ஸாக்ஷாத கரிககமுடியாமல தடைசெயத, தன் வினையைக் காணு — தன்னுடைய காமததைக் கணடு (அதைப் போகக நினைத்து), எண்ணிய நல் புவனங்கள் ஏழும் ஆறும் — (சாஸதரஙகளில) கூறபபடட சிறநத லோகஙகள பதின் மூனறையும, இரு மூன்று தீவமும் — ஆறு தீவுகளையும, எட்டு இடமும் விட்டு — எடடு வாஷஙகளையும விட்டு, பண்ணிய நல் விரதம் எலாம் — செயயப்படும சிறநத வரதஙகள எல்லாம, பலிக்கும் என்று — பலன் தருமென்று உறுதிகொணடு, பாரதத்தில் — பாரததேசததில, படிந்திட்டான் — வந்து தஙகினுன.

ஆயிரம் கோடி யுகஙகள் எமபெருமானை முன்பு ஆராதித்ததால தான் பெறற ப்ரஹ்மபதவியாகிய சேறறில அழுநதிநின்று அஃநதை கொண்டு செய்த யோகம வீணுகிப பகவானுடைய ஸாக்ஷாதகாரததைப பெருமல பச்சாததாபததையடைநத பரஹமா, எம்பெருமானுடைய கடாக்ஷத்தை முன்னிட்டு மோக்ஷத்திறகுக் காரணமான தவததைச் செய்வதறகு உரிய இடம எது என்று ஆராய்நதான பூமியொழிய மறற லோகஙகள் பதின்மூன்றும, பூமியிலும ஜமபூதவீபம தவிர மறற தவீபஙகள் ஆறும, அதிலும் பாரதவாஷம நீஙக மறற வாஷஙகள எட்டும காம பலன்களையே அநுபவிககுமிடமாதலின் மிகப புண்ணியகாமமான இந்தத் தவததைச செயய உரியனவலலவெனறு புறக்கணிதது, எல்லாவறறுக கும தெறகேயுள்ளதாய் ஸகலதாமங்களையும அநுஷடிக்க ஏறறதான பாரதவர்ஷததில் வநது புகுநதான்—எனறவாறு.

பதினுன்கு உலகங்கள்— 209-வது பாசுரவுரையிற் காணக.

ஏழு த்வீபங்கள்— ஜம்பூ, ப்லக்ஷம, சாலமலி, குசம, க்ரௌஞசம, சாகம், புஷகரம — என்பன.

ஒன்பது வர்ஷங்கள்— பாரதம், கிம்புருஷம், ஹரி, இலாவ்ருதம, ரமயம், ஹிரணயகம், குரு, பத்ராசுவம, கேதுமாலம்—என்பன. 7

அறுசீராசிரியவிருத்தம்

215 எத்திசை நிலனு மெய்தி யருந்தவஞ் செய்த வந்நாள்
சத்திய விரதஞ் செல்வா யென்றவோ நுரையின் சார்வா
லத்திசைச் சென்ற னைத்தங் கமாரில் லெடுப்பான் றன்னை
யுத்தர வேதி செய்யென் றுரையணங் கிறையு ரைத்தான்.

உரை.— உரை அணங்கு இறை—வாக்கின்தேவதை(யான ஸரஸ்வதி)க்கு நாயகனாகிய ப்ரஹ்மா, எத்திசை — எல்லாத்திக்கிலுமுள்ள, நிலனும் எய்தி — ஸ்தானங்களுக்கும் சென்று, அருந் தவம் செய்த அந்நாள் — (ஒருவராலும்) செய்யமுடியாத தவத்தைச் செய்த அக்காலத்தில், சத்தியவிரதம் — ஸத்யவ்ரதம் என்னும் க்ஷேத்திரத்திற்கு, செல்வாய் என்ற — போ என்ற, ஓர் உரையின் சார்வால் — ஓர (அசரீரி)வார்த்தையின் ஆதாரத்தால், அத்திசைச் சென்று — அந்தத் திசைக்குச் சென்று, அங்கு — அந்த க்ஷேத்திரத்தில், அமரர் இல் எடுப்பான்தன்னை அழைத்து — தேவர்களுக்குரிய வீடு (முதலியவற்றை) அமைப்பவ (னாகிய விசுவகர்ம)னை அழைத்து, உத்தர வேதி செய் — (யாகம் செய்வதற்கு) உத்தரவேதியைச் செய்து முடிப்பாயாக, என்று உரைத்தான் — என்று கட்டளையிட்டான்.

இப்படி ப்ரஹ்மா பாரததேசத்தில் வந்து புகுந்து தான் முக்கியமாக நினைத்திருந்த பற்பல புண்யக்ஷேத்திரத்தில் ஒரு காலால் நின்றுகொண்டும், கைகளை உயரத் தூக்கிக்கொண்டும், மூச்சை அடக்கிக்கொண்டும், வேறு ஒருவராலும் செய்யமுடியாத தபஸ்ஸைச் செய்தான். இப்படிச் செய்தும் தன் மனம் அந்தர்யாமியான எம்பெருமானைக் காண வல்லமையற்றிருப்பதைக் கண்டு மிக வருந்திக் கிடந்தான். அப்பொழுது ஆகாயத்தில் " ப்ரஹ்மாவே! நீ வெறுக்கவேண்டாம், பகவானைப்பற்றிய யோகத்திற்கு விரோதியாய் இதுகாறும் உன்னிடம் உள்ள காமங்கள் கழிகைக்கு ஓர் உபாயத்தை உபதேசிக்கின்றேன். அதிகாரமென்னும் ஆநந்தாநுபவத்தில் அழுந்திக் கிடக்கின்ற நீ ஆயிரம் அசுவமேதயாகங்களைச் செய்தாலன்றி உன் மனம் தெளிவடையாது. ஆனால் இந்த யாகங்களைச் செய்வது மிக்க கடினமென்றும் வெகுகாலம் ஆகுமேயென்றும் நினைந்து நீ அஞ்சினையேயாகில் அதற்கும் ஒரு வழியுளது. ஸத்யவ்ரதக்ஷேத்திரத்தில் செய்யப்படும் ஓர் அசுவமேதயாகம் ஆயிரம் அசுவமேதத்தின் பலனைத் தரும். இவ்வாறு அளவற்ற பெருமையையுடைய அந்த க்ஷேத்திரத்திற்குச் சென்று அதன் நடுவில் ஸர்வேசுவரன் நித்தியமாய் எழுந்தருளியுள்ள ஹஸ்திகிரியை யாகவேதிகையாக்கி அங்கு ஸகலயாகங்களிலும் முக்கியமாயுள்ள அசுவமேதயாகத்தாலே, ஸகலயாகங்களின் பாகத்தையும் திருவுள்ளம்பற்றுகின்ற ஸர்வேசுவரனை ஆராதிப்பாயாக " என்று ஓர் அசரீரிவாக்குப் பிறந்தது. இதைக் கேட்டு மிக மகிழ்ந்த ப்ரஹ்மா அப்பொழுதே ஸத்யவ்ரதக்ஷேத்ரம் சென்று தேவசிற்பியான விசுவகர்மாவை அழைத்து " நாம் ஸகலபாபங்களுக்கும் ப்ராயச்சித்தமாய் வேதங்களில் விதிக்கப்பட்டு ஸர்வேசுவரனைத் தேவதையாகக் கொண்டுள்ள அசுவமேதயாகத்தை இந்த க்ஷேத்திரத்தில் செய்யக் கருதியுள்ளோம். சிற்பவித்தையில் நிபுணனான நீ ஹஸ்திகிரியை நான்கு சதுரமாக வகுத்து அதையே யாகவேதியாக்கி யாகசாலையை

அமைப்பாயாக. மேலும நமமுடைய யாகததிற்கு வரும தேவா, அஸுரா, யக்ஷா, ராக்ஷஸா, கிநநரா, கிமபுருஷா, ஸித்தா, விதயாதரா, மநுஷயா முதலிய பல திறததினரும நெருக்கமின்றிச சுகமாய வஸிக்குமாறு நீண்டு அகனறு உயாநது மிகக அழகிய ஒரு ராஜதானியை விரைவில படைபபா யாக ” என்று மிக விரைநது கடடளையிடடான. 8

216 அறுசீாசசநதவிருத்தம

உத்தமவ மர்த்தலம மைத்ததொரே ழிற்றனுவி னுய்த்த கணையா
லத்திரவ ரக்கன்முடி பத்துமொரு கொத்தெனவு திர்த்த திறலோன்
மத்துறுமி குத்ததயிர் மொய்த்தவெணெய் வைத்ததுணு மத்த னிடமா
மத்திகிரி பத்தர்வினை தொத்தறவ றுக்குமணி யத்தி கிரியே 9

இதன உரையை 83-வது பாசுரததில காணக

இஙஙனம பரஹ்மா கடடளையிட, விசுவகாமன் ஸகலகுணஙகளா லும சிறநதுநிறகும ஹஸதிகிரியை யாகவேதிகையாகவும் இது ஸாவேசுவரன நிதயவாஸம செயதறகு உரிய இடமாகும எனறு நினைதது ஒரு நகரத்தையும படைததான். பரஹமா அநநகருககுக காஞசியெனப் பெய ரிடடான. 9

எணசீராசிரியவிருததம

217 திண்மணிகள் பொன்னுடனே சேர்த லாலுஞ்
சிதையாத நூல்வழியிற் சேர்த்தி யாலும்
வண்மையெழு மீரிரண்டு வருணத் தாலும்
வானவர்க்கும் வியப்பான வதுப்பி னாலு
மொண்மையுடை வாசிவிளி யோசை யாலு
மொருகாலு மழியாத வழகி னாலு
மண்மகளார்க் கலங்கார மென்ன மன்னு
மதிட்கச்சி நகர்கண்டு மகிழ்ந்திட் டானே. 10

உரை — திண் மணிகள் — திடமான ரதநஙகள, பொன்னுடனே — தஙகததோடு, சேர்தலாலும் — சோத்து இழைககபபெறறிருபபதாலும, சிதையாத நூல் வழியில்— அழியாத சிறபசாஸதரததின முறையில, சேர்த்தி யாலும்—அமைககபபடடிருப்பதாலும, வண்மை எழும்—கொடை நிறைநத, ஈர் இரண்டு வருணத்தாலும் — நானகு ஜாதியாரும நிறைநதிருப்பதாலும், வானவர்க்கும் வியப்பான — தேவாசடகும வியக்கததகக, வதுப்பினா லும்—அமைபபினாலும, ஒண்மையுடை—இயறகையழகமைநத, வாசி—குதிரை களின், விளி ஓசையாலும் — கனைககும குரல ஓசையினாலும, ஒருகாலும அழியாத அழகினாலும் — ஒருபோதும அழியாமல நிலைபெறற அழகினாலும,

மண்மகளார்க்கு — பூமிக்கு, அலங்காரம் என்ன — ஆபரணம் என்னும்படி, மன்னும் — பொருந்திய, மதிள் — மதிள்களையுடைய, கச்சி நகர் கண்டு — காஞ்சீபுரத்தைக் கண்டு, மகிழ்ந்திட்டான் — (ப்ரஹ்மா) மகிழ்ச்சியடைந்தான்.

இவ்வண்ணம் ப்ரஹ்மாவின் கட்டளைப்படி விசுவகர்மனால் படைக்கப்பட்ட காஞ்சீநகரம், சிற்பசாஸ்த்ரத்தை முற்றும் தழுவியமைந்து நின்றது. பல இடங்களில் உயர்ந்த ரத்னங்கள் பொன்னில் இழைக்கப்பட்டு ஒளி வீசின. ப்ராஹ்மணர், க்ஷத்ரியர், வைசியர், சூத்ரர் என்ற நான்கு வருணத்தோரும் இந்நகரில் தமது கடமையை வழுவாது செய்துவந்தனர். மிக்க அழகு வாய்ந்த உயர்தரக்குதிரைகள் கணக்கற்ற குதிரைலாயங்களில் நிரம்பியிருந்தது, எக்காலத்தும் அழியாத அழகினால் தேவர்களும் வியப்புறும்படி பூலோகத்திற்கே ஓர் அலங்காரமாக அமைந்த இவ்வழகிய நகரை ப்ரஹ்மா கண்டு மகிழ்ந்தான்—என்றவாறு. 10

எண்சீராசிரியவிருத்தம்

218 காமங்கள் பலகொண்ட வேதங் கொண்டு
கைதவமே செய்வார்க்குக் காண கில்லாப்
பூமங்கை கேள்வனைநான் கண்டு போற்றப்
புண்ணியத்தி னிகரில்லா விரதம் பூண்டேன்
சாமங்கள் கழிவதன்முன் சடக்கே னப்போய்த்
தன்னாற்றிற் றனியிருந்து தவஞ்செய் கின்ற
நாமங்கை வந்திடநீ யழைப்பா யென்று
நன்மகனை நான்முகன்ற னவின்றிட் டானே. 11

உரை — நான்முகன் — நான்கு முகங்களையுடைய ப்ரஹ்மா, நல் மகனை — (தன்னுடைய) நல்ல புத்திரனான வஸிஷ்டனை (அழைத்து), காமங்கள் பல கொண்ட — காம்யகர்மங்கள் பலவற்றை வெளியிடுகின்ற, வேதம் கொண்டு — வேதத்தைக் கொண்டு, கைதவமே செய்வார்க்கு — (பகவத்கைங்கர்யத்தைச் செய்யாது) கபடகார்யங்களையே செய்பவர்களுக்கு, காணகில்லா — ப்ரத்யக்ஷமாய்க்காணமுடியாத, பூமங்கை கேள்வனை — பூவில்வாழும் பிராட்டியின் நாதனான எம்பெருமானை, நான் கண்டு போற்ற — நான் நேரில் ஸேவித்து ஸ்தோத்ரம்செய்வதற்காக, புண்ணியத்தில் நிகர் இல்லா — புண்யங்களுக்குள் ஒப்பற்ற, விரதம் பூண்டேன் — (அச்வமேதயாகமாகிய) விரதத்தைத் தொடங்கியுள்ளேன், சாமங்கள் கழிவதன் முன் — யாமங்கள் கழிவதற்கு முன் (நேரம் தாழாது), சடக்கு எனப் போய் — விரைவாக (நீ) போய், தன் ஆற்றில் — தன் (பெயருள்ள

ஸரஸ்வதி) நதிக்கரையில், தனி இருந்து — தனியாக இருந்து, தவம் செய்கின்ற — தவம் செய்பவளான, நா மங்கை — வாக்கின் தேவதையான ஸரஸ்வதி, வந்திட — (இங்கு) வந்துசேரும்படி, நீ அழைப்பாய் என்று — நீ அழைத்துவருவாயாக என்று, நவின்றிட்டான் — கட்டளையிட்டான். தான் — அசை.

பின் அசுவமேதயாகத்தைச் செய்ய முயன்ற ப்ரஹ்மா, மரீசி முதலிய ப்ரஹ்மர்ஷிகளை ருத்விக்குகளாக்கிக்கொண்டான். அப்பொழுது அவன் மனைவியான ஸரஸ்வதி ப்ரணயகலஹத்தால் அவனைப் பிரிந்து ஸரஸ்வதீ நதிக்கரையில் தவம்புரிந்துகொண்டிருந்தாள். மனைவியில்லாமல் யாகம் செய்யக்கூடாதென்று சாஸ்த்ரம் கூறும். ஆதலின் ப்ரஹ்மா தன் புத்திரனான வஸிஷ்டனை அழைத்து “வேதத்தில் கூறப்படும் காம்ய கர்மங்களையே செய்பவர் எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்க முடியாது. ஆதலின் நான் வேறு பலனைக் கருதாது அசுவமேதயாகம் செய்து ஸர்வேசுவரனை ஸாக்ஷாத்கரிக்க விரும்புகின்றேன். நீ ஸரஸ்வதீநதிக்கு விரைவிற்சென்று அங்குத் தனியாயிருந்து தவம்புரியும் என் ப்ரிய மனைவியாகிய ஸரஸ்வதியை அழைத்து வா” என்று கட்டளையிட்டான் — என்றவாறு.

ப்ரணயகலஹத்தின் காரணம்— ஒருகாலத்தில் ப்ரஹ்மாவின் ஸபையில் தேவர்களும் முனிவர்களும் நிறைந்திருக்கும்போது லக்ஷ்மீ, ஸரஸ்வதீ ஆகிய இருவருள் சிறந்தவள் யார் என்று விவாதம் வந்தது. அப்பொழுது ப்ரஹ்மா எம்பெருமானுடைய திருமார்பில் வஸிக்கும் பெருமை வாய்ந்த லக்ஷ்மியே சிறந்தவளெனக் கூறினன். அதைக்கேட்டு மிக வருந்திய ஸரஸ்வதி தன் அம்சமாகப் பூமியில் பெருகுகின்ற ஸரஸ்வதீநதியையாவது நதிகளில் சிறந்ததாகக் கொள்ளவேண்டுமென்றாள். அதற்கு ப்ரஹ்மா எம்பெருமானது திருவடியினின்று அவதரித்த கங்காநதியைக்காட்டிலும் சிறந்த நதி இல்லையென்றான். இதைக்கேட்டுத் தன் கணவன்மீது கோபம் கொண்ட ஸரஸ்வதீதேவி ஸரஸ்வதீநதிக்கரையில் தவம்புரிந்தாள். 11

[இங்ஙனம் ப்ரஹ்மாவினால் கட்டளையிடப்பட்ட ஸ்ரீவஸிஷ்டபகவான் ஸரஸ்வதியிடம் சென்று நமஸ்காரம் அபிவாதனம் இவற்றைச் செய்து ப்ரஹ்மா யாகம்செய்வதையும் அவனுடைய கட்டளையையும் கூறி அழைத்தான். அவள் ப்ரணயகலஹம் (ஊடல்) நீங்காததால் வர மறுத்து விட்டாள். வஸிஷ்டன் இவ்விஷயத்தைத் தந்தையான ப்ரஹ்மாவிடம் தெரிவித்தான். ப்ரஹ்மா, ஸாவித்ரி முதலிய மற்ற மனைவியரை வைத்துக்கொண்டு யாகம்செய்யத் தொடங்கினன். யாகத்தில் தேவர்கள் மரியாதைசெய்யப்படுவதைக் கண்டு கோபங்கொண்ட அஸுரர்கள்

அந்த யாகத்தைக் கலைக்க நினைத்து ஸரஸ்வதிதேவியிடம் போய்க் கலகம் மூட்டினார். அவளும் மிகக் கோபங்கொண்டு ஸரஸ்வதிநதிக்குத் தென் திசையில் வேகவதியென்னும் வேறொரு பெரிய நதியாய்ப் பெருகி ப்ரஹ்மாவின் யாகசாலையை அழிக்க முற்பட்டாள்.]

219 பதின்மூன்றுசீராசிரியச்சந்தவிருத்தம்

அன்னவடி வாளசையு மன்னநடை யாளுயரு மன்னவர சேறி வருவா
ளத்தனய னத்தனய னுத்திதனை யத்திதென வுத்தி புரியா
ணன்னடைவி டாநடமி தென்னநட வாநடுவு நன்னுதவ டேறி யிழிவா
ணற்பதிக ளற்பதிகள் கற்புரள வற்புதம நற்க தியினாற்
கன்னடைவி டாவிடமி லுன்னதிசி றவிகட மன்னுகிரி கூட மிடியக்
கட்டவிடை யிற்றுவிழ முற்றும்விழி யுற்றடைய விட்ட நதற
வன்னநய சீரயனி தென்னெனவி ழாவமரர் மன்னுபதி யேறி மகிழ
வச்சுதன னைத்தனுவி லத்திசைவ ரத்தகைய வற்ற னுகினள்.

உரை — அன்னவடிவாள் — ஹம்ஸம்போன்ற அழகையுடைய வளும், அசையும் அன்ன நடையாள் — அசைகின்ற ஹம்ஸம்போன்ற நடையையுடையவளும், உயரும் அன்ன அரசு ஏறி வருவாள்—உயர்ந்த ராஜ ஹம்ஸத்தின்மீது ஏறிக்கொண்டுவருபவளுமான ஸரஸ்வதிதேவி,

அத்தன் அயன் — உயர்ந்தவனாகிய ப்ரஹ்மாவின், அத் தனயன் — அந்தப் புத்திரனை வஸிஷ்டனுடைய, உத்திதனை — வேண்டுகோளை, இது அத்து — இது அஸ்து (அப்படியேயாகுக), என உத்திபுரியாள் — என்று சொல்லாதவளாய்,

இது — இவ்வாறு ப்ரஹ்மா அழைத்தது, நல் நடை விடா — நல் லொழுக்கத்தினின்றும் வேறுபடாத(துபோல தோற்றுகின்ற) நடம் என்ன— நாடகம் என்று (நினைந்து), நடவா — நடந்து, நடுவு நன்னு தவடு — வழியிடையே எதிர்ப்படுகின்ற குன்றுமீது, ஏறி இழிவாள் — ஏறி இறங்குபவளாய்,

நல் பதிகள் — நல்ல (ஸமமான) இடங்களிலும், அல் பதிகள் — அப் படியல்லாத (மேடுபள்ளமான) இடங்களிலுமுள்ள, கல் புரள — கற்கள் புரளும்படி, அற்புத — ஆச்சர்யமான, மருற்கதியினால் — வாயுவேகத்தால்,

கல் நடை விடா — பாறைகள் அசைந்து உருளாத, இடம் இல் — இடமில்லாததும், உன்னதி சிற — உயரம் குறையாததும், விகடம் மன்னு — மேடுபள்ளம் பொருந்தியதுமான, கிரி கூடம் இடிய — மலையின் சிகரம் இடிந்துபோகவும்,

அவ் விடை — அங்கே, கட்டு — மலைப்பக்கம (தாழ்வரை), இற்று விழ — அடியற்று இடியவும், விழி மூற்றும் உற்று அடைய விட்டு — கண்களை நாலுதிசையும சென்று பொருந்துமபடி செலுத்தி, அந்த உற — (யாக வேதியின) ஸமீபத்திற்கு வர,

அன்ன — அபபடிப்பட்ட, நய சீர் அயன் — நன்மையையும் சிறப்பையுமுடைய ப்ரஹ்மதேவன், இது என் என — இது என்ன என்று (திகைத்துநிற்க), விழா அமரர்—(யாகமாகிய) உத்ஸவத்திற்குவந்த (மறைந்த) தேவர், மன்னு பதி ஏறி — ஸ்திரமான (தங்கள்) ஸ்தானத்திற்குச் சென்று, மகிழ — (தாம உயிர்பிழைத்து வந்ததற்கு) மகிழ்ந்துநிற்க,

அச்சுதன் — (பக்தர்களை) கைவிடாத எம்பெருமான், அணைந்தனு வில் — அணையுருவத்தில், அந்திசை தகைய வா — அங்கே தடுப்பதற்கு எழுந்தருள, அற்று — (வேகம) கெட்டு, அணுகினள் — நெருங்கினள்.

1 ஸரஸ்வதிதேவி, அன்னபபறவைபோன்ற அழகையும அதன் நடையையும உடையவள், அதையே வாஹநமாகவும உடையவள்

2 ப்ரஹ்மாவினால் அனுப்பப்பட்ட வஸிஷ்டன தன்னை யாகத்திற்கு வரும்படி வேண்டியும, 'அஙஙனமே யாகுக' என்று கூறாமல, இசைய மறுத்துவிட்டாள.

3 இஙஙனம தன்னை ப்ரஹ்மா அழைத்தது உளளன்பின்றி ஒரு கிரப்பந்தம் கருதி நடக்கும் வெளிவேஷமாகிய ஒரு நாடகமேயாம என்று நினைத்து மிக்க கோபத்துடன் யாகத்தைக் கெடுக்க நதியாயப பெருகி வருகின்றாள அப்போது நடுவில் எதிர்ப்படுகின்ற கற்குன்றுகளின்மீது ஏறியும் இறங்கியும வருகின்றாள.

4 வாயுவேகங்கொண்டு நதி வரும்போது ஸமமான இடங்களிலும மேடுபள்ளங்களிலும உள்ள கற்களெல்லாம் புரண்டோடுகின்றன

5 பெரும்பாறைகளும் அசைந்து உருளுகின்றன மிக்க உயரமாய் மேடுபள்ளமான மலைச்சிகரங்களெல்லாம இடிந்துவிழுகின்றன.

6 மலையின் அடிப்பாகங்களும் உடைந்து விழுகின்றன அவள் இவ்வாறு செய்துகொண்டு நாலுதிசைகளிலும கண்களைச் செலுத்தித் தான் கெடுக்கவேண்டிய யாகசாலையைத் தேடி யாகவேதியினருகே வந்தாள்.

7 யாகவேதியில் தீக்ஷை பெற்றுநிற்கும் ப்ரஹ்மாவும் இவ்வதிசயத்தைக் கண்டு திகைத்துநின்றான். யாகத்திற்கு வந்த மறைந்த தேவரும மிக்க அச்சங்கொண்டு தமது இருப்பிடம சென்று தாம் உயிர்பிழைத்து வந்ததற்கு மகிழ்ந்தனர்.

8 இத்தருணத்தில் பக்தரைக் கைவிடாத எம்பெருமான் ஓர் அணையுருககொண்டு எழுந்தருள அதனால் வேகங்கெட்டு யாகசாலையை நெருங்கினாள். 12

*நேரிசைவெண்பா*

220 அன்று நயந்த வயமேத மாவேள்வி
போன்ற வுரையணங்கு பூம்புனலாய்க்—கன்றிவா
வாதி யயனுக் கருள்செய் தணையானான்
றதை யரவணையான் றன். 13

உரை — அன்று – அப்பொழுது, நயந்த–(ப்ரஹ்மாவினால்)விரும்பிச் செய்யப்பட்ட, அயமேதம் – அசுவமேதமெனனும, மா வேள்வி – பெரிய யாகம, போன்ற – அழிந்துபோகுமபடி, உரை அணங்கு – வாக்கின தேவதையான ஸரஸ்வதி, பூம் புனலாய் – அழகிய நதியாக ஆகி, கன்றி வா – கோபித்துக்கொண்டு தோனற, தாதை – (உலகுககே) தநதையும, அரவு அணையான்–ஆதிசேஷனைபபள்ளியாகக்கொண்டவனுமான எமபெருமான், ஆதி அயனுக்கு அருள் செய்து – ஸ்ருஷ்டிகாரணனான ப்ரஹ்மாவினமீது கருணையை வைத்து, தான் – தானே, அணை ஆனான் – (குறுக்கே) அணையாகப பள்ளிகொணடான்.

இஙஙனம் ஸரஸ்வதி மிக்க கோபஙகொண்டு அசுவமேதயாகத்தைக் கெடுகக வேகவதிநதியாய்ப் பெருகிவர, ஸாவேசுவரன் ப்ரஹ்மாமீது கருணைகொண்டு அநத வெள்ளததின நடுவில பாம்பணையோடு தானும் ஓர் அணையாகி இடந்தான்—என்றவாறு. 13

இங்ஙனம் அணையாக எழுந்தருளியுள்ள எம்பெருமானை மூவுலகத் தோரும் ஸேவித்துத் தம் கண்ணும் மனமும் களித்து இவ்வண்ணம் பேசினர்—

*கட்டளைக்கலித்துறை*

221 தரணியின் மன்னி யயனார் தனித்தவங் காத்தபிரான்
கருணை யெனுங்கட லாடித் திருவணை கண்டதற்பின்
றிரணா கெண்ணிய சித்திர குத்தன் றெரித்துவைத்த
சுருணையி லேறிய சூழ்வினை முற்றுந் துறந்தனமே. 14

உரை — தரணியில் மன்னி – பூமியில ஸ்திரமாயிருநது, அயனார் – ப்ரஹ்மாவினுடைய, தனித் தவம் – ஒப்பற்ற தபஸ்ஸாகிய அசுவமேதத்தை, காத்த பிரான் – காப்பாற்றி மஹோபகாரமசெய்தருளிய எமபெருமானுடைய, கருணை எனும் கடல் ஆடி – க்ருபையென்னும கடலில நீராடி, திரு அணை கண்டதற்பின் – அழகிய (அநத)அணையை ஸேவித்தபிறகு, நாகுத்

திரள் – நரகங்களின் கூட்டத்தை, எண்ணிய – கணக்கிட்டுப்பார்ப்பவனை, சித்திரகுத்தன் – (யமனுடைய கணக்கனை) சித்ரகுப்தனால், தெரிந்து வைத்த – கணக்குப்பார்த்து எழுதிவைக்கப்பட்ட, சுருணையில் ஏறிய – கணக்கோலையில் குறித்துவைக்கப்பட்ட, சூழ் வினை முற்றும் – (நம்மைச்) சூழ்ந்துநிற்கின்ற பாபங்களை முழுதும், துறந்தனம் – நீங்கப்பெற்றோம்.

இப் பூவுலகில் ஸ்திரமாய் எழுந்தருளி ப்ரஹ்மாவின் அசுவமேத யாகத்தைக் காத்தருளிய ஸர்வேச்வரனுடைய கருணையாகிய கடலில் நாம் நீராடி அவ்வெம்பெருமானுடைய திருவணையைக்கண்ணாரக்காணப்பெற்றோம். ஆதலின், சித்ரகுப்தன் நரகானுபவத்தைக் கொடுப்பதற்காகக் கணக்கில் எழுதிவைத்திருந்த ஸகலபாபங்களும் இப்பொழுது நீங்கப்பெற்றோம்— என்றவாறு 14

[இப்படி வேகவதிநதியாய் வந்த ஸரஸ்வதிதேவியின் கோபவேகம் அடங்குமாறு திருவெஃகா என்னும் திவ்யதேசத்தில் பள்ளிகொண்ட எம்பெருமான் கடாக்ஷிக்க, அதனால் அவளும் மனக்கலக்கம் தெளிந்து வர, அவளையும் கூட்டிக்கொண்டு ப்ரஹ்மா அசுவமேதயாகத்தை நடத்தினான் முடிவில் பசுவின் வபையை அக்நியில் ஹோமஞ்செய்தான்]

கட்டளைக்கலித்துறை

222 சுகலேச மெண்ணிய சூழ்வினை தீர்க்கத் துணிந்தயனு
ரகலாத வன்புடன் கொண்ட வயமேத வேதியின்மேற்
புகலோங்கு பொன்மலை யன்னவோர் புண்ணிய கோடியுடன்
பகலோன் பகல்விளக் காகப் பரஞ்சுடர் தோன்றியதே. 15

உரை — அயனூர் – ப்ரஹ்மா, சுகலேசம் – அற்பமான (லோக) ஸுகத்தை, எண்ணிய – (பெரிதாக) எண்ணுவதற்குக் காரணமாயுள்ள, சூழ் வினை – சூழ்ந்துநிற்கும் (தம) பாபங்களை, தீர்க்கத் துணிந்து – ஒழிக்க உறுதிகொண்டு, அகலாத அன்புடன் – நீங்காத பக்தியுடன், கொண்ட – அநுஷ்டித்த, அயமேத வேதியின் மேல் – அசுவமேத யாகவேதியின்மீது, புகல் ஓங்கு – புகழ் நிறைந்துள்ள, பொன் மலை அன்ன – ஸ்வர்ண பர்வதம்போன்ற, ஓர் புண்ணிய கோடியுடன் – ஒப்பற்ற புண்யகோடி என்னும் விமானத்துடன், பகலோன் பகல் விளக்காக – ஸூர்யனும் பகலில்வைத்த விளக்கு என்னலாம்படி, பரஞ்சுடர் – உத்தமமான (பேரருளாளனாகிய) தேஜஸ், தோன்றியது – ஆவிர்ப்பவித்தது.

இங்ஙனம் பரஹ்மா அற்பமான லோகஸௌகத்தைப் பெரிதாகக் கருதும் தன் காமங்களை அழிவதற்காக எம்பெருமானிடம் அளவற்ற பக்தியுடன் அசுவமேதயாகத்தின் வேதியின்மேல் அக்நியில் பசுவின் வபையை ஹோமம் செய்தவுடன், சித்திரைமாதத்தில் சுக்லபக்ஷத்தில் சதுர்த்தசி திதியில், ஞாயிற்றுக்கிழமையுடன் கூடிய ஹஸ்தநக்ஷத்திரத்தில் காலைநேரத்தில், யாகவேதிகையின் நடுவிலிருந்து ஆயிரம் கோடி ஸூர்யர்கள் உதித்தாற்போன்று ஒரு மஹா தேஜஸ்ஸமூஹம் அதன் நடுவில் பொன்னாலாகிய மலைபோன்ற புண்யகோடி என்ற ஒரு விமானமும் தோன்றின. அந்த விமானத்தின் நடுவில் ஸூர்யனைப் பகல்விளக்கு என்னலாம்படி தேஜோமயனாய பேரருளாளன் காட்சிதந்தான். 15

இப்படிப் பேரருளாளன் திருவவதரித்தபடியைக் கண்டு நித்ய ஸூரிகள், காளம் வலம்புரி என்ற வாத்யங்களைத் தம் வாயினால் ஊதி அவன் பெருமையைப் பின்வருமாறு வெளியிட்டனர்—

எண்சீராசிரியவிருத்தம்

223 பெருமையுடை யத்திகிரிப் பெருமாள் வந்தார்
போகாத வருள்பொழியும் பெருமாள் வந்தா
ரருமறையி னுச்சிதனி னின்றார் வந்தா
ரங்கமுட னவையாகு மரியோர் வந்தார்
திருவுரையாய்த் தாம்பொருளாய் நிற்பார் வந்தார்
திருவருளாற் செழுங்கலைக டந்தார் வந்தார்
மருவலர்க்கு மயக்குரைக்கு மாயோர் வந்தார்
வானேற வழிதந்தார் வந்தார் தாமே. 16

உரை.— பெருமையுடை — (மிகப்) பெருமையுடையரான, அத்திகிரிப் பெருமாள் — ஹஸ்திகிரிநாதர், வந்தார் — எழுந்தருளினார்; போகாத அருள் பொழியும் — நீங்காத கருணையைப் பொழியும், பெருமாள் வந்தார்; அரு மறையின் உச்சிதனில்—அருமையான வேதத்தின் சிரத்தில் (வேதாந்தத்தில்), நின்றார் — போற்றப்பட்டுநின்றவர், வந்தார்; அங்கமுடன் — அங்கங்களுடன், அவையாகும் — அந்த வேதஸ்வரூபமான, அரியோர்—அருமையான ஸ்வாமி, வந்தார், திரு உரையாய் — பிராட்டி சப்தஸ்வரூபமாய்நிற்க, தாம் பொருளாய்—தாம் அர்த்த ஸ்வரூபமாய், நிற்பார் — நிற்பவர், வந்தார்; திரு அருளால் — (தம) சிறந்த க்ருபையினால், செழும் கலைகள்—உயர்ந்த சாஸ்த்ரங்களை, தந்தார் — (உலகுக்குத்) தந்தவர், வந்தார்; மருவலர்க்கு — (தம்மிடம்) அன்பற்ற நாஸ்திகருக்கு, மயக்கு உரைக்கும் — மோஹநசாஸ்த்ரங்களை வெளியிடுகின்ற, மாயோர் — வஞ்சகர், வந்தார்; வான் ஏற — பரமபதத்திற்குச் செல்ல, வழி தந்தார் — உபாயத்தை உபதேசித்தவர், வந்தார். தாம் — அசை. 16

எண்சீராசிரியவிருத்தம்

224 அத்திகிரி யருளாளப் பெருமாள் வந்தா
ரானைபரி தேரின்மே லழகர் வந்தார்
கச்சிதனிற் கண்கொடுக்கும் பெருமாள் வந்தார்
கருதவரந் தருதெய்வப் பெருமாள் வந்தார்
முத்திமழை பொழியுமுகில் வண்ணர் வந்தார்
மூலமென வோலமிட வல்லார் வந்தார்
உத்தரவே திக்குள்ளே யுதித்தார் வந்தா
ரும்பர்தொழுங் கழலுடையார் வந்தார் தாமே. 17

உரை — அத்திகிரி — ஹஸ்திகிரியிலெழுந்தருளிய, அருளாளப் பெருமாள் — பேரருளாளரென்னும் பெருமான், வந்தார்; ஆனை பரி தேரின் மேல் — யானை குதிரை தேர் ஆகிய வாஹனங்கள் மீது (எழுந்தருளும்), அழகர் வந்தார், கச்சிதனில் — காஞ்சீபுரத்தில், கண் கொடுக்கும் — (ஜ்ஞாநக) கண்ணைக் கொடுக்கும், பெருமாள் வந்தார், கருத வரம் தரு — மனஸ்ஸினால் அநுஸந்தித்தால் வேண்டிய வரத்தைக் கொடுக்கும், தெய்வப் பெருமாள் — தேவசஸ்ரேஷ்டர், வந்தார், முத்தி மழை பொழியும் — மோக்ஷமாகிய மழையைப் பொழிகின்றவரும், முகில் வண்ணர் — மேகம்போன்ற நிறமுடையவருமான எம்பெருமான், வந்தார், மூலம் என ஓலம் இட — (முதலையால் பிடிக்கப்பட்ட கஜேந்திரன்) ஆதிமூலமே என்று கூக்குரலிட, வல்லார் — (அந்த யானையைக் காக்கச்) சக்தியுடையவர், வந்தார்; உத்தரவேதிக்குள்ளே — (ப்ரஹ்மா ஏற்படுத்திய) உத்தரவேதிக்குள்ளே, உதித்தார் — ஆவிர்ப்பவித்தவர், வந்தார், உம்பர் தொழும் — நித்யஸூரிகளால் தொழப்படுகின்ற, கழலுடையார்—திருவடிகளையுடைய எம்பெருமான், வந்தார். தாம் — அசை. 17

'கண்கொடுக்கும்' என்னும் தொடர் குருடரான ஹரிதவாரணப்ருத்யர் என்பவருக்குப் பேரருளாளன் கண்ணைக் கொடுத்தருளிய வரலாற்றினைக் குறிப்பதாகவுங் கொள்ளலாம் கூரத்தாழ்வானுடைய ஸுந்தர பாஹுஸ்தவத்தில் 126-வது சுலோகத்திற் காண்க.

[ இப்படித் திருவவதரித்தருளின பேரருளாளனுடைய பெரிய தேஜஸ்ஸில் மதிமயங்கி ஓடிய ப்ரஹ்மாவும் தேவர்களும் முனிவர்களும் மிக்க சிரமத்துடன் ஊன்றி நோக்கியபின் அந்தப் பெரிய தேஜஸ்ஸுக்குள் புண்யகோடிவிமானத்தையும், அதன் நடுவில் பேரருளாளன் யாகத்தின் ஹவிர்ப்பாகத்தை உட்கொண்டதால் அதன் நறுமணம் வீசும் திருப்பவளச் செவ்வாயுடன் ஒளியைப் பொழியும் ஒரு காளமேகம்போல் நின்றருளிய படியையும் கண்டு மகிழ்ச்சி ஆச்சர்யம் இவற்றால் பரவசமாயினர் ].

இவ்வாறு பரவசரான அவர்கள் இங்ஙனம் போற்றினார்கள்—

225 பன்னிருசீராசிரியச்சந்தவிருத்தம்

இருபரிதி யேய்ந்த மகுடமு மெழின்மதிதி கழ்ந்த வதனமு
மிருவகையி லங்கு குழைகளி லெதிர்பொரவு கந்த மகரமு
மொருதகவு யர்ந்த திருமக ளொளிமறுவின் மன்னு மகலமு
முருவருவு மிழ்ந்த வுதரமு முலகடைய நின்ற கழல்களு
மருவினிடை யோங்கு புனலென மலைதுனிய நின்ற மலையென
மருளறவி ளங்கு மொளியென மலரயனு கந்த பயனென
வருவிலுறை கின்ற வுயிரென வடியவரு கந்த வமுதென
வருமறைக ளொன்றி யடிதொழ வருள்வரதர் நின்ற பெருமையே

உரை — இரு பரிதி — (கிரணங்களால்) பெரிய ஸூர்யனை, ஏய்ந்த மகுடமும் — ஒத்த கிரீடமும், எழில் மதி — பரகாசிக்கும் சந்திரன் போல, திகழ்ந்த வதனமும் — விளங்குகின்ற திருமுகமண்டலமும், இருவகை இலங்கு குழைகளில் — இரண்டுவகையாக பரகாசிக்கின்ற குண்டலங்களில், எதிர் பொர — எதிரேநின்று சண்டையிடுவதற்கு, உகந்த மகரமும் —விரும்பிய (னபோன்ற) மீனகளும், ஒரு தகவு — ஒப்பற்ற கருணையில், உயர்ந்த திருமகள்— உயர்ந்துநிற்கும் பிராட்டி, ஒளி மறுவின்—பரகாசிக்கின்ற(ஸ்ரீவத்ஸமென்னும்)மறுவோடு, மன்னும் அகலமும்—நித்யவாஸம் செய்யும் திருமார்பும், உரு அரு — அசேதநத்தையும் சேதநத்தையும், உமிழ்ந்த உதரமும் — ஸ்ருஷ்டித்த திருவயிறும், உலகு அடைய — உலகத்திலுள்ளவா வந்துசரணமடையும்படி, நின்ற கழல்களும்—நிற்கின்ற திருவடிகளும் ஆகிய இவற்றுடன், அரு மறைகள்— அருமையான வேதங்கள், ஒன்றி அடி தொழ— ஒரேமுகமாய்நின்று திருவடிகளைத் தொழு(து பேசு)மபடி, அருள் வரதர் நின்ற பெருமை — அருளை வடிவெடுத்த பேரருளாளர் நின்ற பெருமை (எவ்வாறு இருந்ததென்னில்), மருவின் இடை — பாலைவனத்தின் நடுவில், ஓங்கு புனல் என — எழும்பிய ஜலம் என்னும்படியாகவும், மலை துனிய — (அத்திகிரியென்னும்) மலை விளையும்படி, நின்ற மலை என — நின்ற மலை என்னும்படியாகவும், மருள் அற — அஜ்ஞானம நீங்கும்படி, விளங்கும் ஒளி என— பரகாசிக்கின்ற தேஜஸ் என்னும்படியாகவும், மலர் அயன்— (பகவானுடைய நாபிக) கமலத்தில் உதித்த பரஹ்மா, உகந்த பயன் என — விரும்பிய பலன் என்னும்படியாகவும், அருவில் உறைகின்ற — சேதநபொருள்களுக்குள் வஸிக்கின்ற, உயிர் என — உயிர் என்னும்படியாகவும், அடியவர் உகந்த—பாகவதர்கள் விரும்புகின்ற, அமுது என — அமருதம் என்னும்படியாகவும்(இருந்தது).

பேரருளாளன், தன் கிரீடம் ஸூர்யனைப்போல் ஒளியை வீசவும், திருமுகமண்டலம் சந்த்ரபிம்பத்தைப்போல் குளிர்ந்து நிற்கவும், திருக்காதுகளில் அணிந்த இரண்டு குண்டலங்களிலும் அமைந்துள்ள மீனுருவங்கள் இரண்டும் போரிட முயல்பவன்போல் ஒன்றுக்கொன்று எதிர்முகமாய் நிற்கவும், தன் திருமார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவும் பெரிய பிராட்டியும் நித்யவாஸம் செய்து விளங்கவும், சேதநாசேதநங்களை ப்ரளயகாலத்தில் வைத்துக் காத்துப் பின் படைக்கும் திருவயிற்றுடனும் உலகிலுள்ளோர் யாவரும் வந்து சரணமடையுமாறு நிற்கின்ற திருவடிகளுடனும், வேதங்களெல்லாம் அந்தத் திருவடிகளைத் தொழுது பேசுமாறு நின்ற பெருமையை ஆய்ந்து பார்க்கின், அவ்வெம்பெருமானை ஸம்ஸாரமாகிய பாலைவனத்தில் தோன்றிய தெய்விகமான ஒரு நீர்நிலையென்றும், ஹஸ்திகிரியென்னும் மலையும் வளர்ந்துபோகும்படி அதன்மீது அமர்ந்து நிற்கின்ற ஒரு மலையென்றும், உலகத்துள்ள அஜ்ஞானம் நீங்குமாறு விளங்கும் ஒரு தேஜஸ் என்றும், ப்ரஹ்மா அடைய விரும்பிய பெரும்பயன் என்றும், ஸகல வஸ்துக்களிலும் நிற்கின்ற அந்தர்யாமியென்றும், பாகவதர்களால் விரும்பப்படும் திவ்யாம்ருதமென்றும் கூறலாகும்—என்றவாறு.

[இவ்வாறு ப்ரஹ்மாவும் மற்றைத் தேவர்களும் மஹர்ஷிகளும் ஆச்சர்யத்தாலும் பக்திப்பெருக்கினாலும் ஏவப்பட்டு வணங்குவதும் எழுவதுமாயிருந்து 'பேரருளாளனுக்கு அடியராகப் பெற்றோமே' என்று தம் பாக்கியத்தை நினைந்து நினைந்து மகிழ்ந்துநின்றார்கள்.]

வேதாந்தார்த்தங்களை வெளியிடுகின்ற ப்ரஹ்மஸூத்ரங்களின் பதினாறு பாதங்களில் புகழப்படுகின்ற குணங்களைப்புகழ்ந்து அவர்கள் பேசுகின்றனர்—

226 இருபத்தெண்சீராசிரியச்சந்தவிருத்தம்

* சித்த சித்தெனவி ரித்து ரைத்தனவ னைத்த மைத்துறையு மிறைவனார்
சிறிய பெரியவுரு வுடைய வுடலமென நடல மிலதிலது நிலையினார்
சித்தி ரத்தெழிலை யொத்த பத்தரொடு முத்தர் பித்தியெனு முணர்வினார் [னார்
சிதைவின் மறைநெறியி லெறிய வருமுறைகள் முறிய சிறையரிய நிறைவி

* [illegible] ॥

— அதிகரணஸாராவளி

சுத்து விக்கவல கத்து வித்தைவழி கற்ற வர்க்கசைவின் மாயனார்
கபிலர் கணசரனை சுகதர் சமணாரர் வழிக ளழியுமரு ளமொழியினார்
கத்தி லக்கிலும நுக்த லந்திலும சித்தி லோக்குமோர முதல்வனார்
கரண யிடுகடிய பதினெ ரிருடிகழ மடைய முடியுமடி யிருடியா
ரோத்த னைந்துலகு மோற்றி யோற்றிவரு மிப்ப வத்திரையி னிசைவினு
நுருவ மருவமெனு முலகின் முடுகிலதி லுவமை யிலநிலது தலைவனு
நுத்த மப்படிவ துத்த வித்தைகளி லுத்த ரிக்கவுணர் துணைவனு
நுரிய கிரிசைகளி லரிய தொருவிரத நெரிய விரையுமவர் பரிவினார்
சத்த சந்தெனும னைத்த ணைத்தவினை தொத்த றுக்கவல துணிவினார்
சரியு மளவிலுரி யவரை யறிவரிய தமனி நெறிசேருது விரகினார்
தந்து வத்திரனு நைந்து நைத்தடைவு தத்து விக்குமவர் தலைவனார்
தருனை யுனருமவர் சரண மணுகவிட லரிய வருள்வாத ரடியமே 19

உரை — [முதல் அத்யாயத்தின் ஸாரார்த்தம் கூறப்படுகின்றது—] சித்து அசித்து என— சேதநம் அசேதநம் என்று, விரிந்து உரைத்தன — (சாஸ்த்ரங்களில்) விளக்கிக் கூறப்பட்ட, அனைத்தும் அமைத்து — ஸகலவஸ்துக்களையும் படைத்து, உறையும் இறைவனார் — (அவற்றுள் அந்தர்யாமியாய்) வசிக்கின்ற தலைவராயிருப்பவரும்,

*அனைத்தும் + அமைத்து = அனைத்தமைத்து, தொகுத்தல்*

*இதனால், உலகத்தைப் படைக்கும் தன்மையாகிய முதற்பாதத்தின் ஸாரார்த்தம் கூறப்பட்டது*

சிறிய பெரிய — ஸூக்ஷ்மமும் ஸ்தூலமுமான, உரு அடைய — உருவமுள்ள (சேதநம் அசேதநமெனனும்) வஸ்துக்கள் முழுதும், உடலம் என — (தமக்குச்) சரீரமெனனும்படி நின்று, நடலம் இலது — (அவற்றிலுள்ள) தோஷம் தட்டாது, இலகும் நிலையினார் — பரகாசிக்கும் ஸ்வபாவமுடையவரும்,

*‘இலகிலகும’ எனனும் தொடரில இலாது என்பது குறுகி ‘இலது’ என்று நின்றது அன்றி, இலதாக இல்லாததாக என்றும் பொருள் கூறலாம்.*

*இதனால் ஸகலவஸ்துக்களையும் சரீரமாகக் கொண்ட தன்மையாகிய இரண்டாவது பாதத்தின் ஸாரார்த்தம் கூறப்பட்டது*

எழில் சித்திரத்தை ஒத்த — *அழகிய சித்திரத்தைப்போன்ற,* பத்தரோடு முத்தர் — *பத்தருக்கும் முக்தருக்கும் (நித்யஸூரிகளுக்கும்),* சித்தி எனும் — *ஆதாரமான சுவர் என்று கூறப்படுகின்ற,* உணர்வினார் — *ஸங்கல்பத்தையுடையவரும்,*

சித்திரத்தைச் சுவர் தாங்குவதுபோல் தன் ஸங்கல்பத்தால் ஸர்வேச்வரன் உலகத்தைத் தாங்குகின்றான் என்று பொருள்.

இதனால் வேறொன்றையும் தமக்கு ஆதாரமாகக் கொள்ளாமையாகிய மூன்றாவது பாதத்தின் ஸாரார்த்தம் வெளியிடப்பட்டது.

சிதைவு இல் — அழிவு இல்லாத, மறை நெறியில் — வேதமார்க்கத்தில், ஏறி — ஓதப்பட்ட, அது ஊரு புரைகள் — அந்த அசேதநத்தின் ப்ரகாரங்கள், மறிய — தொலைந்துபோக, சிறை அறிய நிறைவிருந் — வரம்பு இல்லாத பெருமையையுடையவரும்,

பிறமதத்தினர் அசேதநமே உலகத்துக்குக் காரணமென்று வேதவிருத்தமாய் வழக்கிட, வித்வான்கள் பல ந்யாயங்களின் உதவியால் வேதாந்த வாக்யங்களை ஆராய்ந்து, அசேதநம் ஜகத்காரணம் ஆகாதென்றும், எல்லையற்ற பெருமையையுடைய பகவானே ஜகத்காரணம் என்றும் ஸ்தாபித்தனர்.

இதனால் எல்லையற்ற பெருமையுடைமையாகிய நான்காவது பாதத்தின் ஸாரார்த்தம் வெளியிடப்பட்டது.

[இனி இரண்டாம் அத்யாயத்தின் ஸாரார்த்தம் கூறப்படுகின்றது—]

கத்துவிக்க வல்ல— (எடுத்த இடமெல்லாம் ஹேதுவை) ஆரவாரத்தோடு கலபிக்கும்படி செய்யவல்ல, கத்துவித்தை வழி — ஜல்பமென்னும் வித்யாமார்க்கத்தை, கற்றவர்க்கு — பரிசயம் செய்தவரால், அசைவு இல் — அசைக்க முடியாத, மாயனார் — விசித்திரமான சக்தியையுடையவரும்,

பராஹ்மத்தை ஜகத்துக்குக் காரணமாகக் கொள்வதில் பிறமதத்தினர் ஜல்பத்தைக் கொண்டு வெளியிட்ட பல தோஷங்களை பராஹ்மம் விசித்திரமான சக்தியைக் கொண்டிருப்பதைக் கொண்டு போக்கியபடியால் பராஹ்மம் ஜகத்காரணமென்பது அசைக்க முடியாததாயிற்று.

இதனால் ஜகத்காரணத்வத்தில் பிறமதத்தினர் ஸ்ம்ருதிகளுடனும் யுக்திகளுடனும் கல்பித்த விரோதங்கள் நீங்கிய தன்மையாகிய முதற் பாதத்தின் ஸாரார்த்தம் வெளியிடப்பட்டது.

கபிலர் — கபிலரும், கணசாரர் — கணாதரும், சுகதர் — புத்தரும், சமணர் — ஜைநரும், அரர்—பாசுபதரும் (சைவரும்) ஆகிய இவர்களுடைய, வழிகள் அழியும் — மதங்கள் தொலைவதற்குக் காரணமான, அருள் மொழியினார் — (ஆசார்யரிடம்) அருளாலே (வந்த ஸ்ரீபாஞ்சராத்ரம் என்னும்) ஸ்ரீஸூக்தியை வெளியிட்டவரும்,

உத்தமப் படி — உயர்ந்த ப்ரகாரங்களில், வகுத்த வித்தைகளில் — (பலவகையாயப்) பிரிக்கப்பட்ட பக்தியோகங்களில், உத்தரிக்க வுளர் துணைவர் — (வேறு உபநிஷத்துக்களிலிருந்து) எடுத்துக்கொள்ளத்தகுந்த பட்ட குணங்களையுடையவரும்,

மோக்ஷத்திற்கு ஸாதநமான பக்தியோகம—ஸத்வித்யை, சாண்டில்யவித்யை, பரவித்யை முதலிய பல வித்யைகளாகப் பிரிகின்றது. ஓர் உபநிஷத்தில் கூறப்பட்ட வித்யையை அநுஷ்டிக்கும்போது வேறு உபநிஷத்திலும் கூறப்பட்டுள்ள அதே வித்யையைச் சேர்ந்த குணங்களையும் எடுத்துக்கொண்டு அவற்றுடன் கூடியதாகவும் ப்ரஹ்மத்தை உபாஸிக்க வேண்டும்

இப்படிப் பலவகைப்பட்ட பக்தியோகத்தால் உபாஸிக்கப்படும் தன்மையாகிய மூன்றாவது பாதத்தின் ஸாரார்த்தம் இதனால் வெளியிடப்பட்டது

உரிய கிரிசைகளில் —(பக்தியோகத்திற்கு அங்கமாயத் தங்களுக்குத்) தக்கனவான காமங்களில், அரியது ஒரு விரது — எளிதில்செய்யமுடியாத ஓர் உபாயத்தை, தெரிய விழையுமவர் — அறிய விரைபவரிடம், பரிவினர்— அன்பு (டன் தலைக்கட்டி) வைப்பவரும்,

பக்தியோகத்திற்கு அங்கமான நித்தியநைமித்திககாமங்களாகிய வர்ணாச்ரமதர்மங்களைச், செய்வதற்கு அரிதான ஸாத்துவிகத்யாகத்துடன் செய்ய முற்படுவோருக்கு அந்தப் பக்தியோகத்தை எம்பெருமான் தலைக்கட்டிவைக்கின்றான்

ஸாத்துவிகத்யாகம் —செய்யும் காமமும், அதன் பலனும், செய்யும் தன்மையும் தன்னுடையனவென்று நினையாமல் அவற்றை எம்பெருமானிடமே ஸமர்ப்பித்தல்.

இதனால் சேதநர் செய்யும் உரிய காமங்களால் மகிழ்ந்து அருள் புரியுந்தன்மையாகிய நான்காம் பாதத்தின் ஸாரார்த்தம் கூறப்பட்டது.

[இனி நான்காம் அத்யாயத்தின் ஸாரார்த்தம் கூறப்படுகின்றது—]

சத்து அசத்து எனும்—புண்யம் பாபம் எனப்படுகின்ற, அணைந்த — (உபாஸிக்கும் ஜீவனைச்) சேர்ந்துள்ள, அனைத்துவினை — ஸகலகாமங்களும், தோத்து — தொடாதலை, அறுக்க வ (ல்) ல — ஒழிக்கவல்ல, துணிவினர்— உறுதியையுடையவரும்,

இதனால் உபாஸிப்பவர்களுடைய காமங்களை ஒழிக்கும் தன்மையாகிய முதற்பாதத்தின் ஸாரார்த்தம் வெளியிடப்பட்டது

சரியுமளவில் — சரீரத்தை விடுங்காலத்து, உரியவரை — (பரமபதம் செல்லத்) தக்க ஜீவாக்களை, அறிவு அரிய— அறிவதற்கு முடியாத, தமனி நெறி — ப்ரஹ்மநாடி வழியில், சேர்ந்து விரகினர் — ப்ரவேசிக்கச்செய்யும் வல்லமையுடையவரும்,

இதனால் மோக்ஷத்திற்குச் செல்லத்தக்கவரை ப்ரஹ்மநாடி வழியில் புகச்செய்தலாகிய இரண்டாவது பாதத்தின் ஸாராரத்தம் கூறப்பட்டது.

தத்துவத் திரள்— (பரசுருவிமயச சோரந ஸகல அரசேதந) தத்துவங்களின் கூட்டத்தை, உதைந்து உதைந்து — (காலால்) உதைத்து உதைத்து தள்ளி), அடைவு — வரிசையாக, தத்துவிக்குமவர் — (சேதநரை ஸம்ஸாரத்தை விட்டுத்) தாண்டுவிப்பவ (ராண ஆதிவாஹிக) ருக்கு, தலைவனர்— ஸ்வாமியாயிருப்பவரும்,

இதனால் ஆதிவாஹிகரைக் கொண்டு சேதநரை ஸம்ஸாரமண்டலத்தைத் தாண்டுவித்துப் பரமபதம் சேர்த்தலாகிய மூன்றும் பாதத்தின் ஸாராரத்தம் கூறப்பட்டது

தருகை — (எம்பெருமான் பலன்) கொடுப்பதை, உன்னுமவர் — (நினைந்து உபாஸநம் செய்)யும் ஜீவா, சரணம் அணுக — (தம) திருவடிகளை (அணுகுகின்றன), விடல் அரிய — (அவரை) விடாதவருமான, அருள்வரதர் — கருணையே வடிவெடுத்த பேரருளாளருக்கு, அடியம் — (நாம்) தாஸர்களாயிருக்கின்றோம்.

இதனால், திரும்புகையில்லாது தம அநுபவத்தைத் தந்து தம்மைப் பாலாக்குகையாகிய நான்காம்பாதத்தின் ஸாராரத்தம் கூறப்பட்டது. 19

ப்ரஹ்மா அப்போழுது பரபரப்பு, மகிழ்ச்சி, பயம் ஆகிய இவற்றையுடையனாய்க்கிட்டிச் சென்று நித்யஸூரிகள் அநுபவித்தற்குரிய எம்பெருமான் திருமேனியை அநுபவித்துத் தான் பெற்ற பலனை இவ்வாறு பேசுகிறான்—

எண்சீராசிரியவிருத்தம்

227 திருமகள் மண்மகள் நீளை முதலா வெல்லாத்
தேவியருந் தன்னுடனே திகழ்ந்து நிற்கத்
தருமமிரு மூன்றுமுத லனைத்துந் தோன்றத்
தன்னனைய சூரியர்தன் னடிக்கீழ் வாழ
வருமறைசே ரளவில்லா வவனி யீன்க
ணாவணைமேல் வீற்றிருப்பா லனைத்துங் காக்குங்
கருமணியைக் கரிகிரிமேற் கண்டே னென்றன்
கடுவினைக ளனைத்துந்நான் கண்டி லேனே 20

ஸ்ரீ:

# ஸ்ரீ-வைஷ்ணவ தினசரி - உரை

ஸ்ரீமத் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் ... தேசிகம் ||

சீரொன்று ... வாழ்வு

---

[ விஷயச் சுருக்கம் ]

ஸ்ரீவைஷ்ணவன் தினந்தோறும் செய்யவேண்டிய கார்யங்களை விளக்குவதால் இப்ப்ரபந்தத்திற்கு இப்பெயர் வந்தது. ஒருநாளை ஐந்து கூறாக்கி ஐந்து காலங்களிலும் ஐந்து கார்யங்களை ஸ்ரீவைஷ்ணவன் செய்ய வேண்டுமென்பது சாஸ்த்ரவழக்கு. அவையாவன —

(1) **அபிகமநம்** — அன்று முழுதும் நடக்கவேண்டிய கைங்கர்யங்கள் தடையின்றி நடந்தேறவேண்டுமென்று எம்பெருமானிடம் ப்ரார்த்தித்து ப்ரபத்திசெய்தல்.

(2) **உபாதாநம்**—பகவானுடைய ஆராதநத்திற்கு வேண்டிய திருத்துழாய் புஷ்பம் முதலிய ஸாதநங்களை சேகரித்தலும், பகவதாராதநத்திற்கு மனது முதலிய ஸாதநமாகையால் அது சுத்தமடைவதற்காக ஆழ்வார்களும் ஆசார்யர்களும் அருளிய ஸ்ரீஸூக்திகளின் காலக்ஷேபத்தில் ஈடுபடுதலும்.

(3) **இஜ்யை** — பஞ்சராத்ரசாஸ்த்ரத்திலும் ஆஹ்நிகங்களிலும் சொல்லிய முறைப்படி பகவானுக்குத் திருவாராதநம்செய்தல்.

(4) **ஸ்வாத்யாயம்**-வேதாந்தபாகங்களைப் படித்துப் பரிசயஞ்செய்தல்.

(5) **யோகம்** — பகவானுடைய திருவடிகளை த்யாநம்செய்தலும், தன்னுடைய நித்ராகாலத்திலும் எம்பெருமான் திருவடிகளில் தன் தலையை வைத்திருப்பதாய் த்யாநம்செய்து சயனித்தலும்.

இவ்வாறு ஐந்து காலகார்யங்களையும், பேரருளாளன் விஷயமாக்கி முறைப்படி இரண்டிரண்டு பாசுரங்களால் வெளியிடுகிறார் ஸ்ரீதேசிகன்.

இப்ப்ரபந்தம் பேரருளாளனையே விஷயமாகக்கொண்டு அவதரித்த போதிலும் இதிற் சொல்லப்படும் கைங்கர்யங்களையெல்லாம் மற்ற எம்பெருமான் விஷயத்திலும் அந்வயித்துக்கொள்க.

இப்பிரபந்தம் முழுதும் கலிவிருத்தத்தால் அமைந்ததாம்

2-பாசுரங்களால் அபிகமநம் கூறப்படுகின்றது—

259 வரியிரு ளழிவழி மனம்வரு முணர்வொடு
கரிகிரி மருவிய கரியவ னடியிணை
பரிவொடு பரவுந லடியவர் பழவுரை
யரியரி யரியரி யரியரி யரியே 1

உரை:— வரி இருள் — மூடிக்கொண்டிருந்த (நித்திரையாகிய) இருள், அழி வழி — ஒழிந்த பின், மனம் வரும் — மனத்தில் உண்டாகின்ற, உணர்வொடு — நல்ல ஜ்ஞானத்துடன், கரி கிரி மருவிய — ஸ்ரீ ஹஸ்திகிரியில் எழுந்தருளியுள்ள, கரியவன்—கரிய நிறங்கொண்ட பேரருளாளனுடைய, அடியிணை — திருவடி இரண்டையும், பரிவொடு பரவும் — அன்புடன் போற்றுகின்ற, நல் அடியவர் — சிறந்த பாகவதர்கள், பழ உரை — வெகுகாலமாய (அநுஸந்திக்கும்) ஸூக்தி, அரி அரி அரி அரி அரி அரி அரியே — ஹரி: ஹரி: ஹரி: ஹரி: ஹரி: ஹரி: ஹரி: என்பவையே

பேரருளாளன் திருவடிகளை அன்புடன் பணியும் பாகவதர்கள் அதிகாலையில் நித்திரை நீங்கியதும் மனத்தெளிவுபெற்று ஹரிர்ஹரிர் ஹரி: என்று எழுமுறை அநுஸந்திப்பர் இது தொன்றுதொட்டுவந்த முறையாகும் 1

260 வினைவகை யொழுகிய வெறிநிலை யடையவு
நினைவுடை நிகழ்வெதிர் நிலைநல மணுகிட
மனமுரை கிரிசைகண் மகிழ்மறை நெறிகொடு
தனிமுத லடியிணை யடைபவர் தமரே 2

உரை — தமர் — பாகவதர்கள், வினைவகை ஒழுகிய — (தம்முடைய) காமத்தை அநுஸரித்து (அதுவரை) நடந்த, வெறி நிலை அடையவும் — அஜ்ஞானத்தை முழுவதையும், நினைவுடை நிகழ்வு — நினைக்கும்படியான நிகழ்காலத்தில், எதிர் நிலை நலம் — வருங்காலத்தில் உண்டாகும் ஆநந்தாநுபவம், அணுகிட — நெருங்கும்படி, மகிழ் மறை நெறி கொடு — மகிழ்வைத் தருகின்ற வேதமார்க்கத்தைக் கொண்டு, மனம் உரை கிரிசைகள் — மனம் வாக்கு தேஹம் ஆகிய வற்றால், தனி முதல் — ஒரே காரணமான பேரருளாளனுடைய, அடியிணை—திருவடியிரண்டையும், அடைபவர்—சரணமடைபவராவர்.

பாகவதர்கள், தமமுடைய காமத்தின்படி இதுகாறும் வீணேகழிந்த நிலைமுழுதையும் நினைந்து மனமுருகி, தேறி, பின் அன்றுமுழுதும் செய்யும் கைங்கர்யம் தடைபடாது நடந்து ஆநந்தம் பெறுவதற்காக மனத்திற்கு மகிழ்வைத்தரும் வேதமார்க்கத்தை நகக்கொண்டு மனம், வாக்கு, தேகம் ஆகிய முக்கரணங்களாலும் பேரருளாளனைச் சரணமடைவர் இங்ஙனம் செய்தலே அபிகமநம் எனப்படும் 2

2-பாசுரங்களால் உபாதாநம் கூறப்படுகின்றது—

261 மலர்மகள் மருவிய மறுவுடை யிறையவன்
மலரடி கருதிய மனமுடை யடியவர்
மலர்புன லமுதுடன் வகையன வடையவு
மலர்மதி யெமதல வெனவறி பவரே. 3

உரை:— மலர் மகள் மருவிய — தாமரை மலரில் அவதரித்த பிராட்டியோடு கூடியவனும், மறு உடை — (ஸ்ரீவத்ஸமென்ற) மறுவையுடையவனுமான, இறையவன் — ஸர்வேச்வரனுடைய, மலர் அடி கருதிய — மலர்போன்ற திருவடிகளை தியானிக்கின்ற, மனமுடை அடியவர்— மனஸ்ஸையுடைய பாகவதர்கள், மலர் புனல் அமுதுடன்— புஷ்பம், தீர்த்தம், அமுது (சாஸ்த்ரப்படி நிவேதனம்செய்யத்தக்க வஸ்து) ஆகிய இவற்றுடன், வகையன அடையவும் — (மற்றும் இவற்றின்) வகைகளையச் சேர்ந்தபொருள்கள் முழுதும், மலர் மதி—மலர் போன்ற (தம்முடைய) ஜ்ஞாநத்தால், எமது அல — எமக்காக அல்ல, எம்பெருமானுக்கே தகும்), என அறிபவர் — என்று அறிபவராவர்

பாகவதர்கள், புஷ்பம் தீர்த்தம் பரஸாதம் முதலிய உலகிலுள்ள இனியவஸ்துக்களெல்லாம் பேரருளாளனுக்கு ஸமர்ப்பித்தற்குத் தம்மீது அவன் திருவுள்ளம் குளிர்வதற்காகவே இருப்பனவென்று துணிந்து அவ்வாறு செய்துமகிழ்வரேயன்றித் தம் உபயோகத்திற்காகவென்கருதமாட்டார் 3

262 நறையுடை மலர்மக ணலமுற மருவிய
விறையவ னினிதுற வினியவை யெணுமவ
ரறநெறி யிலனெவ ணணுகிலு மணுகிலர்
துறையல தெனுமொரு துறைபடு கிலரே. 4

உரை:— இனியவை — (உலகில்) இனிய பொருள்கள், நறை உடை மலர் மகள் — தேனை நிறைந்த மலரில் அவதரித்த பிராட்டியி னோடு, நலம் உற — ஆநந்தம் அடையும்படி, மருவிய இறையவன் —

அணையப்பட்ட ஸர்வேச்வரன், இனிது உற– மகிழ்வுறுவதற்காகவே (ஏற்பட்டன), என்னும் அவர் — என்று நினைவுகொண்ட பாகவதர்கள், அறநெறியிலன் — தாம்மாக்கத்தைத் தழுவாதவன், எவன் அணுகி லும் — எவ்வாறு (தம்மை) நெருங்கினாலும், அணுகிலர் — (தாம் அவனை) நெருங்கமாட்டார்கள், துறை அலது என்னும் — (நேர்மையான) வழியல்ல என்று சொல்லப்படும், ஒரு துறை — ஒரு வழியில், படு கிலர் — ஈடுபடவும்மாட்டார்கள்

பாகவதர்கள் பேரருளாளனுடைய திருவாராதநத்திற்கு உரிய வஸ் துக்களை ஸம்பாதிக்கும்போது தாம்மாக்கத்திலிருந்து பிறழ்ந்த ஒருவன் எவ்வாறு நெருங்கி வேண்டினாலும் அவனிடமிருந்து ஒரு வஸ்துவையும் பெறமாட்டார், நேர்மையற்ற வழியில் வஸ்துக்களை ஸம்பாதிக்கமாட்டார் ஆக, சாஸ்த்ரம் கூறிய வழியில் பகவதாராதநத்திற்குரிய வஸ்துக்களைச் சோத்தலே **உபாதாநம்** எனப்படும் 4

2-பாசுரங்களால் இஜ்யை கூறப்படுகின்றது—

263 ஒளிமதி யெனவொரு திருவுட னுயர்பவ
னளிமதி முகநகை நலநில வுகவுக
டெளிபுன லமுதன செழுமதி யடியவர்
குளிமுதல கிரிசைகள குறைகிலர் வலவே 5

உரை:— செழு மதி அடியவர் — செழுமையான ஜ்ஞாநத்தை யுடைய பாகவதர்கள், ஒளி மதி என — நிலவும் சந்த்ரனும் என்னும் படி, ஒரு திருவுடன் உயர்பவன் — ஒப்பற்ற பிராட்டியுடன் உயர்ந்து நிற்கும் எம்பெருமானுடைய, நளி மதி முகம் — குளிர்ந்த சந்த்ரனைப் போன்ற திருமுகமண்டலத்தின்கண், நகை நலம் நிலவு உகவு கள — புன்சிரிப்பாகிய அழகிய நிலவினால் (வெளியாகும்) ஸந்தோ ஷத்திற்கு (க்காரணமான), தெளி புனல அமுது அன — தெளிந்த தீர்த்தமும் அடிசிலும் அதுபோன்ற (நிவேதநம் செய்யப்படும்) பிறவஸ்துக்களும் ஆகியவற்றிலும், வல — தம் சக்திக்குத் தக்க, குளி முதல கிரிசைகள் — திருமஞ்சனம் முதலிய உபசாரங்களிலும், குறைகிலர் — குறைவுபடாது நடந்துகொள்வர்

பாகவதர்கள், பேரருளாளனுக்குத் திருமஞ்சனம் முதலிய ஸகல உபசாரங்களையும் தம் சக்திக்குத்தக்க வழுவறச்செய்து, போக்யமான உணவுப் பண்டங்களை அவன் திருவுள்ளம் உகக்கும்படி ஸமர்ப்பித்துத் தாமும் மகிழ்வர் 5

264 * வருவதோ ருறவென வளரிள வரசென
மருவுநன் மகனென வனமத கரியென
வருவிலை மணியென வடியவ ரடைபவ
ரருகணை யிறைவனை யருகணை யுடனே. 6

உரை:— அடியவர் — பாகவதர்கள், அருகு அணை இறைவனை — (தம்) ஸமீபத்திலேயே (ஸுலபனாய்) எழுந்தருளியுள்ள எம்பெருமானை, வருவது ஓர் உறவு என — (தம் வீட்டிற்கு) வந்த ஒரு பந்து என்னும்படியும், வளர் இளவரசு என — வளர்ந்துவருகின்ற இளவரசன் என்னும்படியும், மருவு நல் மகன் என—அணைத்துக் கொள்ளப்படும் சிறந்த புத்திரன் என்னும்படியும், வன மத கரி என — வனத்திலுள்ள மதங்கொண்ட யானை என்னும்படியும், அரு விலை மணி என — அருமையான விலைமதிப்புடைய (பெறற்கரிய) ரத்னம் என்னும்படியும் (அநுஸந்தித்து), அருகணையுடன்— திருவாராதநத்திற்கு வேண்டிய வஸ்துக்களுடன், அடைபவர் — சரணமடைபவராவர்

பாகவதர்கள், பேரருளாளனைத் தம் வீட்டிற்கு அருமையாய் வந்த ஒரு பந்துவாக நினைத்து மகிழ்வர், நாடு முழுதையும் ஆளவல்ல இளவரசனை வந்திருப்பதாயக்கொண்டு அதற்குத்தக்க உபசரிப்பர், நெடுங்காலம் தவங்கிடந்து அருமையாயப்பெற்ற புத்திரனைப்போல நினைத்து அன்புகொள்வர், மதங்கொண்டு அழகியதாய் விளங்கும் ஒரு யானையைக்கண்டாற்போலக் கண்டுகளிப்பர், பெறுவதற்கரிய உயர்ந்த ஒரு ரத்னத்தைப் பெற்றாற்போலப் பெருமிதங்கொள்வர், இத்தகைய உணர்ச்சிகளுடன் சாஸ்த்ரீயமான வஸ்துக்களைக்கொண்டு பாகவதர்கள் பேரருளாளனுக்கு ஸகல உபசாரங்களுடனும் ப்ரஸாதம் முதலியவற்றை நிவேதநம் செய்வர் இங்ஙனம் செய்வதே இஜ்யை எனப்படும் 6

2-பாசுரங்களால் ஸ்வாத்யாயம் கூறப்படுகின்றது—

265 விரைகமழ் மலர்மகண மிகவுறு மிறையவன்
சுரைகழல் குறுகிய குளிர்மதி மதியொடு
வரைநிலை யடியவர் மறைகளின் மறையெனு
முரைநிரை பரவுவ ருளமமு துணவே 7

* " யதா யுவாநம் ராஜாநம் யதா வ ஊடஹஸ்திநம் ।
யதா விக்ர்யாதிகம் ரத்நம் ஸமவஞம் ததாவக்ஷ்யெஸ ॥"
" யதா வ புத்ரம் உயிதம் தவெஸெவாவஹரெஸவிழ ।"

உரை.— வரை நிலை அடியவர் — மலைபோன்ற (கலங்காத) நிலையுடைய பாகவதர்கள், விரை கமழ் மலர் மகள் — மணம் வீசுகின்ற மலரில் அவதரித்த பிராட்டி, மிக உறும் இறையவன் — மிகப் பொருந்தி வஸிக்கப்பெறுகின்ற ஸ்வாமியான பேரருளாளனுடைய, குரை கழல் குறுகிய — (சதங்கை) ஒலிக்கின்ற திருவடிகளை நெருங்கியதும், குளிர் மதி — குளிர்ந்த சந்த்ரனைப் போன்றதுமான, மதியோடு — மனத்துடன், உளம் அமுது உண — (அந்த) மனஸ் அமுருத்தை அநுபவிப்பதற்காக, மறைகளில் மறை எணும் — வேதங்களுள் சிறந்த ரஹஸ்யங்களாக எண்ணப்படுகின்ற, உரை நிரை — (திருமந்த்ரம், த்வயம் முதலிய) மந்த்ரங்களின் வரிசையை, பரவுவர் — அநுஸந்திப்பர்

பாகவதர்கள் பேரருளாளனுக்கு ஆராதநம்செய்து அந்த ப்ரஸாதத்தைத் தாமும் ஸ்வீகரித்துக்கொண்டபின் பொழுதை இனிதாகக் கழித்து மனமகிழ்வுபெறுவதற்காக, திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் ஆகிய ரஹஸ்யங்களின் அர்த்தத்தை அநுஸந்தித்துக்கொண்டிருப்பார்கள் 7

266 துதிகளு மறிவரு சுருதியி னிறுதியி
னிதயமி தெனமுனி யிறையவ ருரைகளு
மதுரம னுதவிய மறைகளு மடியவர்
விதிவகை பரவுவர் மிகவுள மெழவே 8

உரை:— அடியவர் — பாகவதர்கள், உளம் மிக எழ — (தம்) மனஸ் மிகவும் உத்ஸாஹமடைவதற்காக, துதிகளும் — (ஸஹஸ்ர நாமம் முதலிய) ஸ்தோத்ரங்களையும், அறிவு அரு சுருதியின் இறுதியின் — அறிவதற்கு அருமையான வேதத்தினுடைய அந்தத்தின், இதயம் இது என — தாத்பர்யம் இது என்னும்படி (உள்ள), முனி இறையவர் உரைகளும் —(வ்யாஸர் பராசரர் முதலிய) முநிச்ரேஷ்டர்களின் ஸூக்தி (களாகிய இதிஹாஸபுராணங்)களையும், மன் மதுரம் உதவிய மறைகளும் — (ஆழ்வார்கள் அருளிச்செய்த) மிக இனிமையைத் தருகின்ற (தமிழ்) வேதங்களையும், விதிவகை — (சாஸ்த்ரங்களில்கூறிய)முறைப்படி, பரவுவர் — அநுஸந்தித்து பரவசமசெய்பவராவர்.

பாகவதாகள், பினனும ஸஹஸாநாமம முதலிய ஸதோதாஙகளையும இதிஹாஸ - புராணஙகளையும ஆழவாாகளின அருளிசசெயலகளையும அநு ஸநதிதது பிறருககும பரவசநமசெயதுகொணடிருபபா இதுவே ஸ்வாத்யாயம் எனபபடும 8

2-பாசுரங்களால் யோகம் கூறப்படுகின்றது—

267 அறிவிலா தலைமிசை யயனடி யெழுதிய
பொறிவகை யெழுவதோா பொறிநல முகவல
ருறுவது முடையது மிதுவென வருவது
நறுமலா மகளபதி நலமுறு நினைவே 9

உரை — அறிவு இலா தலைமிசை — ஜஞாநமிலலாத ஜீவாக ளின தலையில, அயன அடி எழுதிய — பரஹமா ஆதிகாலததில எழுதிய, பொறி வகை எழுவது — எழுததுககளைத தழுவி உணடா கினற, ஓா பொறி நலம் — ஓா இநதரியஙகளின ஸுகததை, உக வலா — விருமபாதவாகளான பாகவதாகள, உறுவதும் — (தம ஸவ ரூபததிறகுப) பொருநதியதாகக கொளவதும, உடையதும—(தமககு) உடைமையாகக கொளவதும, இது என — இநத யோகமே எனறு கூறுமபடி, வருவது — தானே வருவது, நறு மலா மகள பதி — மணமுளள மலரில அவதரிதத பிராடடியின நாதனை எமபெரு மானைபபறறியதும, நலம் உறும் — நனமைபொருநதியதுமான, நினைவே — தயானமே (ஆகும)

ஜீவனுடைய பிறகாலவாழவைபபறறி பரஹமா அவன தலையில் முனனமே எழுதிவிடுகினறுன அதனபடியே அநத ஜீவன போகஙகளை இககாமபூமியில அநுபவிககினறுன விவேகததால இததகைய போகஙகளை வெறுதது நலவழிபபடுபவன பரஹமா எழுதியதையும பொயயாககிவிடுகின றுன பேரருளாளன திருவடிசசுவையையறிநத பாகவதாகள இததகைய அறபஸுகஙகளைக கனவிலும கருதமாடடாாகள அவாகள பேரருளாளன திருவடிகளை இடைவிடாது சிநதிபபதையே பேரினபமாககொளவா, இதையே தம ஸவரூபததிறகு உரியதாயும தமது உடைமையாகவும கொணடு அததகைய யோகததில ஈடுபடுவா 9

268 பெருகிய நலநிலை பெருமையின் மிகுமய
லுருகிய நிலைமன முயாமுகி ழெழுமுடல
சொருகிய விழிதிகழ சுடாமதி புகுமிறை
கருகிய வுருதிகழ கரிகிரி யரியே. 10

உரை:— பெருகிய நல நிலை — (மேன்மேலும்) வளர்கின்ற (பகவத்தியானமாகிய) ஆநந்தநிலைமையில், பெருமையின் மிகு மயல் — பெருமையினால் மிகுந்து நிற்கும் (பகவத்) பக்தியினால், உருகிய நிலை மனம் — உருகிய தன்மையையுடைய மனமும், உயர் முகிழ் எழும் உடல் — (மேலே) அரும்பிய மயிர்க்கூச்செறிந்த தேஹமும், சொருகிய விழி — உள்ளே செருகிய விழிகளுமாய், திகழ் — விளங்குகின்ற, சுடர் மதி — ப்ரகாசமான ஜ்ஞானத்தில், புகும் இறை — புகுந்துநிற்கும் நாயகன் (யாவனெனில்), கருகிய உரு திகழ் — கறுத்த வடிவோடு ப்ரகாசிக்கின்ற, கரி கிரி அரியே — அத்திகிரிப் பெருமானாகிய பேரருளாளனே.

பாகவதர்கள், பேரருளாளனுடைய அழகிய திருமேனியை த்யானம் செய்யும்போது ஆநந்தம்பெருகி, மனமுருகி, மயிர்க்கூச்செறிந்து, கண் விழி உள்ளே செருகிநிற்கப்பெறுவர். இத்தகைய ஆநந்தநிலையில் பேரருளாளன் திருமேனியின் த்யானத்தில் மூழ்கிக்கிடப்பதே யோகம் எனப்படும்.

## ஸ்ரீ-வைணவதினசரி — உரை முற்றிற்று

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

---

ஸ்ரீ:

# திருச்சின்னமாலை-உரை

ஸ்ராதாப்புல திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

தனியன்

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: . . .. கவிதார்கிககேஸரீ ।
ஸ்ரீரான் று வாழ்வு.

---

சிறப்புத்தனியன்—உரை

மன்னுதிரு மந்திரத்தின் வாழ்துவயத் தின்பொருளுந்
துன்னுபுகழ்க் கீதைதனிற் சொன்னவெண்ணான் கின்பொருளு
மன்னவயற் கச்சியரு ளாளர்திருச் சின்னவொலி
யின்னபடி யென்றுரைத்தா னெழில்வேதாந் தாரியனே

எழில் வேதாந்தாரியன் — அழகுபொருந்திய ஸ்ரீ வேதாந்ததேசிகன், அன்ன வயல் கச்சி — அன்னப்பறவைகள் உலாவும் வயல்களால்நிறைந்த காஞ்சீபுரத்தில் (எழுந்தருளியுள்ள), அருளாளர் திருச்சின்ன ஒலி — பேரருளாளர் (ஸந்நிதியில் ஸேவிக்கும்) திருச்சின்னத்தின் ஓசையில், மன்னு திருமந்திரத்தின் பொருளும் — நிலைபெற்றுநிற்கும் திருவஷ்டாக்ஷரத்தினுடைய அர்த்தவிசேஷங்களும், வாழ் துவயத்தின் பொருளும் — (சேதனரை) உஜ்ஜீவிக்கச்செய்கின்ற த்வயத்தினுடைய அர்த்தவிசேஷங்களும், துன்னு புகழ் — பொருந்திய புகழையுடைய, கீதைதனில் — பகவத்கீதையில், சொன்ன — (கண்ணன்) அருளிச்செய்த, எண்ணான்கின் — முப்பத்திரண்டு அக்ஷரங்களாலாகிய சரமச்லோகத்தின், பொருளும் — அர்த்தவிசேஷங்களும், இன்னபடி — இவ்வாறு (அமைந்துள்ளன) என்று உரைத்தான் — என்று அருளிச்செய்தான்

ஏகாந்த மூன்று மெழிலா லுரைசெய்து
மாகாந்தஞ் செய்தருளும் வள்ளலாய்—சாகாந்த
தேசிகனந் தூப்புற் றிருவேங்க டேசதந்த
வாசகமே யெங்களுக்கு வாழ்வு

**ஏகாந்தம் மூன்றும்** — *ரஹஸ்யங்களை மூன்றையும்*, **எழிலால்** — *அழகோடு*, **உரைசெய்து** — *வியாக்கியானம்செய்து*, **மாகாந்தம் செய்து** — *பெருமையுள்ள காந்தமென்னும் உலோகத்தைப்போல பிராமணஸ்தைகவர்ந்து*, **அருளும்** — *அவர் (உஜ்ஜீவிக்குமாறு) அருள்புரிகின்ற*, **வள்ளல் ஆய்** — *பெருங்கொடையாளராகி*, **சாகாந்த தேசிகனும்** — *வேதாந்ததேசிகன் என்று பிரசித்திபெற்ற*, **தூப்புல் திருவேங்கடேசதரு** — *தூப்புல் திருவேங்கடமுடையானுடைய*, **வாசகமே** — *ஸ்ரீஸூக்தியே*, **எங்களுக்கு வாழ்வு** — *எங்களை உஜ்ஜீவிக்கச்செய்வதாகும்*

**பரிச்சின்ன மான விருநா லெழுத்தின்பல் வண்மையெலாம்**
**விரிச்சு நலம்பெற வோதவல் லோர்க்கிந்த மேதினிக்கே**
**மரிச்சின்ன மீளப் பிறவாமல் வாழ்வித்து மால்வாதர்**
**திருச்சின்ன வோசை யினிமையுண் டோமற்றைத் தேவருக்கே**

**பரிச்சின்னமான** — *அளவுபட்ட*, **இருநாலெழுத்தின்** — *அஷ்டாக்ஷரத்தின*, **பல் வண்மை யெலாம்** — *பலவகைப்பலனையும் அளிக்கவல்ல தன்மை முழுதையும்*, **நலம் பெற** — *(தாம்) நன்மையை அடையும்பொருட்டு*, **விரிச்சு ஓதவல்லோர்க்கு** — *விளக்கி அநுஸந்தானம்செய்யும் பாகவதர்களை*, **இந்த மேதினிக்கே** — *இந்தப் பூமியிலேயே*, **மரிச்சு இன்னம் மீளப் பிறவாமல்** — *இறந்து பின்னும் திரும்பிப் பிறக்காமல்*, **வாழ்விக்கும்** — *உஜ்ஜீவிக்கச்செய்பவரும்*, **மால் வாதர்** — *(பக்தர்களிடம்) அன்புடையவருமான பேரருளாளருடைய*, **திருச்சின்ன ஓசை இனிமை** — *திருச்சின்னத்தின் சப்தத்தின் இனிமை*, **மற்றைத் தேவருக்கு உண்டோ** — *மற்றைத் தேவர் பாற் பெறமுடியுமோ?*

"*விரிச்சு*" "*மரிச்சு*" *என்பன எதுகைநோக்கிவந்த போலிச்சொற்கள்*

---

**[விஷயச் சுருக்கம்]**

*எம்பெருமானுடைய ஸந்நிதிகளில் 'திருச்சின்னம்' என்னும் ஒரு வாத்யவிசேஷம் ஸேவிக்கப்படுவதுண்டு அதன் ஓசையின் காம்பீர்யத்தையும் இனிமையையும் வர்ணிக்க இயலாது பேரருளாளன் ஸந்நிதியில் ஸேவிக்கப்படும் திருச்சின்னத்தின் ஓசை, ஸ்வாமி தேசிகன் திருவுள்ளத்தைக் கவர்ந்தது திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்னும் ரஹஸ்யங்களில் கூறப்படுகிற குணவிசேஷமுள்ள பேரருளாளன் எழுந்தருளுவதைக் காட்டுகிறது அவ்வாத்யத்தின் ஒலி அந்த வாத்யத்தின் பெயரையே இட்டு இப்பிரபந்தத்தை யருளிச்செய்தார் ஸ்ரீதேசிகன்*

*[முன்னொருகால், பெருமாள்கோயிலில் திருவீதிகளில் திவ்யப்ரபந்தத்தை அநுஸந்திக்கக்கூடாதென்று மதாந்தரஸ்தர் ஆக்ஷேபித்தனர். ஸ்ரீதேசிகன் அவர்களை வாதத்தில் வென்று ப்ரபந்தத்தை வைதிகமென்று ஸ்தாபித்து அந்தக் கோஷ்டியுடன் பேரருளாளனைத் திருவீதிகளில் எழுந்தருளச்செய்தார். அப்பொழுது ஸ்ரீதேசிகனிடமிருந்து இப்ப்ரபந்தம் அவதரித்ததாகும் — என்றும் பெரியோர் பணிப்பர்]*

*ஸ்ரீதேசிகன் இதில், முதலில் 6 பாசுரங்களில் திருமந்த்ரத்தின் ஸாரார்த்தத்தையும், 7-வது பாசுரத்தில் த்வயத்தின் விசேஷார்த்தத்தையும், 8, 9-வது பாசுரங்களில் சரமச்லோகத்தின் முக்கியார்த்தத்தையும் வெளியிட்டுப் பின்னும் ஒரு பாசுரத்தால் பொதுவாகப் பேரருளாளனுடைய பெருமையைப் பேசிக் கடைசியில் ஆசார்யோபதேசத்தின் ஸாரமடங்கிய இப்ப்ரபந்தத்தின் இனிமையைச் சிறப்பதில் பற்று இல்லாமல் எம்பெருமானிடம் ஈடுபடுமவரே அனுபவிக்கமுடியுமென்று கூறித் தலைக்கட்டுகிறார்.*

*இதில் ஒவ்வொரு தொடரும் ரஹஸ்யங்கள் மூன்றில் எந்த எந்தப் பாகத்தின் விளக்கமென்பதை ரஹஸ்யங்களில் மிக்க பரிசயத்தாலேயே அறியவேண்டும்*

---

*இப்ப்ரபந்தம் முழுதும் எண்சீராசிரிய விருத்தத்தால் அமைந்ததாம்.*

**2-பாசுரங்களால் ப்ரணவத்திலுள்ள அகாரத்தின் அர்த்தம் கூறப்படுகின்றது—**

269 ஈருலகைப் படைக்கவெண்ணி யிருந்தார் வந்தார்
        ரேழின்மலரோன் றன்னையன்றே யீன்றார் வந்தார்
    மாருதமண் ணீராகு மாயோர் வந்தார்
        வானொடெரி தாமாகு மறையோர் வந்தார்
    சூரியர்தம் முடனறுலங்கு தூயோர் வந்தார்
        சுரர்களுக்கன் றமுதருள்சுந் தரனார் வந்தார்
    வாரிதிசூழ் வையகம்வாழ் வித்தார் வந்தார்
        வண்மையுடன் வரந்தருவார் வந்தார் தாமே. 1

உரை:— ஈர் உலகை — (*சேதநம் அசேதநம் என்னும்*) இரு *வகையான லோகத்தையும்*, படைக்க எண்ணி யிருந்தார் — *ஸ்ருஷ்டிக்க ஸங்கல்பித்துநின்றவரான பேரருளாளர்*, வந்தார் — *எழுந்தருளினார்*; எழில் மலரோன்தன்னை — *அழகிய நாபிக்கமலத்தை ஆஸந்*

மாககொண்ட பரஹமாவை, அன்றே யன்றா வந்தார் — ஆதிகாலத்திலேயே ஸ்ருஷ்டித்தவர் வந்தார்; மாருதம் மண் நீர் ஆகும் — வாயு பருதிவி ஜலம் என்னும் பூதங்களாக மாறுபாட்டை அடைகின்ற, மாயோர் வந்தார் — அதிசயச்செய்கையையுடையவர் வந்தார், மறை வானோடு எரி ஆகும் — ஆகாசத்துடன் அக்கினியாகவும் ஆகின்ற, மறையோர் வந்தார் — வேதத்தால் போற்றப்படுகின்றவர் வந்தார், சூரியர் தம்முடன் — நித்யஸூரிகளுடன், துலங்கு தூயோர் வந்தார் — ப்ரகாசிக்கின்ற பரிசுத்தர் வந்தார், சுரர்களுக்கு — தேவர்களுக்கு, அன்று — (கடல் கடைந்த) அக்காலத்தில், அமுது அருள — அமருதத்தைக் கொடுத்த, சுந்தரனார் வந்தார் — அழகர் வந்தார், வாரிதி சூழ — கடலால் சூழப்பட்ட, வையகம் வாழவித்தார் வந்தார் — லோகத்தை வாழச்செய்தவர் வந்தார், வண்மையுடன் — கொடைக்குணத்துடன், வரம் தருவார் வந்தார் — வேண்டிய வரத்தைக் கொடுத்தருள்வார் வந்தார். தாம - அசை 1

270 அருமறையை யூழிதனிற் காத்தார் வந்தா
ரதுதன்னை யன்றயனுக் களித்தார் வந்தார்
தருமவழி யழியாமற் காப்பார் வந்தார்
தாமரையா ளுடனிலங்குந் தாதை வந்தார்
திருவுரையாய்த் தாம்பொருளாய் நிற்பார் வந்தார்
திருவருளாற் செழுங்கலைக டந்தார் வந்தார்
மருவலார்க்கு மயக்குரைக்கு மாயோர் வந்தார்
வானேற வழிதந்தார் வந்தார் தாமே. 2

உரை:— அரு மறையை — அருமையான வேதத்தை, ஊழி தனில் — ப்ரளயகாலத்தில், காத்தார் வந்தார் — காப்பாற்றியவர் வந்தார், அதுதன்னை — அந்த வேதத்தை, அன்று — ஸ்ருஷ்டிகாலத்திலே, அயனுக்கு அளித்தார் வந்தார் — ப்ரஹ்மாவுக்கு உபதேசித்தவர் வந்தார், தரும வழி அழியாமல— (உலகில்) தர்மமார்க்கம் கெடாமல், காப்பார் வந்தார் — (பல அவதாரங்களைச் செய்து) காப்பவர் வந்தார்; தாமரையாளுடன் — பெரிய பிராட்டியுடன், இலங்கும் — ப்ரகாசிக்கின்ற, தாதை வந்தார் — (உலகுக்குத்) தந்தை வந்தார்; திரு உரையாய் — பிராட்டி சப்தஸ்வரூபையாய (நிற்க), தாம் பொருளாய்

நிற்பார் வந்தார் — தாம (அநத சபதத்தின) அர்த்தமாய நிற்குமவர் வந்தார், திரு அருளால — சிறநத கருணையினால, செழும கலைகள் — வருததியடைகின்ற விதயைகளை (மஹர்ஷிகளின வழியாக), தந்தார் வந்தார்—(உலகுக்கு) அருளியவர் வந்தார், மருவலாசகு —(தமமை) ஆசரயிககாதவாகளுககு, மயககு உரைககும — (பல) மோஹநசாஸதரஙகளை வெளியி (டடு அவாகளை நரகில விழசசெயது) நிமவரான, மாயோர் வந்தார்—வஞ்சகமுடையார் வந்தார், வான ஏற—பரமபததமதை அடைய, வழி தந்தார் வந்தார்—உபாயஙகளை உபதேசிததவர் வந்தார் 2

**நான்காம் வேற்றுமையுருபு, உகாரம், மகாரம் ஆகியவற்றின் அர்த்தம் கூறப்படுகின்றது—**

271 அனைததுலகுங காககுமரு ளாளர் வந்தார்
ரனைததுககு மதிபதியாய நிற்பார் வந்தார்
தினைததனையுந திருமகளை விடாதார் வந்தார்
தேசோததார் மிககாரு மிலலார் வந்தார்
நினைககநமக கின்னறிவு தந்தார் வந்தார்
நிலைநின்ற வுயிர்தோன்ற நினைந்தார் வந்தார்
ரெனககிவாநா னிவாககென்ன வினியார் வந்தார்
ரெழுததோன்றிற றிகழநின்றார் வந்தார் தாமே 3

உரை:— அனைதது உலகும் காககும் — ஸகல லோகஙகளையும ரக்ஷிககின்ற, அருளாளர் வந்தார் — பேரருளாளர் வந்தார், அனைத்துககும் அதிபதியாய நிற்பார் வந்தார் — ஸகலவஸ்துககளுககும ஸ்வாமியாய நிற்பவர் வந்தார், தினைததனையும் — சிறிது (நேரமு)ம, திருமகளை — பிராட்டியை, விடாதார் வந்தார் — விட்டுப்பிரியாதவர் வந்தார், தேசு — தேஜஸ்ஸில, ஒத்தார் மிககாரும் இலலார் வந்தார் — ஒததவரும மிகுநதவரும (வேறொருவர்) இருககபபெறாதவர் வந்தார், நினைகக — (தமமை) நினைககுமபடி, நமககு — (தாஸராகிய) நமககு, இன் அறிவு — இனிய ஜ்ஞானததை, தந்தார் வந்தார் — அருளியவர் வந்தார், நிலைநின்ற — (அழிவற்று) நிதயனான, உயிர்—ஜீவன், தோன்ற — (தன்னை அறிய வேறு ஜ்ஞானம வேணடாதபடி தானே) ப்ரகாசிககுமபடி, நினைந்தார் வந்தார் — ஸஙகலபிததவர் வந்தார்; எனககு இவர் — எனககு இவர் (ஸ்வாமி). நான் இவாககு — நான் இவருககு (அடியன), என்ன — என்று அநுஸநதிகக, இனியார் வந்

தாா் — போகயமாயததோனறுமவா வநதாா், ஒன்று எழுததில — ஓா அக்ஷரமான பரணவததில, திகழநின்ரா வநதாா — (போறறப படடு) பரகாசிபபவா வநதாா தாம - அசை 3

நமச்சப்தத்தின் அர்த்தம் கூறப்படுகின்றது—

272 நாம்வணஙகத தாமிணஙகா நிறபாா வநதாா
நம்மையடைக கலஙகோளளு நாதா வநதாா
நாமேமககாம் வழககேலலா மறுததாா வநதாா
நமககிதுவேன் றுரையாமல வைததாா வநதாா
சேமமேணணி யெம்மையன்பாக கடைததாா வநதாா
செழுநதகவாற றிண்சரணு மீசா வநதாா
தாமனைததுந தீவினையைத தவிாப்பாா வநதாா
தமககேயா யெமைககோள்வாா வநதாா தாமே 4

உரை:— நாம் வணஙக — நாம ஸேவிததால, தாம் இணஙகா நிற்பாா வநதாா — தாம (நமககுப பலன கொடுகக) உடனபடடு நிறபவர் வநதாா, நம்மை அடைககலம கோளளும — நமமைக காக்க வேணடிய வஸதுவாக ஏறறுககொளபவரான, நாதா வநதாா — ஸவாமி வநதாா, நாம் எமககு ஆம்—நாம எமககு எனனும நினைவினால ஆகினற, வழககு எலலாம் — விவாதஙகளையெலலாம, அறுததாா வநதாா—ஒழித தவா வநதாா, இது நமககு — இநத வஸது நமககு (உரியது), என்று உரையாமல் — எனறு கூறாமல, வைததாா வநதாா — (நலல அறிவைக கொடுதது) நிறுததியவா வநதாா, சேமம எணணி — (எமககு) க்ஷேமததைச்செயய எணணி, எம்மை — எஙகளை, அன்பாககு — பாகவதருககு, அடைததாா வநதாா — அடிமையாககியவா வநதாா, செழும் தகவால்—மிகக கருணையால, திண சரண ஆம் — வலிய சரணமாக ஆகினற, ஈசா வநதாா — ஸாவேசுவரன வநதாா, தீ வினையை அனைததும் — (நம) கொடிய காமஙகளை முழுதும, தாம தவிாபபாா வநதாா — தாமே ஒழிபபவா வநதாா, எ(ம்) மைத தமககேயாய — எஙகளைத தம பரயோஜநததிற்காகவே, கோளவாா வநதாா — ஏற்றுக கொளளுமவா வநதாா. தாம - அசை. 4

**நாராயணசப்தார்த்தம் கூறப்படுகின்றது—**

273 உலகெல்லா முள்ளேவைத் துமிழ்ந்தார் வந்தார்
உலகுடம்பாய்த் தாமுயிராய் நின்றார் வந்தார்
அலைகடலா யானந்த மடைந்தார் வந்தார்
அளவில்லா வருளாழிப் பெருமாள் வந்தார்
திலகமெனுந் திருமேனிச் செல்வர் வந்தார்
செழுங்குணங்க ளிருமூன்று முடையார் வந்தார்
இலகுசுடர் முழுநலமா மினியார் வந்தார்
எல்லார்க்குங் கதியானார் வந்தார் தாமே. 5

உரை — உலகு எல்லாம்—உலகங்கள் முழுவதையும், உள்ளே வைத்து — (ப்ரளயகாலத்தில் தம்) வயிற்றினுள் வைத்து, (ரக்ஷித்து) உமிழ்ந்தார் வந்தார் — (ஸ்ருஷ்டிகாலத்தில் மறுபடி) படைத்தவர் வந்தார், உலகு உடம்பாய் — (சேதநாசேதநங்களாகிய) உலகம் (முழுதும் தமக்குச்சரீரமாய் நிற்க), தாம் உயிராய்நின்றார் வந்தார் — தாம் அந்தர்யாமியாயநின்றவர் வந்தார், அலைகடலாய — (குமிழி, நுரை, அலை முதலிய பல நிலைமையில் மாறுகின்ற) அலை (நிறைந்த) கடலைப்போல இருந்து (தாமும் பலவிதமான ப்ரபஞ்சமாகப் பரிணமித்து அதனால்), ஆனந்தம் அடைந்தார் வந்தார் — ஸந்தோஷம் அடைந்தவர் வந்தார், அளவு இல்லா அருள் ஆழிப் பெருமாள் வந்தார் — அளவற்ற கருணைக் கடலான பெருமாள் வந்தார்; திலகம் எனும் — திலகமென்று சொல்லப்படுகின்ற (சிறந்த), திருமேனிச் செல்வர் வந்தார் — திவ்யமங்களவிக்ரஹமாகிய செல்வத்தையுடையவர் வந்தார், செழும் குணங்கள் — சிறந்த குணங்கள், இரு மூன்றும் உடையார் வந்தார் — ஆறும் உடையவர் வந்தார்; இலகு — (மாறுபடாமல்) ப்ரகாசிக்கின்ற, சுடர் — ஜ்ஞாநஸ்வரூபரும், முழு நலம் ஆம் — பரிபூர்ணாநந்தஸ்வரூபருமாக ஆகின்ற, இனியார் வந்தார் — (அநுபவிக்க) இனியராயிருப்பவர் வந்தார் எல்லார்க்கும் கதி ஆனார் வந்தார் — ஸகலஜீவருக்கும் அநுபவிக்கப்படும் பலனாயிருப்பவர் வந்தார். தாம - அசை 5

**ஆறு குணங்கள்** — 1 ஜ்ஞாநம் 2 சக்தி 3 பலம் 4 ஐச்வர்யம் 5 வீர்யம் 6 தேஜஸ். என்பன. அல்லது — 1 காருந்தன்மை

2 அருள் 3 ஜ்ஞானம் 4 எளிமை 5 இந்திரியங்களின் அடக்கம் 6 மனத்தின் அடக்கம் என்பன

**நாராயண சப்தத்தின்மீதுள்ள நான்காம் வேற்றுமையின் பொருள் கூறப்படுகின்றது—**

274 அருளாலே விலங்கிரண்டு மழிப்பார் வந்தார்
ரஞ்சிறையைக் கழித்தருளு மன்பார் வந்தார்
மருள்வாரா வகைநம்மைக் காப்பார் வந்தார்
வானேற வழிநடத்தி வைப்பார் வந்தார்
தெருளாரு தெளிவிசும்பு தருவார் வந்தார்
திணகழற்கீழ் வாழநமக் கருள்வார் வந்தார்
பெருவானி லடிமைநம்மைக் கொள்வார் வந்தார்
பிரியாமற் காத்தளிப்பார் வந்தார் தாமே 6

உரை— அருளாலே – கருணையினால், விலங்கு இரண்டும் – விலங்கு (போன்ற புண்யபாபங்களாகிய கர்மங்களை) இரண்டையும், அழிப்பார் வந்தார் – ஒழிப்பவர் வந்தார், அம் – (ஸம்ஸாரிகளுக்குக் காமவசத்தால்) அழகிய (தாயத் தோன்றுகின்ற), சிறையை – (ஸம்ஸாரமாகிய) சிறையை, கழித்தருளும் – போக்கியருள்கின்ற, அன்பார் வந்தார் – (பாகவதர்களிடம்) அன்புள்ளவர் வந்தார், மருள் வாரா வகை – (அநாதிகாலத்தில் தீயநினைவுகளைத் தருகின்ற) அஜ்ஞானம் வாராதபடி, நம்மைக் காப்பார் வந்தார் – நம்மைக் காத்தருள்பவர் வந்தார், வான் ஏற – பரமபதத்திற்குச் செல்லும்படி, வழி நடத்தி வைப்பார் வந்தார் – அர்ச்சிராதிமார்க்கத்தில் நடத்திவைப்பவர் வந்தார், தெருள் ஆரும் – (அனைவரும்) ஜ்ஞானம் நிறைந்து ப்ரகாசிக்கும் இடமாகிய, தெளி விசும்பு – சுத்தஸத்துவமயமான பரமபதத்தை, தருவார் வந்தார் – கொடுத்தருள்பவர் வந்தார், திண் கழற்கீழ் – (தம்முடைய) வலிய திருவடிகளின்கீழ், வாழ – (கைங்கர்யம் செய்து) வாழும்படி, நமக்கு அருள்வார் வந்தார் – நமக்கு அருள் புரிவார் வந்தார், பெருவானில் அடிமை – ஸ்ரீவைகுண்டத்தில் கைங்கர்யத்தை, ந(ம்)மைக் கொள்வார் வந்தார் – நம்மைக் (கொண்டு செய்வித்து ஏற்றுக்) கொள்பவர் வந்தார், பிரியாமல் – (நம்மை விட்டு நாம் ஒருபோதும்) பிரியாமல், காத்து அளிப்பார் வந்தார் – காத்தருள்பவர் வந்தார் தாம் - அசை

6

கீழ் ஆறு பாசுரங்களால் திருமந்த்ரார்த்தம் கூறப்பட்டது இனி த்வயத்தின் அர்த்தம் கூறப்படுகின்றது—

275 அகலகிலாத திருமகளா ரன்பா வந்தா
ரடியிரண்டு மாருகத தந்தாா வந்தாா
புகலில்லாா புகலாகும் புனிதா வந்தாா
போனனுலகிற றிருவுடனே திகழ்வாா வந்தா
ரகிலமெலா மானந்த மானா வந்தா
ரடியிணைககீழ வைததடிமை கோளவாா வந்தாா
பகனடுவே யிரவழைகக வலலாா வந்தாா
பகலோனரு யிரவழிததாா வந்தாா தாமே 7

உரை:— அகலகிலாத திருமகளாா — (க்ஷணமும) பிரியாத பிராட்டியாரிடம, அனபா வந்தார் — அனபுடையாா வந்தாா, அடி இரணடும — திருவடி இரணடையும, ஆருகத தந்தாா வந்தாா — உபாயமாகக கொடுததவா வந்தாா, புகல இலலாா — (வேறு) உபாயம (அநுஷ்டிககச சகதி) இலலாதவருககு, புகல ஆகும — அவவுபாயத தின ஸதாநததில நிறகினற, புனிதா வந்தாா — பரிசுததா வந்தாா; போன உலகில — பரமபததில, திருவுடனே திகழவாா வந்தாா — பிராட்டியுடன பரகாசிபபவா வந்தாா, அகிலம் எலாம — (லீலா விபூதி — நிதயவிபூதியாகிய) உலகஙகள, (அவன திருமேனி, குணங கள ஆகிய) அனைததும, ஆனநதம ஆனா வந்தாா — (நிதயருககும முகதருககும) ஆநநதமாயத தோனறுமாறு நிறகபபெறறவா வந்தாா, அடியிணைககீழ வைதது — (நமமைத) திருவடி இரணடின கீழும சோதது, அடிமை கோளவாா வந்தாா — (நாம செயயும) கைங காயததைத ஏறறுககொளளுமவா வந்தாா, பகல் நடுவே — பகலின நடுவிலேயே, இரவு அழைககவலலாா வந்தாா — (பாரதயுததததில) இரவைக கொணரும வலலமையுடையவா வந்தாா, பகல ஒன்றாய — (முகதியில) ஒரே பகலாய, இரவு அழிததாா வந்தாா — (ஸமஸார மாகிய) இரவைப போககியவா வந்தாா (தாம — அசை)

பகல்நடுவே இரவழைததது—127-வது பாசுரக குறிபபிலே காணக. 7

**சரமசுலோகத்தின் அர்த்தம் 2-பாசுரங்களால் வெளியிடப்படுகின்றது—**

276 தருமன்விடத் தாந்தூது போனார் வந்தார்
தரணிபொறுத் திணபாரந் தவிர்த்தார் வந்தார்
அருமறையின் பொருளனைத்தும் விரித்தார் வந்தார்
அஞ்சினநீ யென்னையடை யென்றார் வந்தார்
தருமமெலாந் தாமாகி நிற்பார் வந்தார்
தாமேநம் வினையனைத்துந் தவிர்ப்பார் வந்தார்
பரமெனது நீபுலம்ப லென்றார் வந்தார்
பார்த்தனுக்குத் தேரூர்ந்தார் வந்தார் தாமே 8

உரை:— தருமன் விட — தர்மபுத்திரன் அனுப்ப, தாம் தூது போனார் வந்தார் — (துர்யோதநனிடம்) தாமே தூது சென்றவர் வந்தார், தரணி பொறா — பூமியால் பொறுக்கமுடியாத, திண பாரம் — (ஆசரித விரோதிகளாகிய) வலிய சுமையை, தவிர்த்தார் வந்தார் — ஒழித்தவர் வந்தார், அரு மறையின் பொருள் அனைத்தும — அருமையான வேதத்தின் அர்த்தம் முழுவதையும், விரித்தார் வந்தார் — (ஸ்ரீ கீதையின்வாயிலாக) விளக்கியவர் வந்தார்; அஞ்சின நீ—(வேறு உபாயம் அநுஷ்டிக்கமுடியாது) அஞ்சின நீ, என்னை அடை என்றார் வந்தார் — என்னைச் சரணமடைவாயாக என்று கூறியவர் வந்தார்; தருமம் எலாம் — ஸகல உபாயங்களும், தாமாகி நிற்பார் வந்தார் — தாமேயாகி நிற்பவர் வந்தார், நம் வினை அனைத்தும் — நம் கர்மங்கள் முழுவதையும், தாமே தவிர்ப்பார் வந்தார் — தாமே தொலைப்பவர் வந்தார், பரம எனது — (உனக்குப் பலனைக் கொடுத்துக் காக்கவேண்டிய) பொறுப்பு என்னுடையது, நீ புலம்பல் — நீ வருந்தாதே, என்றார் வந்தார் — என்று உறுதிகூறியவர் வந்தார், பார்த்தனுக்கு — அர்ஜுநனுக்கு, தேரூர்ந்தார் வந்தார் — தேரை ஓட்டியவர் வந்தார். (தாம — அசை)
8

277 வஞ்சனைசெய் பூதனையை மாய்த்தார் வந்தார்
மல்லாமத் கரிமாள மலைந்தார் வந்தார்
கஞ்சனைப்போர் கடுஞ்சினத்தாற் கடிந்தார் வந்தார்
கணணுதன்முன் வாணன்றோள் கழித்தார் வந்தார்

வெஞசொறற வீடுகொடுத துகநதா வநதா
விலககிலலா வழிநடதத விரைந்தா வந்தா
பஞ்சவரைப பலவகையுங காததா வந்தா
பாஞசாலி குழனமுடிததா வநதா தாமே. 9

உரை — வஞ்சனை செய பூதனையை — (தமமைக கொலல) வஞசனைசெயதுவநத பூதனையை, மாயததா வநதா — கொன றவா வநதா ; மலலா — (முஷடிகன முதலிய) மலலரும, மதகரி — (குவலயாபீடமெனனும) மதயானையும, மாள — மாணடுபோகுமபடி, மலைநதா வநதா — போாசெயதவா வநதா, கஞசனை — கமஸனை, கடும சினததால — கொடிய கோபததால, போா — சணடையில, கடிநதா வநதா — கொனறவா வநதா, கணநுதலமுன் — நெறறிக கண படைதத சிவனுககுமுனனே, வாணன் தோள — பாணாஸுர னுடைய (ஆயிரம) தோளகளை, சழிததா வநதா — அறுததவர் வநதா, வெம சொல தர — (சிசுபாலன) கொடிய (நிநதைச) சொற களைக கூற, வீடு கொடுதது—(அவனுககு) மோக்ஷததைக கொடுதது, உகநதா வநதா — (அதனால) மகிழநதவா வநதா, விலககு இல்லா வழி — தடையிலலாத (அாசசிராதி) மாாககததாலே, நடதத விரைந தா வந்தா — (சேதநனை) நடதத விரைபவா வநதா, பஞசவரை — பஞசபாணடவாகளை, பலவகையும் — பல வழிகளிலும, காத்தா வநதா — ரகூஷிததவா வநதா, பாஞசாலி குழல முடித்தா வநதா — தெரௌபதியின, (சபததினபடி துாயோதனனைக கொலவிதது அவளுடைய) கூநதலை முடிககச்செயதவா வநதா (தாம - அசை) 9

278 அததிகிரி யருளாளப பெருமாள வந்தா
ரானைபரி தேரினமே லழகா வநதா
கசசிதனிற கண்கொடுககும் பெருமாள வநதா
கருதவரந தருதெயவப பெருமாள வநதா
முததிமழை பொழியுமுகில வணணா வநதா
மூலமென வோலமிட வல்லாா வந்தா
முததரவே திககுளளே யுதிததா வநதா
மும்பாதொழுங கழலுடையாா வநதா தாமே. 10

இதன உரையை 224-வது பாசுரததிலே காணக 10

279 மறைத்தலையி லிசையெழுத்தில வணங்கும் வாக்கின்
மந்திரத்தி னாலெழுத்தாந் திருநா மத்தி
னிறைத்திலகு வேற்றுமையி லிரண்டா மொன்றி
னெடுமாலன் கீதையெலா நிறைந்த சோலலி
லுறைத்தவர்கண் டுரைத்தபொரு ளான வெல்லா
முயாவிரத வருளாளப பெருமா டேசின
றிறத்திலியை திருச்சின்ன மாலை பத்துஞ்
செவிக்கினிதாஞ் சிற்றின்ப மிசையா தார்க்கே 11

உரை:— மறைத்தலையில இசை — வேதங்களின் (ஆரம்பத்திலும்) முடிவிலும் அமைந்த, எழுத்தில — எழுத்தாகிய பரணவத்திலும், வணங்கும் வாக்கில — வணக்கத்தைக் கூறும் சொல்லாகிய நமச்சப்தத்திலும், மந்திரத்தில நாலு எழுத்து ஆம் திருநாமத்தில — திருமந்த்ரத்திலுள்ள நான்கு அக்ஷரங்கள் அமைந்த நாராயணசப்தத்திலும், நிறைத்து இலகு — (அந்த நாராயணசப்தத்தைப்) பூர்த்திசெய்து பரகாசிக்கின்ற, வேற்றுமையில — நான்காமவேற்றுமையிலும், இரண்டு ஆம ஒன்றில — இரண்டு பாகமாயிருந்து ஒரு மந்த்ரமாயுள்ள த்வயத்திலும், நெடுமாலதன — எமபெருமானுடைய (ஸௌந்தியாகிய), கீதை — ஸ்ரீ பகவத்கீதையிலுள்ள, எலாம் நிறைந்த — ஸார்வார்த்தங்களும் தன்னுள் அடங்கப்பெற்ற, சோலலில — சரமசலோகத்திலும், உறைத்தவர் — நன்கு பரிசயம் செய்த ஆசார்யர்கள், கண்டு — (தாங்கள்) அறிந்து, உரைத்த — (நமக்கும்) உபதேசித்த, பொருளான எல்லாம் — அர்த்தங்கள் எல்லாவற்றையும், உயா விரதம் — (சரணாகத ரக்ஷணமெனனும்) உயர்ந்த வரத்தைக்கொண்டுள்ள, அருளாளப பெருமாள — பேரருளாளப்பெருமாளுடைய, தேசின் திறத்தில இயை — பெருமையின விஷயத்திலே இயை (தத்துரைக்கின்ற) திருச்சின்னமாலை — திருச்சின்னமாலையாகிய, பத்தும் — பத்துப பாசுரங்களும், சிறு இன்பம் — அற்பமான (ஸம்ஸார) ஸுகத்தை, இசையார்தார்க்கு — (விரும்பி) அங்கீகரிக்காதவர்களுக்கு, செவிக்கு இனிது ஆம — காதுக்கு மதுரமாயிருக்கும்.

இப்பிரபந்தம பேரின்பமான பகவதநுபவத்தில கருத்துடையோர்க்கே ரஸிப்பதாகும

11

**இப்பிரபந்தத்திலுள்ள விசேஷார்த்தங்களின் சுருக்கம்.**

1-வது, 2-வது பாசுரங்கள் — இவை திருமந்த்ரத்தில உள்ள பரணவத்தின அகாரார்த்தத்தைக் கூறுவன முதற பாசுரத்தில் அனைத்தை

யும படைததல முதலிய தனமைகளால காரணதவமும, நிதயஸூரிகளால்
அநுபவிககபபடுதல முதலியவறறாலும இரணடாமபாசுரததில வேததைதக்
காததல முதலியவறறாலும ரக்ஷகதவமும விளககபபடடன

3-வது பாசுரம் — ‘அனைததுககும அதிபதியாய’ என்ற தொடர்,
எலலாம எமபெருமானுககுச சேஷம என்ற பொருளைக காடடி அகாரததின்
மீது ஏறியழிநத நானகாமவேறறுமையுருபின பொருளைககூறும ‘திரு
மகளை விடாதார’ எனனுமது உகாரததின அாததததைடம, ‘தேசொததார்
இலலார’ எனனுமது அவனுககே சேஷமெனற மறறோர உகாரததத்
தையும சொலலும ‘கினைகக தநதார’ ‘நலேசினற ினைநதார’
எனனும தொடாகள அவனளிதத ஜஞானததையடையனாய ஸவயமபரகாச
ஞய நிதயனான ஜீவனுடைய ஸவரூபததைக கூறும ‘எனககிடா .’
எனுநதொடரால பரணவததின அாததம முழுதும கூறபபடடதாம

4-வது பாசுரம் — இது நமசசபதாாததததைக கூறும ‘நாம்
வணஙக’ எனறதால நமஸகாரமெனற பொருளும, ‘அடைககலம .’
எனறதால பரஸமாபபணமெனற பொருளும, ‘நாம அறுததார’ என்ற
தால அஹஙகாரமமகாரஙகள ஒழிதல என்ற அாததமும, ‘நமககு வைத
தார’ எனறதால சேதநனுககு யாதையும பறறச சேஷிதவமிலலையென்ற
அாததமும, ‘அனபாககடைததார’ எனறதால அாததததால பெறும பாக
வத சேஷதவமும, ‘திணசரண’ எனறதால உபாயமாநதனமையம, ‘வினை
யனைததும ’ எனறதால அநிஷடம்கழிதல என்ற பொருளும,
‘தமககேயாய’ எனறதால சேதநாககுக கைஙகாயததிலும ஸவதநதர
ஞயச செயயுநதனமையும பலனைப பெறுநதனமையும இல என்ற
பொருளும கூறபபடடன

5-வது பாசுரம் — இது நாராயண சபதததின அாததததைக்
கூறும ‘உலகு உமிழநதார’ எனறதால அனைததுககும ஆதாரமாந்
தனமையும காரணமாநதனமையும, ‘உலகுடமபாய ’ எனறதால்
பரபஞசததிறகும ஈசுவரனுககும உளள சரீர ஆதமபாவமும, ‘அலைகடலாய்
’ எனறதால இரணடு விபூதிகளையுடைய தனமையும, ‘திலகமெனும்
’ ‘செழுஙகுணஙகள ’ எனறதால முறையே திவயமஙகளவிக்ர
ஹம திருககலயாணகுணஙகள ஆகிய பொருளகளும, ‘இலகு சுடா முழு
லம’ எனறதால ஜஞாந ஆநநதஸவரூபமாய ப்ரகாசிககினற திவ்
யாதமஸவரூபமும, ‘கதியானா’ எனறதால தானே உபாயமாகவும
பலனுகவும நிறறல என்ற அாததமும கூறபபடடன

6-வது பாசுரம் — இதில நாராயண சபதததின மீதுளள நானகாம
வேறறுமையுருபின பொருளான கைஙகாயம கூறபபடுகினறது உபாயததை
அநுஷடிதத சேதநனுககுக காமஙகளை ஒழிததல் முதல, பிரியாமற காததல்
வரை உளளனவெலலாம பலனுடைய வகுபபிலே சேருவனவாகும

7-வது பாசுரம் — இது தவயததின பொருளைககூறும ‘அகல
லா’ எனனுமது ஸ்ரீ சபதததினமேலுளள மதுபவிகுதிககும, ‘அடி
இரணடுமாறுக’ எனுநதொடா ‘சரணௌ சரணம’ எனனும பாகததிறகும
பொருளாகும ‘புகலிலலார’ எனபது ‘பரபதயே’ என்ற வினைமுறறி
லுளள தனமைவிகுதியின பொருளையும, ‘புகலாகும’ எனபது மறற

ஸ்ரீ:

# பன்னிருநாமம் - உரை

ஸ்ரீமாந் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

பொதுத்தனியன்

ராமாநுஜ தயாபாத்ரம் . . . . . . . ..செப்பிகழ் ॥

சீரொன்று . .. வாழ்வு

---

சிறப்புத்தனியன்—உரை

பன்னிரு நாமந திருவத்தி யூர்ப்பரன் பாதமென்று
நன்னிற நாமம் படைதிக்கி யாவையு நாமறியத்
தென்னந தமிழ்த்தொடைச் சீரார் கலித்துறை யோதியீந்தான்
மின்னுறு நூலமர் வேங்கட நாதனந தேசிகனே

**மின் உறு** — *ப்ரகாசம் பொருந்திய,* **நூல் அமர்** — *யஜ்ஞோபவீதம் பொருந்திய,* **வேங்கடநாதன்** — *தூப்புல் திருவேங்கடமுடையானாகிய,* **நம் தேசிகன்** — *நம் ஆசார்யன்,* **பன்னிரு நாமம்** — *பன்னிரண்டு ஊர்த்வ புண்ட்ரங்களும்,* **திருவத்தியூர்ப்பரன்** — *பெருமைபொருந்திய ஹஸ்திகிரிக்கு நாதனான பேரருளாளனுடைய,* **பாதம் என்று** — *திருவடி (வடிவங் கொண்டன) என்று (நினைத்து),* **நல் நிறம்** — *(அந்த அந்த புண்ட்ரங்களின் தேவதையாகிய எம்பெருமானுடைய) சிறந்த நிறம்,* **நாமம்** — *திருநாமம்,* **படை** — *ஆயுதம்,* **திக்கு** — *(வவிக்கும்) திசை (ஆகிய),* **யாவையும்** — *அனைத்தையும்,* **நாம் அறிய** — *நாம் அறியும்படி,* **தென்னந்தமிழ்** — *தெற்கே வழங்கும் அழகிய தமிழிலாகிய,* **தொடை**—*பாட்டுக்களுள்,* **சீர் ஆர்**—*சிறப்புப் பொருந்திய,* **கலித்துறை**— *கட்டளைக்கலித்துறையென்னும் பாவினத்தால்,* **ஓதி ஈந்தான்** — *அருளிச்செய்து (நாம் அநுஸந்திக்கத்) தந்தருளினான்*

கார்கொண்ட மேனியன் பாதாம் புயத்தைக் கருத்திருத்தி
யேர்கொண்ட கீர்த்தி யிராமா னுசன்ற னிணையடிசேர்
சீர்கொண்ட தூப்புற் றிருவேங்க டாரியன் சீர்மொழியை
யார்கொண்டு போற்றினு மம்மால் பதத்தை யடைவிக்குமே.

ஸ்ரீ:

# பன்னிருநாமம் - உரை

ஸ்ரீமாந் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

பொதுத்தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் . ஜ்ஞாநவைராக்ய பூஷணம் ।
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ॥

ஸ்ரீமான் ... வாழ்வு

---

சிறப்புத்தனியன்—உரை

பன்னிரு நாமந் திருவத்தி யூர்ப்பரன் பாதமென்று
நன்னிற நாமம் படைதிக்கி யாவையு நாமறியத்
தென்னந் தமிழ்த்தொடைச் சீரார் கலித்துறை யோதியீந்தான்
மின்னுறு நூலமர் வேங்கட நாதனந் தேசிகனே

மின் உறு – ப்ரகாசம் பொருந்திய, நூல் அமர் – யஜ்ஞோபவீதம் பொருந்திய, வேங்கடநாதன் – தூப்புல் திருவேங்கடமுடையானாகிய, நம் தேசிகன் – நம் ஆசார்யன், பன்னிரு நாமம் – பன்னிரண்டு ஊர்த்வ புண்ட்ரங்களும், திருவத்தியூர்ப்பரன் – பெருமைபொருந்திய ஹஸ்திகிரிக்கு நாதனான பேரருளாளனுடைய, பாதம் என்று – திருவடி (வடிவங் கொண்டன) என்று (நினைத்து), நல் நிறம் – (அந்த அந்தப் புண்ட்ரங்களின் தேவதையாகிய எம்பெருமானுடைய) சிறந்த நிறம், நாமம் – திருநாமம், படை – ஆயுதம், திக்கு – (வலிக்கும்) திசை (ஆகிய), யாவையும் – அனைத்தையும், நாம் அறிய – நாம் அறியும்படி, தென்னந்தமிழ் – தெற்கே வழங்கும் அழகிய தமிழினாலாகிய, தொடை–பாட்டுக்களுள், சீர் ஆர்–சிறப்புப் பொருந்திய, கலித்துறை– கட்டளைக்கலித்துறையென்னும் பாவினத்தால், ஓதி ஈந்தான் – அருளிச்செய்து (நாம் அநுஸந்திக்கத்) தந்தருளினான்

கார்கொண்ட மேனியன் பாதாம் புயத்தைக் கருத்திருத்தி
யேர்கொண்ட கீர்த்தி யிராமா னுசன்ற னிணையடிசேர்
சீர்கொண்ட தூப்புற் றிருவேங்க டாரியன் சீர்மொழியை
யார்கொண்டு போற்றினு மம்மால் பதத்தை யடைவிக்குமே

கார் கொண்ட மேனியன் — *மேகத்தை ஒத்த திருமேனியை யுடைய பேரருளாளனுடைய,* பாதாம்புயத்தை — *திருவடித்தாமரைகளை,* கருத்து இருத்தி — *மனத்தில் உறுதியாகத் தியானித்து,* ஏர்கொண்ட — *அழகிய,* சீர்த்தி — *புகழையுடைய,* இராமானுசன்றன் — *ஸ்ரீ பாஷ்யகாரருடைய,* இணையடிசேர் — *இரண்டு திருவடிகளையும் சேர்ந்த,* சீர்கொண்ட — *பெருமைபெற்ற,* தூப்புல் திருவேங்கடாரியன் — *தூப்புல் திருவேங்கட முடையானுடைய,* சீர் மொழியை — *சிறந்த ஸ்ரீஸூக்தியை,* கொண்டு — *மனத்திற்கொண்டு,* ஆர் போற்றினும் — *யார் துதித்தாலும்,* அம் மால் பதத்தை — *அவ்வெம்பெருமானுடைய திருவடிகளை,* அடைவிக்கும் — (*அந்த ஸ்ரீஸூக்தி*) *பெறுவிக்கும்*

[விஷயச்சுருக்கம்]

*இப்பிரபந்தமும் பேரருளாளன் விஷயமே*

*ஸ்ரீவைஷ்ணவர்கள் தம் சரீரத்தில் தினந்தோறும் பன்னிரண்டு திருமண் காப்புக்களைத் தரித்துக்கொள்ளல் மிகவும் அவசியமாகும் கேசவன் முதல் தாமோதரன்வரையில் உள்ள 12 திருநாமங்களைச்சொல்லி அந்தந்தத் திருமண் காப்புக்களில் அவ்வவ்வெம்பெருமான்களை ஆவாஹனம் செய்யவேண்டும் இப்பிரபந்தத்தில் அவ்வெம்பெருமான்களின் திருமேனிநிறம், அவர்கள் அணிந்திருக்கும் ஆயுதங்கள், அவர்கள் தலைவராயிருக்கும் திசை, நம் சரீரத்தில் புண்டரரூபமாய் அவர்கள் வசிக்கும் பாகம் இவற்றை ஸ்ரீதேசிகன் வெளியிட்டிருக்கிறார் புண்ட்ரம் தரிக்கும்போது இப்பிரபந்தம் அவசியம் அனுஸந்திக்கவேண்டியதாகும்*

---

*இப்பிரபந்தம் முழுவதும் கட்டளைக்கலித்துறையால் அமைந்ததாம்*

280 கேசவ னயநின்று கீழைத் திசையிலு நேர்நுதலும்
தேசுடை யாழிக ளனகுடன் செம்பசும் பொன்மலைபோல்
வாசி மிகுத்ததனை மங்காமற் காக்கு மறையதனா
லாசை மிகுத்த வயனமக வேதியி லற்புதனே. 1

உரை:— மறையதனால — *வேத* (*ராத்ர நிசசய*) *த்தால்,* ஆசை மிகுத்த அயன — (*பேரருளாளனே பரன் என்று தேறி அவனிடம்*) *அன்பு மிகுதியாகப்பெற்ற பரஹ்மாவினுடைய,* மக வேதியில்—*யாகவேதியில* (*அவதரித்த*), அற்புதன்—*அதிசயச்செயல்களையுடைய பேரருளாளன்;* கேசவனய — *கேசவனென்னும் திரு*

நாமத்தையுடையனுய, கீழைத் திசையிலும் நெற்றியிலும் — கிழக்குத் திசையிலும் (பாகவதர்களின்) நெற்றியிலும், தேசு உடை ஆழிகள் நான்குடன் — பரகாசமுள்ள சக்கராயுதம் நான்குடன், செம் பசும் பொன் மலைபோல — சிவந்த மாற்றுயர்ந்த பொன்னினுலமைந்த மலை போல, நின்று—நிலைபெற்றுநின்று, வாசி மிகுத்து — சிறப்பு மிகுந்து, என்னை மங்காமல் காக்கும் — என்னைக் கெட்டுப்போகாமல் காப்பான்.

தேவதை — கேசவன், நிறம் — பொன், ஆயுதம் — நான்கு சக்கரம், திசை — கிழக்கு, புண்டரஸ்தானம் —நெற்றி

வத்தாஸ்ஸ்ரூ ஈஶாரி கெஶவம் கனகஜ்ரூஹமு । 1

281 நாரணனுயநல் வலம்புரி நாலு முகந்தெடுத்து
மூரணி மேக மெனவே யுதரமு மேற்குநின்று
மாரண நூற்ந் தருளா லடைக்கலங் கொண்டருளும்
வாரண வெற்பின் மழைமுகில் போனின்ற மாயவனே.

உரை:— வாரணவெற்பில் — ஸ்ரீஹஸ்திகிரியில், மழை முகில் போல — குளிர்ந்த மேகம்போல, நின்ற மாயவன் — நிற்கின்ற அதிசயசெயல்களையுடைய பேரருளாளன், நாரணனுய — நாராயணனுயிருந்து, நல வலம்புரி நாலும் — சிறந்த வலம்புரிச்சங்கம் நான்கையும், உகந்து எடுத்தும்—மகிழ்ந்து(கையில்)ஏந்தியும், ஊர் அணி மேகம் என — (நிறத்தில்) சஞ்சரிக்கின்ற அழகிய மேகம் என்னும்படியாக, உதரமும் மேற்கும் நின்றும்— வயிற்றிலும் மேற்குத்திசையிலும் நின்றும், ஆரண நூல் தந்து — வேதமாகிய சாஸ்திரத்தைப் பிரவர்த்திப்பித்து, அருளால் — கருணையால், அடைக்கலம் கொண்டருளும் — (என்னைக்)காக்கப்படவேண்டிய வஸ்துவாக ஏற்றுக்கொண்டருள்வான

தேவதை.— நாராயணன், நிறம் — நீலம், ஆயுதம் — நான்கு சங்கம், திசை — மேற்கு, புண்டரஸ்தானம் — வயிறு

நாராயணம் வநஶ்யாமம் வத்தாஸ்ஸ்ரூ ஈஶாரிஹஹமு ॥ 2

282 மாதவ நாமமும் வான்கதை நான்கு மணிநிறமு
மோது முறைப்படி யேந்தி யுரத்திலு மேலுமலகிப
போதலா மாதுடன் புந்தியி லன்பாற புகுந்தளிக்குந்
தூதனு நாதனு மாயதோல் லத்தி கிரிச்சுடரே. 3

284 விட்டு வலவயிற றின்கண் வடக்கும் விடாதுநின்று
மட்டவிழ் தாமரைத் தாது நிறங்கொண்ட மேனியனைத்
தொட்ட கலப்பைக ளீரிரண் டாலுந் துயரறுக்குங் 5
கட்டெழிற் சோலைக் கரிகிரி மேனின்ற கற்பகமே.

உரை:— கட்டு எழில் சோலை — *மிக்க அழகுள்ள சோலை சூழ்ந்த*, கரிகிரிமேல் நின்ற — *ஸ்ரீ ஹஸ்திகிரியின்மேல் எழுந்தருளியுள்ள*, கற்பகம் — *கல்பகவ்ருக்ஷம் போன்ற பேரருளாளன*, விட்டு — *விஷ்ணுவாக இருந்து*, வலவயிற்றின் கண் — *வயிற்றின் வலப்புறத்திலும்*, வடக்கும் — *வடதிசையிலும்*, விடாது நின்று — *நீங்காது தங்கி*, மட்டு அவிழ — *தேன் ஒழுகுகின்ற*, தாமரைத் தாது நிறம் கொண்ட மேனியனை — *தாமரையினது மகரந்தத்தின் நிறத்தைக் கொண்ட திருமேனியுடையனை*, தொட்ட கலப்பைகள் ஈர் இரண்டாலும் — *(கையில்) ஏந்திய கலப்பைகள் நான்கினாலும்*, துயர் அறுக்கும் — *(என்) துன்பத்தைப் போக்குவான்.*

தேவதை.— விஷ்ணு, *நிறம்* — தாமரைத்தாதின் நிறம் (பொன்னிறம்), *ஆயுதம்* — நான்கு கலப்பை, *திசை*.— வடக்கு; *புண்ட்ர ஸ்தாநம்* — வயிற்றின் வலப்புறம். 5

விஷ்ணும் உதரதக்ஷிணம் ஹலீ வஹந் வடக்கிலும் ஸம்நிஷேத் ।

285 மதுசூ தனனென வலபுயந் தென்கிழக் கென்றிவற்றிற்
பதியா யிருந்துபொன் மாதுறை பங்கய வண்ணனுமாய்
முதுமா வினைக ளறுக்கு முயலங்க ளீரிரண்டான்
மதுவா ரிளம்பொழில் வாரண வெற்பின் மழைமுகிலே.

உரை:— மது ஆர் — *தேன் நிறைந்த*, இளம் பொழில் — *இளஞ்சோலை சூழ்ந்த*, வாரண வெற்பில் — *ஸ்ரீ ஹஸ்திகிரியில் (எழுந்தருளியுள்ள)*, மழை முகில — *வர்ஷாகால மேகம்போன்ற பேரருளாளன*, மதுசூதனன் — *மதுஸூதநனாக (இருந்து)*, என் வலபுயம் என்று — *என் வலது புஜமும்*, தென் கிழக்கு (என்று)— *தென்கிழக்கும்* ( *ஆகிய* ), இவற்றில் — *இந்த ஸ்தாநங்களில்*, பதியாய் இருந்து — *லக்ஷ்மிப் பிராட்டி வஸிக்கும் ஸ்தாநமாய் இருந்து*, பொன் மாது உறை — *லக்ஷ்மிப் பிராட்டி வஸிக்கின்ற*, பங்கய வண்ணனுமாய் — *தாமரையின் நிறமுடையவனாய்*, முயலங்கள் ஈர் இரண்டால் — *உலக்கைகள் நான்கினால்*, முது மா வினைகள் — *(என்னுடைய) அநாதியான பெரிய கர்மங்களை*, அறுக்கும் — *ஒழிப்பான்.*

*தேவதை* — **மதுஸூதநன்**, *நிறம்*.— **தாமரை**, *ஆயுதம்* — **நான்கு கலப்பை**, *திசை* — **தென்கிழக்கு**, *புண்ட்ரஸ்தானம்* — **வலது புஜம்**

ஶ்ரீஹஸ்திஶைல ... (Sanskrit/Grantha verse line) ॥ 6

286 திரிவிக் கிரமன் றிகழத்தீ நிறத்தன் றெளிவுடைவா
ளுருவிக கரங்களி லீரிரண் டேந்தி வலககழுததுஞ
செருவிக கிரமத் தரக்காதிக ஞ்சிறந தாளுமிறை
மருவிக கரிகிரி மேல்வரந தந்திடு மன்னவனே. 7

உரை .— கரிகிரிமேல மருவி — *ஸ்ரீஹஸ்திகிரியின்மீது பொருந்தி*, வரம் தந்திடும — (*வேண்டிய*) *வரத்தைக் கொடுத்தருள்கின்ற*, மன்னவன் இறை — *சக்கரவர்த்தியாகிய பேரருளாளன்*, திரிவிக்கிரமன் — *திரிவிக்ரமனாக இருந்து*, திகழ தீ நிறத்தன — *ஜ்வலிக்கின்ற அக்நிபோன்ற நிறமுடையனாய*, கரங்களில — *திருக்கைகளில*, தெளிவு உடை — *பரிசுத்தம் பொருந்திய*, வாள ஈரிரண்டு — *வாள நான்கையும*, உருவி ஏந்தி — *உருவித் தாங்கி*, வலககழுத்தும் — *கழுத்தின வலப்புறத்திலும*, செரு விககிரமத்து — *போரில வலிமையைக் காட்டுகின்ற*, அரககா திககும் — *ராக்ஷஸர்களுடைய திசையாகிய நைருதிதிக்கிலும*, சிறநது ஆளும் — *சிறந்து (நின்று) ரக்ஷிப்பவன*.

*தேவதை* — **த்ரிவிக்ரமன்**, *நிறம்* — **அக்நி**, *ஆயுதம்* — **நான்கு வாள்**, *திசை*.— **தென்மேற்கு**, *புண்ட்ரஸ்தானம்* — **கழுத்தின் வலப்புறம்**

(Sanskrit/Grantha verse line) । 7

287 வாமன னென்றன்வா மோதர மும்வாயு வின்றிசையுந
தாம மடைநது தருண வருககு னிறததனுமாய்ச்
சேம மரககலஞ் செம்பவி யீரிரண் டாறறிகழு
நாமங்கை மேவிய நான்முகன் வேதியி னம்பரனே. 8

உரை:— நாமங்கை மேவிய — *ஸரஸ்வதியோடு பொருந்திய*, நான்முகன் வேதியில — *ப்ரஹ்மாவின யாகவேதியில* (*அவதரித்த*), நம் பரன் — *நம ஸர்வேச்வரனான பேரருளாளன*, வாமனன்—*வாமநனாய*, என்றன் வாமோதரமும் — *என இடவயிற்றையும்*, வாயுவின் ... *புவின திசையான வடமேற்கையும*, தாமம் அடைந்து— ... *காண்டு*, தருண அருககன் நிறத்தனுமாய — *இளம ... நிறமுடையவனாய*, சேமமரககலம் — (*அடியார்களை ... ததிலிருநது கரை சேர்த்து*) *க்ஷேமத்தைக்*

கொடுக்கும் ஓடமாக (இருந்து), செம் பவி ஈர இரண்டால் — சிவந்த வஜ்ராயுதம் நான்கினோடு, திகழும் — ப்ரகாசிப்பான.

தேவதை.— வாமநன்; நிறம்.— இளம் ஸூர்யன், ஆயுதம்:— நான்கு வஜ்ரம், திசை:— வடமேற்கு, புண்ட்ரஸ்தாநம்:— வயிற்றின் இடது புறம்.

வாமநம் வாமபார்ஸ்வேது வஜ்ரம் விஷ்ணுவே ॥ 8

288 சீரார சிரீதர ஞயச்சிவன் றிக்கு மிடப்புயமு
மேரா ரிடங்கோண டிலங்குவெண் டாமரை மேனியனைப்
பாராய பட்டய மீரிரண் டாலும் பயமறுக்கு
மாரா வமுததி மாமலை மேனின்ற வச்சுதனே. 9

உரை:— ஆரா அமுது — (எவ்வளவு அனுபவிக்கதாலும்) தெவிட்டாத அமுதமாகவுள்ளவனும், அத்திமாமலைமேல்—ஸ்ரீஹஸ்தி மஹாகிரியின் மேல், நின்ற — நிலைபெற்றவனும், அச்சுதன் — (அடியவர்களை) கைவிடாதவனுமான பேரருளாளன், சீர் ஆர சிரீதரனை — சிறப்பு நிறைந்த சிரீதரனை, சிவன் திக்கும் — சிவனுடைய திசையாகிய வடகிழக்கையும், இடப புயமும் — இடப புஜத்தையும், ஏர் ஆர இடம் கொண்டு — அழகு பொருந்திய ஸ்தானமாகக் கொண்டு, இலங்கு வெண் தாமரை மேனியனை — ப்ரகாசிக்கின்ற வெண்மையான தாமரையின் நிறமுடையவனைப், பார் ஆய — பருத்த, பட்டயம் ஈர் இரண்டாலும் — பட்டயம் (எனனும் ஒருவகை வாள்) நான்கினாலும், பயம் அறுக்கும் — (என) பயத்தைப் போக்குவான.

தேவதை— ஸ்ரீதரன்; நிறம்:— வெண்தாமரை; ஆயுதம்:— நான்கு பட்டாக்கத்தி; திசை:— வடகிழக்கு, புண்ட்ரஸ்தாநம்:— இடது புஜம்

ஸ்ரீதரம் வாமபாஹௌ து வஜ்ரம் ஷட்பூஷணாயவே । 9

289 என்னிடி கேச னிறைகீ ழிடக்கழுந் தென்றிவற்றி
னன்னிலை மின்னுரு வாய்நாலு முறகரங் கொண்டளிக்கும்
பொன்னகில் சோநதலைக் குமபுனல் வேகை வடகரையிற்
றென்ன னுகந்து தொழுநதேன வேதியர் தெய்வமொன்றே.

உரை:—பொன் அகில் சோந்து—பொன்னையும் அகிற்கட்டையையும் கொண்டு, அலைக்கும் புனல் — அலைமோதுகின்ற ஜலத்தையுடைய, வேகை வடகரையில் — வேகவதிநதியின் வடகரையில், தென்னன் உகந்து தொழும் — பாண்டியராஜன் மகிழ்ந்து வணங்குகின்ற, தென

உரை — செம் பொன் திரு மதிள் சூழ் — சிவந்த பொன்னா லாகிய அழகிய மதிள் சூழ்ந்த, சிந்துராசலச் சேவகன் — ஹஸ்திகிரி யில் (உள்ள) மஹாவீரனை பேரருளாளன், எம் பற்பநாபனும் — எம்முடைய பத்மநாபனுமாகி, என் பின் — என்னுடைய பின்பாகத் தையும், மனம் — மனஸ்ஸையும், பற்றி மன்னி நின்று — பற்றிக் கொண்டு ஸ்திரமாய் நின்று, வெம் பொன் — உஷ்ணமான சிவந்த ஆயிரம் கதிரவன் — ஆயிரம் ஸூர்யனோடு, மேவிய மெய் உருவாய் — ஒப்பான திருமேனி நிறமுடையனாய், அம் பொன் கரங்களில் — அழகிய சிவந்த திருக்கைகளில், ஐம்படை கொண்டு — ஐந்து ஆயுதங் களை தரித்து, அஞ்சல் என்று — அஞ்சாதே என்று (கூறி), அளிக்கும் — காப்பான

தேவதை :— பத்மநாபன், நிறம் :— ஸூர்யன்; ஆயுதம் :— சக்கரம், சங்கம், வாள், வில், தண்டு என்னும் ஐந்து ஆயுதங்கள், ஸ்தானம்:- மநஸ்; புண்ட்ரஸ்தானம் — பின்புறம்

வஞாயாமும் வஜநாஸம் ஹுணரீஜூகூபொவிஷ்டு ॥ 11

291 தாமோ தரனென்றன் றுமங்க ளுலு கரங்களிற்கொண்
டாமோ தரமென வாகத்தி னுட்புறம் பிற்கழுத்துந்
தாமோ ரிளங்கதி ரோனென வென்னு ளிருளறுக்கு
மாமோக மாற்று மதிளத்தி யூரின் மரகதமே. 12

உரை :— மா மோகம் மாற்றும் — பெரிய அஜ்ஞானத்தைப் போக்குகின்ற, மதிள் அத்தியூரில் — மதிள்சூழ்ந்த ஹஸ்திகிரியில் (உள்ள), மரகதம் — மரகதரத்நம்போன்ற பேரருளாளன், என்றன் தாமோதரன் — என் தாமோதரனாகி, நாலு தாமங்கள் — நான்கு பாசங் களை, கரங்களில் கொண்டு — திருக்கைகளில் ஏந்தி, தரம் ஆமோ என — (இந்தப்) பெருமை (மற்றவருக்கு) உண்டோ என்னும்படி, ஆகத்தின் உள் புறம் — சரீரத்தின் உள்ளேயும் வெளியிலும், பின் கழுத்தும் — கழுத்தின் பின்புறத்தும் (நின்று), தாம் ஓர் இளம் கதிரோன் என — தான் ஓர் இளம் ஸூர்யனென்னும்படி (நிற முடையனாயிருந்து), என் உள் இருள் அறுக்கும் — எனது மனத்துள் (இருக்கும் அஜ்ஞானமாகிய) இருளைப் போக்குவான.

தேவதை — தாமோதரன், நிறம் — பாலஸூர்யன், ஆயுதம் — தான்து பாசம், இடம் — சரீரத்தின் உட்புறமும் வெளிப்புறமும்; புண்டரஸ்தானம் — கழுத்தின் பின்புறம்

ஓம் தாமோதராய நம: ... 12

292 கத்தித் திரியுங் கலைகளை வெல்லுங் கருத்திலவைத்துப
பத்திக் குறுதுணை பன்னிரு நாமம் பயில்பவர்க்கு
முத்திக்கு மூல மெனவே மொழிந்தவிம் மூன்றுநான்கு
தித்திக்கு மெங்க டிருவத்தி யூரரைச் சேர்பவர்க்கே. 13

உரை:— கத்தித் திரியும் — (ஸாரமில்லாத ஆடம்பரத்தோடு) கத்திக்கொண்டே திரிகின்ற, கலைகளை — (பயனற்ற) வித்யைகளை, வெல்லும் — (வாதத்தில்) ஜயிக்கக்கூடிய (உறுதியையுடைய), கருத்தில — மனதில், பத்திக்கு உறு துணை — (பகவத்) பக்திக்குத் தக்க ஸாதனமான, பன்னிரு நாமம் — (கேசவன் முதலிய) பன்னிரண்டு திருநாமங்களையும், வைத்து — ஊன்றி அநுஸந்தித்து, பயில்பவர்க்கு — பரிசயம்செய்பவருக்கு, முத்திக்கு மூலம் — மோக்ஷத்திற்குக் காரணம் (ஆகும்), என மொழிந்த — என்னும் படி கூறப்பட்ட, இம்மூன்று நான்கும் — இந்தப் பன்னிரண்டு பாசுரங்களும், எங்கள் திருவத்தியூரரைச் சேர்பவர்க்கே — எங்கள் பேரருளாளரை ஆச்ரயித்த பாகவதர்களுக்கே, தித்திக்கும் — (உள்ளத்திற்கு) இன்பம்கொடுப்பனவாகும்.

பேரருளாளன் திருவடிகளில் ஈடுபட்ட பாகவதர்க்குப் பரம போக்யமான இப்பிரபந்தத்தை அநுஸந்திப்பவர் பகவத்பக்தி பெருகப்பெற்று உபாயத்தை அநுஷ்டித்து மோக்ஷம் பெறுவர் — என்றவாறு. 13

## பன்னிருநாமம் — உரை முற்றிற்று

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

ஸ்ரீ:

# திருமந்திரச்சுருக்கு - உரை

ஸ்ரீராாதுபபுல திருவேஙகடமுடையானதிருவடிகளே சரணம

தனியன

ஶ்ரீராமாநுஜதயாபாத்ரம் | வேதாந்தகுரு ...
ஸ்ரீசைலேசதயாபாத்ரம் | ... வாரிதிம

[ விஷயச்சுருக்கம் ]

சேதநன உஜ்ஜீவிபபதறகு ஸாதநமான ரஹஸயஙகள மூனறு. அவை—திருமநதரம, தவயம, சரமசலோகம எனபனவாம அவறறுள ஒவ வொனறும ஒவவொரு வகையில மிகப பெருமைபெறறு விளஙகும திரு மநதரம, ஸகலமநதரஙகளிலும சிறநது விளஙகுவது, ஸகலவேதஙகளின ஸாரமானது, தீஙகுகள அனைததையும போககவலலது, ஸகல பலனகளை யும அளிககவலலது, ஸகல உபாயஙகளையும தலைககட்டிவைககவலல ஒரு ஸாதநமாவது, ஸகலஜாதியினரும தததம அதிகாரததிறகுத தககவாறு வைதிகம தாநதரிகம எனறு ஸ்ரீபாஞசராததரததில கூறிய முறைப்படி அநுஸநதிகக உரியது, சேதநன அசேதநம ஈசவரன ஆகிய தததவஙகளை வெளியிடவலலது, வேறு மநதரஙகளின உதவியினறி ஸகலபலனகளையும அளிககவலலது, சிறசில மநதரஙகள சிறசில பகவதமூாததிககு உரியனவா யிருததலபோலனறி ஸகலபகவதமூாததிகளுககும பொதுவானது. ஆசாாயாகளும ஆழவாாகளும மஹாஷிகளும இநத மநதரததின பெருமையை அளவிலாது புகழநது பேசியுளளனா மிகக கூறுவ தென? எமபெருமானால நேரில இமமநதரததை உபதேசிககபபெறற திருமஙகை மனனனபோலவாரே இதன பெருமையை அறியவலலா

இஙஙனம பெருமைபெறறுவிளஙகும திருமநதரம எட்டு எழுததுக கள கொணடதாகும அதனால இது அஷடாக்ஷரமெனப பெயா பூணடது. உபநிஷத்துததானே இத திருமநதரததின அக்ஷரஙகளைக கணககிட்டு இவ வஷடாக்ஷரம ஸ்ரீமநநாராயணனைக காட்டககூடியதெனறு கூறி இதை ஓதுபவனது பெருமையைப பரககப பேசியது

யாகாவாதலின் நீயே எங்களுக்குத் தக்க புருஷார்த்தமாகின்றாய், நாங்கள் அநுஷ்டிக்கும் உபாயத்தால் எங்கள்மீது அருள்புரிந்து பலனைத் தருவதால் நீயே முக்கியமான உபாயமாயிருக்கின்றாய், எங்கள் பாபங்கள் முழுவதை யும் ஒழிப்பதால் நீயே தாமஸவரூபியாயிருக்கின்றாய், உனக்குச் சமமான வேறொருவன் இல்லாமையால் நீயே எங்களுக்கு ஏற்ற ஸஹாயமாயிருக்கின் றாய், எங்கள்மீது உனக்கு உண்டாகும் மனக்கலக்கத்தை நீக்கவல்ல பெரிய பிராட்டி உன் திருமார்பில் நித்யவாஸஞ்செய்வதால் மனக்கலக்கம் நீங்கிப் பரி சுத்தனாகின்றாய், நாராயணசப்தத்தால் கூறப்படுவதால் நீயே ஜகத்துக்குக் காரணமாகின்றாய், உயர்ந்த ஸ்தாநமாகிய ஸ்ரீவைகுண்டத்தையும் அளிப்ப தால் நீயே நினைத்ததைத் தரும் கற்பகவிருக்ஷமாகின்றாய்; ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி ஆகியவற்றில் ஒன்றிலும் ஓர் அம்சத்திலும் குறைவில்லாதவ னாதலின் நீயே ஸர்வேசுவரனாகப் பிரகாசிக்கின்றாய், எங்களுக்கு வரும் துன்பத்தை உடனே நீக்கிக் காப்பதால் நாங்கள் உன்னைப் பரமபோக்யமாக அநுபவிக்கும்படி ஆநந்தஸ்வரூபமாயிருக்கின்றாய், 'கறந்த பாலுள் நெய்' போல எங்களுட் புகுந்து அந்தர்யாமியாயிருப்பதால் எங்களைக் காட்டும் சப்தங் களாலும் நீயே கூறப்படுகின்றாய், இந்தப் பிரபஞ்சத்தில் உனக்கு உரியதல் லாத ஒரு வஸ்துவும் இல்லையாதலின் எம்முடையதாகக் கருதப்படும் வஸ்து வுக்கும் நீயே ஸ்வாமியாகின்றாய், பிரபஞ்சத்திலுள்ள தோஷம் உன்னிடம் தட்டாது நீ நிற்பதால் திருக்கல்யாணகுணங்களால் நீயே சிறந்து நிற்கின் றாய், பிரளயகாலத்தில் பிரபஞ்சம் முழுவதையும் உன் திருவயிற்றில் வைத்துக் காத்துப் பின் படைப்பதால் நீயே ஸர்வவித்சக்தியையும் உடையவனாகின் றாய், இவ்வாறு அதிசயிக்கத்தக்க உன் பெருமையைப் பேச வேதங்களே ஒருவாறு முற்படும் எங்களால் இயலாது—என்றவாறு 7

அவன்பெருமையைப் பேச முற்பட்ட வேதங்களும் அங்ஙனம் செய்யமுடியாது கைவாங்குகின்றனவென்று கூறிப் பின்னும் அவன் பெருமை பேசப்படுகின்றது—

நேரிசைவெண்பா

354 ஆரணங்க டேட வயிந்தைநகர் வந்துதித்த
காரணராய் நின்ற கடல்வண்ணா—நாரணனு
ரிப்படிக்கு மிக்கன் றெடுத்தபா தங்கழுவ
மெய்ப்படிக்க மானதுபோன் வேறபு 8

உரை:— ஆரணங்கள் தேட — வேதங்கள் தேடிநிற்க, அயிந்தைநகர் வந்து உதித்த — திருவயிந்திரபுரத்தில் வந்து திருவவ தரித்தவரும், காரணராய் நின்ற — (ஸகலஜகத்துக்கும்) காரணமாய் நின்றவரும், கடல் வண்ணா—கடல்போன்ற நிறத்தையுடையருமான,

நாரணனார் — *ஸ்ரீமந்நாராயணனாகிய அடியவர்மெய்யர்,* அன்று — (*த்ரிவிக்ரமனாக ஆன*) *அன்று,* இப்படிக்கு மிக்கு — *இப்பூலோகத்திற் கண் மிகவுயர்ந்து,* எடுத்த — (*ப்ரஹ்மலோகம் வரையில்*) *தூக்கிய,* பாதம் கழுவ — *திருவடியை* (*ப்ரஹ்மா*) *திருமஞ்சனஞ்செய்ய,* போன வெற்பு — *தங்கமலையாகிய மேரு,* மெய்ப் படிக்கம் ஆனது — *உண்மையான* (*தீர்த்தத்தை*) *ஏந்தும்பாத்திரமாக ஆயிற்று*

*அடியவர்க்குமெய்யன், த்ரிவிக்ரமாவதாரத்தில் இந்தப் பூமி முழு வதையும் ஒரு திருவடியால் அளந்து மற்றொரு திருவடியை ப்ரஹ்மலோகத் தளவும் செல்லவிட்டபோது ப்ரஹ்மதேவன் அந்தத் திருவடிக்குத் திருமஞ் சனஞ் செய்ய அவ்வமயம் மஹாமேருபர்வதம் அந்தத் தீர்த்தத்தை ஏந்து கின்ற திருப்படிக்கமாயிற்று என்னே அவன்பெருமை !!! வேதங்கள் அனைத்தும் ஸகலஜகத்காரணமான அவனது பெருமையைக் காணமுடியாது தேடுகிறக, அவன் இக்காமபூமியிலுள்ள அடியார்களைக் காக்கின்றது திருவயிந்திரபுரத்தில் வந்து அவதரித்து அனைவர்க்கும் காட்சி தந்து நிற்கின் றான் என்னே அவன் ஸௌலப்யம் (எளிமை) !!!—என்றவாறு* 8

**இங்ஙனம் அடியவர்க்குமெய்யன் தன் வடிவத்தைக் காட்டுவ தும் மறைவதுமாயிருக்க, பூர்ணாநுபவம் கிடைக்கப்பெறாத தலைவி வருந் திப் பெரிய மயக்கத்தையடைய, தலைவியின் செவிலித்தாய் தலைவி படும்பாட்டைக் கண்டு நற்றாயக்குக் கூறுகின்றாள்—**

355 *கட்டளைக்கலித்துறை*

வெற்புடன் ஒன்றி யயிந்தையில் வெவ்வினை தீர்மருந்தொன்
றற்புத மாக வமர்ந்தமை கேட்டருள் வேண்டிநிற்கப்
பற்பி லமர்ந்தசெய் யாள்படி காட்டிய பண்புடையெம்
விற்புரு வக்கொடிக் கோவிலங் காமயல் பெற்றனமே 9

உரை —அயிந்தையில் — *திருவயிந்திரபுரத்தில்,* வெவ் வினை தீர — *கொடிய கர்மங்களைப் போக்கவல்ல,* ஒன்று மருந்து — *ஒப்பற்ற* (*தெய்வநாயகனெனும்*) *மருந்து,* வெற்புடன் ஒன்றி — (*ஔஷதாத்ரி யெனும்*) *திருமலையோடு ஒன்றுபட்டு,* அற்புதமாக — *ஆச்சர்யமாக,* அமர்ந்தமை கேட்டு — *நித்யவாஸஞ்செய்வதைக் கேட்டு,* அருள் வேண்டி நிற்க — (*அதன்*) *கடாக்ஷத்தை வேண்டி நிற்க,* பற்பு இல் அமர்ந்த — *தாமரையாகிய ஸ்தானத்தில் எழுந்தருளியுள்ள,* செய்யாள் — *பெரியபிராட்டியுடைய,* படி காட்டிய - *ப்ரகாரங்களை*

நினைவுடைய, பண்புடை — ஸ்வபாவத்தையுடைய, எம் வில் புருவக் கொடிக்கு — வில்லையொத்த புருவத்தையுடைய கொடிபோன்ற எங்கள் பெண்ணுக்கு, விலங்கா ஓர் மயல் — நீங்காத ஒரு மயக்கம், பெற்றனம் — வரப்பெற்றோம்

உலகில், மலைகளில் காணப்படும் மருந்து மாந்தரின் நோய் தீர்க்க வல்லதாகும் திருவயிந்திரபுரத்தில் ஔஷதாத்ரியிலிருக்கும் அடியவர்க்கு மெய்யனென்னும் மருந்து காமங்களையும் தீர்க்கவல்லதாம் என்ற இதன் அற்புதசக்தியைக் கேட்டு அம்மருந்தை அடைய என் மகள் விரும்பினாள் தாமரையாகிய ஸ்தானத்தில் வஸிக்கும் பெரியபிராட்டியைப்போல என் மகளும் அடியவர்க்குமெய்யனைப் பிரிந்து தரியாதவள் வில்லைப் போன்ற அவள்புருவமும் தங்கக்கொடியைப்போன்ற அவள்மேனியும் கண்டோரைத் தோற்பித்து அடிமையாக்குவனவன்றோ? இத்தகைய என் மகள் தன் காதலனான அடியவர்மெய்யனது கலவியைப் பெறாமல் பெரிதும் மயங்கிக்கிடக்கின்றாள்—என்றவாறு

இது அகப்பொருளில் 'செவிலித்தாய் அறத்தொடுநிற்றல்' என்னும் துறையாகும் செவிலித்தாய் அறத்தொடுநிற்றலாவது—தலைவியை மணம் பேசி அயலார் வர, அதை அறிந்த செவிலித்தாய் தலைவியின் கற்புக்கு இழுக்கு நேராதவாறு தாயினிடம் தலைவியின் முன்நிகழ்ச்சி கூறி அயலார்க்கு உடம்படாது தடுத்தல்

ஸ்வாபதேசப்பொருளில் ஸ்ரீதேசிகன் அடியவர்மெய்யனது பரிபூர்ணாநுபவத்தைப் பெறப் பேராவல்கொண்டு பித்தராயிருக்கும் நிலையைப் பாகவதர் வியந்துபேசியதாயக் கொள்ளலாம் 9

அடியவர்க்குமெய்யன், தன் விஷயத்தில் இவ்வாறு அடங்காக் காதல்கொண்டுள்ள இவருக்கு இனியும் முகங்கொடாதொழிந்தால் ஸர்வ ரக்ஷகனான தன் பெருமைக்குக் குறைவு வந்து இவரையும் இழக்க நேரிடுமென்று அஞ்சித் தன்னை நன்கு அநுபவிக்கச்செய்தான் இங்ஙனம் செய்த அவன்பெருமை பேசப்படுகின்றது—

நிலைமண்டிலவாசிரியப்பா

356 பெற்றனை நீயே மற்றுள வெல்லாம்
பெறுவது நின்னை யுறுவது கொள்வார்
நினதொ லன்றி மன்னு ரினப
நின்ன் பொருட்டுநீ யென்ன பொருட்டிலை

நின்னுரு நின்று மின்னுருத் தோன்று
நின்றனக் குநிகா நின்னடி யடைவாா
நின்பா லன்றி யன்பா லுய்யாா
வாரண மழைக்க வந்த காரணனே

உரை.—வாரணம் அழைக்க — கஜேந்திரன் அழைக்க, வந்த காரணனே — (அப்போதே) வந்துகாத்த காரணவஸ்துவான தெய்வ நாயகனே!, மற்று உள எல்லாம் — மற்றும் உள்ள (சேதநாசேதநங்களை) எல்லாம், நீயே பெற்றனை — நீயே படைத்தாய்; உறுவது கொள்வார் — தக்க உபாயத்தையும் பலனையும் கொள்வார், பெறுவது நின்னை— உபாயமாகவும் பலனாகவும் கொள்வது நின்னையே, நின்னால் அன்றி — உன்னால் அன்றி (வேறொருவராலும்), இன்பம் மன்னார் — ஸுகத்தைப் பெறமாட்டார்கள், நீ நின்பொருட்டு — நீ (செய்யும் காரியங்கள்) உனக்காகவே, என்பொருட்டு இ(ல்)லை — எனக்காக இல்லை. நின் உருநின்றும் — உன் திருமேனியிலிருந்து, மின் உரு—மின்போல நிலையற்ற தாவரஜங்கமங்கள் அனைத்தும், தோன்றும் — பிறக்கின்றன, நின் அடி அடைவார் — உன் திருவடிகளை அடைவார், நின் தனக்கு நிகர் — உனக்குச் சமமாவார், நின்பால் அன்பால் அன்றி — உன்னிடம் பக்தியால் அன்றி, உய்யார் — உஜ்ஜீவிக்கமாட்டார்கள்

முதலையின் வாய்ப்பட்டுத் துன்புற்ற கஜேந்திரன் 'ஆதிமூலமே' என்று அழைக்க அப்பொழுதே ஓடிவந்து அவனைக் காத்து ஜகத்காரணனென்னும் பெயரை ஸ்தாபித்துக்கொண்ட அடியவார்க்குமெய்யனே! சேதநாசேதநங்களையெல்லாம் படைத்த உன்னையே ஆசிரிதர்கள் தம் ஸ்வரூபத்திற்குத் தக்க உபாயமாகவும் பலனாகவும் கொள்கின்றார்கள், பரமானந்தமாகிய மோக்ஷத்தைக் கொடுப்பவன் நீயே அன்றி, வேறு எவர்க்கும் அதைக் கொடுக்கச் சக்தியில்லை நீ மற்றவர்க்காக எதைச் செய்தியுனும் அதனால் வரும் பயனை முடிவில் அடைபவன் நீயே, ஸகல வஸ்துக்களும் உன் திருமேனியிலிருந்து பிறந்தவை, உன்னை வணங்கி வழிபடுமவர் உனக்குச் சமமாவர், உன்னிடம் பக்தியுள்ளவர்களன்றி மற்றவர் உஜ்ஜீவிக்க வழியில்லை—மன்றவாறு

இதற்குப் பின் உள்ள 20 பாசுரங்களும் மறைந்துவிட்டன

மும்மணிக்கோவை — உரை முற்றிற்று

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

ஸ்ரீ:

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

# நவமணிமாலை - உரை

தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் . . ... . தேசிகம் ||

சீரொன்று வாழ்வு

---

## [ விஷயச்சுருக்கம் ]

இந்த ப்ரபந்தத்தை நவரத்தினமாலையென்றும் வழங்குவதுண்டு ஆனால் ஸ்வாமி தாமே பெயரிட்டுக்கொடுத்தபடி **நவமணிமாலை** என்ற பெயர் வழங்குவதே முறையாகும் வெவ்வேறு நிறமுடைய நவமணிகளால் இயன்ற ஹாரம்போல் வெவ்வேறு செய்யுள்கள் ஒன்பது அமையப்பெற்ற தாகையால் இதற்கு நவமணிமாலையெனப் பெயர் வந்தது

இப்பிரபந்தத்தில் முதலில் திருவயிந்திரபுரத்து எம்பெருமானுடைய திருவடிகளின் பெருமையைப் பேசி, பின் அவன் பத்து அவதாரங்களெடுத்த வரலாற்றையும், ப்ரஹ்மா கருடன் திருவநந்தாழ்வான் பூமிதேவி ஆகிய இவர்கள் படைத்த புண்யதீர்த்தங்களை அவன் உகந்து அவற்றின் கரையில் எழுந்தருளியிருப்பதையும் கூறி, மாசிமாதத்தில் தெய்வநாயகன் கடற்கரைக்கு எழுந்தருளித் திருமஞ்சனச்சேர்ப்பில் கண்டருளும் உத்ஸவத்தைப் புகழ்ந்து, அவ்வெம்பெருமானுடைய வடிவழகையும், அதில் ஈடுபட்டு அதை மறவாதவர்க்கு ஸம்ஸாரபந்தம் நீங்கும்வண்ணத்தையும் வெளியிட்டு, தம்முடைய அந்த்யகாலத்தில் தமக்கு அபயப்ரதாநம் செய்யுமாறு தெய்வநாயகனை வேண்டிக்கொண்டு, தெய்வநாயகன் தன்னைப் பாடும்படி தம்மை நியமித்ததற்கிணங்கத் தாம் அவன்மீது வடமொழியில் இரண்டும், தமிழில் ஏழுமாக ஒன்பது ப்ரபந்தங்களைப் பாடியதையும் மொழிந்து தலைக்கட்டுகிறார் ஸ்ரீதேசிகன்

---

தெய்வநாயகன் திருவடிகளின் பெருமை பேசப்படுகின்றது—

*பதினறுசீராசிரியச்சந்தவிருத்தம்*

357 ஒருமதி யன்பரு ளங்க வர்ந்தன
வுலகம டங்கவ ளர்ந்த ளந்தன
வொருசடை யொன்றிய கங்கை தந்தன
வுரகப டங்கள ரங்கு கொண்டன
தருமமு யர்ந்ததி தென்ன நின்றன
தருமனி ரந்ததி சைந்து சென்றன
சகடமு டைந்துக லங்க வென்றன
தமர்கள ருந்தும ருந்தி தென்பன
திருமகள் செய்யக ரங்க ளொன்றின
திகழ்துள வுந்தும ணங்க மழ்ந்தன
செழுமணி கொண்டசி லம்பி லங்கின
சிலைதனி லன்றோர ணங்கு மிழ்ந்தன
வருமறை யந்தம மர்ந்த பணிபின
வயன்முடி தன்னில மர்ந்து யர்ந்தன
வருடர வெண்ணிய யிந்தை வந்தன
வடியவர் மெய்யர்ம லர்ப்ப தங்களே 1

உரை:— அடியவர்மெய்யர் — *அடியவர்க்குமெய்யருடைய*, மலர்ப் பதங்கள்— (*தாமரை*)*மலர்போன்ற திருவடிகள்*, ஒரு மதி அன்பர் — (*தம்மிடம்*) *ஒருமுகப்பட்ட பக்தியையுடைய பாகவதர்களின்*, உளம் கவர்ந்தன — *மனத்தை வசப்படுத்திக்கொண்டன*; உலகம் அடங்க — *ஸகலலோகங்களும் (தமக்குள்) அடங்குமாறு*, வளர்ந்து அளந்தன—(*பெரியனவாய்*) *வளர்ந்து அளந்தன*, ஒரு சடை ஒன்றிய — (*சிவனுடைய*) *நிகரற்ற ஜடையில் ஒன்றுபட்டுநிற்கின்ற*, கங்கை தந்தன — *கங்கையைப் பிறப்பித்தன*, உரக படங்கள்—(*காளிய னென்னும்*) *பாம்பின் படங்களை*, அரங்கு கொண்டன — *நடனஸ்தல மாகக் கொண்டன*, உயர்ந்தது தருமம் — *சிறந்ததாகிய உபாயம்*, இது என்ன நின்றன — *இந்தத் திருவடியிணையே என்று அறியும்படி நின்றன*; தருமன் இரந்தது — *தர்மபுத்திரன் (தூதுசெல்லும்படி) யாசித்ததை*, இசைந்து சென்றன—*ஏற்று நடந்தன*, சகடம் உடைந்து கலங்க — (*கண்ணனை நலியவந்த*) *சகடமாகிய அஸுரன் சிதைந்து*

கலங்குமாறு, வென்றன — வெற்றிகொண்டன, இது — இந்தத் திருவடியிணை, தமர்கள் அருந்தும் —பாகவதர்கள் (ஸம்ஸாரநோய்தீர) உண்ணக்கடவதான, மருந்து என்பன — அம்ருதம் என்று சொல்லப் படுவன, திருமகள் — பெரியபிராட்டியாருடைய, செய்ய கரங்கள் — சிவந்த திருக்கைகளோடு, ஒன்றின — ஒன்றுபட்டுநின்றன; திகழ் துளவு உந்தும் — பிரகாசிக்கின்ற திருத்துழாயினின்று எழுப்பப் பெற்ற, மணம் கமழ்ந்தன — நல்ல வாஸனை வீசப்பெற்றன; செழு மணி கொண்ட — செழுமையான ரத்னங்கள் உள்ளிட்ட, சிலம்பு இலங்கின — சிலம்புகளோடு விளங்கின; அன்று — ஸ்ரீராமாவதாரத் தில், சிலைதனில் — கல்லுருவில் (நின்ற), ஓர் அணங்கு — ஒரு பெண்ணை, உமிழ்ந்தன — வெளிவரச்செய்தன; அரு மறை அந்தம்— அருமையான வேதாந்தங்களில், அமர்ந்த — பொருந்திய, பண்பின— சிறப்புடையன; அயன் முடி தன்னில் — ப்ரஹ்மாவின் முடியில், அமர்ந்து — பொருந்தி, உயர்ந்தன — (இன்னும் மேலே சென்று) உயர்ந்துநின்றன; அருள் தர எண்ணி — அருள் புரியக் கருதி, அயிந்தை வந்தன — திருவயிந்திரபுரத்தில் வந்து அவதரித்தன.

அடியார்களிடம் மெய்யுறை ஒழுகும் தெய்வநாயகனுடைய இரண்டு திருவடிமலர்களும் அவற்றைத் தவிர வேறு உபாயத்தையும் பலனையும் கொள்ளாத பரமைகாந்திகளின் உள்ளத்தைக் கவர்ந்து எப்பொழுதும் தியானிக்கச்செய்யும் பெருமையுடையன, த்ரிவிக்ரமாவதாரத்தில் ஸகல லோகங்களும் தமக்குள் அடங்கியிருக்குமாறு மிகப் பெரியனவாய் வளர்ந்து ஓங்கி நின்றன, சடையனென்று பேசப்படும் சிவன் தன் பெரிய சடைமுடியில் தாங்கிப் பரிசுத்தனும்படி கங்காநதியை அவதரிப்பித்தன, க்ருஷ்ணாவதாரத்தில் அஷ்டநிக்ரஹம் செய்யமுற்பட்டுக் காளியனென்னும் ஸர்பராஜனுடைய படங்களைத் தமக்கு நடனஸ்தலமாகக்கொண்டு நடனம்செய்தன, அடியார்களுக்கு முக்கியமான உபாயமாய்நின்று பலனை அளிக்கவல்லன, தாமபுத்திரன் வேண்டுகோளுக்கு இணங்கித் தூயோதனனிடம் தூதுசெல்லவும் துணிந்தன; கண்ணனை நலியத் துணிந்துவந்த அஸுரனுடைய சகடவடிவத்தைத் தூள்தூளாக உடைத்து வெற்றிபெற்றன, ஸம்ஸாரதாபத்தைப் போக்க அடியார்கள் அருந்தும் ஆராத அம்ருதமென்று சாஸ்த்ரங்களால் பேசப்பெற்றன, பெரியபிராட்டி தன் தளிர்க்கைகளால் வருடும்போது அவற்றோடு இணைந்துநின்றன; எப்பொழுதும் திருத்துழாய்மணம் வீசப் பெற்றன; சிறந்த ரத்னங்களைக்கொண்ட சிலம்புகளும் தம்முடன் ஸம்பந்தம் பெற்று அழகுபெறுமாறுசெய்து பிரகாசித்தன; ஸ்ரீராமாவதாரத்தில்

*கௌதமசாபத்தால் கல்லாயின்று மறைந்திருந்த அஹல்யையைப் பழைய வடிவுகொள்ளுமாறு அருள்புரிந்தன, ஸகலவேதாந்தங்களிலும் நித்திய மாயப் போற்றப்படுவன, த்ரிவிக்ரமாவதாரத்தில் ப்ராஹ்மலோகம் சென்ற போது ப்ரஹ்மா திருவாராதனம்செய்து தன் தலையில் சூடிநிற்க அதற்கும் மேல் உயர்ந்துநின்றன, இத்தகைய திருவடிகள் தம்மை இக்காமபூமியிலுள்ள அனைவரும் எக்காலமும் அநுபவித்து உய்யுமாறுசெய்யத் திருவயிந்திர புரத்தில் வந்து அவதரித்தன என்னே அவற்றின்ஸௌலப்யம்*!!!—என்றவாறு

**தசாவதாரங்களின் சரித்திரமும் தேய்வநாயகன்விஷயத்தில் அநுஸந்திக்கப்படுகின்றது—**

358 *இருபத்தெண்சீராசிரியச்சந்தவிருத்தம்*

மகரம் வளரு மளவில பௌவ மடைய வுற்ற லைத்தனே
வடிவு கமட மெனவ மாந்து கிரித னைத்த ரித்தனே
மலியு மசுர னுரமி டந்து வசுதை போதத்தே டுத்தனே
வலிகொ ளவுண னுடலபி ளந்து மதலை மெய்கசு தித்தனே
பகரு முலக மடிய ளந்து தமர்க ளுக்க ளித்தனே
பரசு முனிவன வடிவு கொண்டு பகைவ ரைத்து ணித்தனே
பணிய விசைவி றசமு கன்றன் முடிகள் பத்து திர்த்தனே
படியு முருவில வருபி லம்ப வசுர னைத்த காத்தனே
நகரி துவரை யெனவு கந்து வரைக ரத்தெ டுத்தனே
நடமொ டியலு பரியில வந்து நலிவ றுக்க வுற்றனே
நலியும வினைகள் சேரும் ருந்தி னலமு றைந்த வெறபினே
நணுகு கருட நதிகி ளாந்த புனலு கபபில வைத்தனே
யகர முதல வுரைகொண மங்கை கணவ னுக்க ளித்தனே
யடையும் வினதை சிறுவ னுய்ய வருளகொ டுத்து யாத்தினே
யடியு மனையு மெனும மனந்த னடிதொ ழுகக ளித்தனே
யவனி மருவு திருவ யிந்தை யடிய வாகசு மெய்யனே 2

உரை — அவனி மருவு — *பூமிதேவியால் அடையப்பெற்ற*, திருவயிந்தை—*திருவயிந்திரபுரத்தில் எழுந்தருளியுள்ள*, அடியவாகசு மெய்யனே — *அடியவாகசுமெய்யனே*[1], அளவில பௌவம் அடைய— *அளவில்லாத கடல் முழுவதும்*, வளரும் மகரம் உற்று — (*பருத்து*) *வளரும் மத்ஸ்யமாகப் பொருந்தி*, அலைத்தனே — *கலக்கினைய*, வடிவு கமடம் என — (*எடுத்துக்கொண்ட*) *வடிவம் ஆமையினது என்னும்*

படி, அமர்ந்து — நிலையாயநின்று, கிரிதன்னைத் தரித்தனே — மந்தரமலையைத் தாங்கினின்றாய, மலியும் அசுரன் — அதிக்கிரமித்த ஹிரண்யாக்ஷனென்னும் அஸுரனுடைய, உரம் இடந்து — மார்பைப் பிளந்து, வசுதை போதத் தெடுத்தனே — பூமியைப் பெயர்த்து எடுத்தருளினாய், வலிகொள் அவுணன் — பலசாலியான ஹிரண்யகசிபுவினுடைய, உடல் பிளந்து — சரீரத்தைப் பிளந்துகொண்டே, மதலை மெய்க்கு — (அவன்)புதல்வனான ப்ரஹ்லாதனுடைய ஸத்யத்தைக் காப்பதற்கு, (மதலை மெய்க்கு — தூணுருவினக்கண்), உதித்தனே — அவதரித்தாய், பகரும் உலகம்— (பலி தன்னுடையதெனக்)கூறிய ஸகலலோகங்களையும், அடி அளந்து— திருவடியால் அளந்து, தமர்களுக்கு அளித்தனே — அடியார்களான தேவர்களுக்கு (மீட்டு)க்கொடுத்தனே, பரசுமுனிவன் வடிவு கொண்டு — பரசுராமனாக அவதரித்து, பகைவரை — சத்ருக்க(ளான க்ஷத்திரியர்க)ளை, துணித்தனே—கொன்றனே, பணிய இசைவு இல — (ஸ்ரீராமனாக அவதரித்த உன்னுடைய) திருவடியில் பணியச் சம்மதி இல்லாத, தசமுகன்றன் — ராவணனுடைய, முடிகள் பத்து உதிர்த்தனே — தலைகள் பத்தையும் அறுத்துத்தள்ளினே, படியும் உருவில்வரு—(கோபாகளைப்போல)பொருந்திய வடிவத்தில் வந்த, பிலம்ப அசுரனை — ப்ரலம்பாஸுரனை, தகர்த்தனே — (பலராமனாயநின்று) ஒழித்தனே, நகரி துவரை என உகந்து — (தன் வாஸத்திற்கு உரிய) நகரம் த்வாரகையே என்று மகிழ்ந்து (கிருஷ்ணனாய்), வரை கரத்து எடுத்தனே — (கோவர்த்தன) மலையைக் கையில் எடுத்தனே, நடமொடு இயலு பரியில் — நடனத்தோடு பொருந்தியிருக்கும் குதிரையின்மீது, வந்து — (கல்கியாய்) அவதரித்து, நலிவு அறுக்க — (கலியிலுண்டாகும்) துன்பத்தை ஒழிக்க, உற்றனே — பொருந்தினே, நலியும் வினைகள்— (ஸம்ஸாரிகளைத்) துன்புறுத்துகின்ற கர்மங்களை, செகும் மருந்தின் — ஒழிக்கின்ற மருந்துபோல, நலம் உறைந்த வெற்பினே — நன்மை பொருந்திய ஔஷதகிரியை இடமாகக்கொண்டனே, நணுகு கருட நதி கிளர்ந்த — பக்கத்திலுள்ள கருடநதியினின்று எழும்பிய, புனல்—(திவ்ய) தீர்த்தத்தை, உகப்பில் வைத்தனே— மகிழ்ச்சிக்குஉரியதாகக் கொண்டனே, உரை கொள் மங்கை— வாக்கை (த் தனது வடிவமாக)க் கொண்ட ஸரஸ்வதிதேவியின், கணவனுக்கு — நாதனான ப்ரஹ்மாவுக்கு, அகரம் முதல—அகாரத்தை முதலாகக்கொண்ட ஸகலவேதங்களையும், அளித்தனே — உபதேசித்தனே, அடையும் — (தன்னை)

அடைந்த, வினதை சிறுவன் – விநதையின் புத்திரனான கருடன், உய்ய – உஜ்ஜீவிக்கும்படி, அருள்கொடுத்து – கருணைவைத்து, உயர்த்தினை – (அவனைக்) கொடியாகவும் எடுத்தனை, அடியும் அணையும் எனும் – ஸ்ரீபாதுகையும் பாயலும் (படுக்கை) என்னப்படுகின்ற, அனந்தன் – திருவனந்தாழ்வான், அடி தொழ– திருவடிகளைத் தொழ, களித்தனை – (அதனால்) மகிழ்ந்தனை

அடியவர்க்கு மெய்யனே! ப்ரளயகாலத்தில் ஹயக்ரீவனென்னும் அஸுரன் வேதங்களை அபஹரித்துக்கொண்டு கடலுள் மூழ்கியபோது நீ பெரிய மீன் வடிவங்கொண்டு கடலுள்புகுந்து அவனைக்கொன்று வேதங்களை மீட்டருளினாய், முன் தேவரும் அசுரரும் பாற்கடலைக் கடைந்தபோது மத்தாக இருந்த மந்தரமலை கடலுள் அழுந்திவிடாதபடி பெரிய ஆமைவடிவங்கொண்டு கடலுட் புகுந்து அம்மலையைத் தன் முதுகினால் தாங்கினாய், ஹிரண்யாக்ஷன் என்னும் கொடிய அஸுரன் தன் வலிமையின் மிகுதியால் பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு கடலினுட் புகுந்தகாலை வராஹவடிவங்கொண்டு கடலினுள்ளே சென்று அவ்வசுரனைக் கொன்று பூமியைக் கோட்டுநுனியால் கொண்டுவந்து மறுபடியும் விரித்தருளினாய், உன்னுடைய பக்தசிகாமணியான ப்ரஹ்லாதன் 'எங்கும் உளன் கண்ணன்' என்று கூறியதை மெய்யாக்க அவன் தந்தையான ஹிரண்யகசிபுவின் மார்பைப் பிளந்துகொண்டே தூணினின்று நரஸிம்மனாய் அவதரித்தாய், தேவராஜ்யத்தை அபஹரித்துக்கொண்ட பலிச்சக்கரவர்த்தியின் யாகத்தில் வாமனனாய்த் தோன்றி அவனிடம் மூன்றடி மண் யாசித்து வாங்கி த்ரிவிக்ரமனாக மாறி ஸகலலோகங்களையும் அளந்து தேவராஜ்யத்தை மீட்டுத்தந்தருளினாய், பரசுராமாவதாரம் கொண்டு, பகைவராயநின்ற க்ஷத்திரியர்களை வேரறுத்தாய், சக்கரவர்த்தித் திருமகனாய் அவதரித்து, தன் அடியடையாத ராவணன் தலைகளை உதிர்த்தாய், பலராமனாயநின்று, ப்ருந்தாவனத்தில் இடையனுருக்கொண்டு தீங்கு செய்யவந்த ப்ரலம்பாஸுரனை ஒழித்தாய், கண்ணனாய் அவதரித்துக் கோவர்த்தனமலையைத் திருக்கரத்தால் தாங்கி ஸகலப்ராணிகளையும் காத்தருளினாய், இனி வெள்ளைக்குதிரையின்மீது கல்கியாய் அவதரித்துக் கலியால் வரும் துன்பத்தை நீக்கப்போகின்றாய், கொடிய வினைகளைத் தீர்க்கும் மருந்தாயநின்று ஔஷதகிரியை இடமாகக்கொண்டாய், பக்கத்தே பெருகும் கருடநதியின் தெளிந்த நீரைக் கண்டு மனமகிழ்கின்றாய், ப்ரஹ்மதேவனுக்கு அக்ஷராப்யாஸம் செய்வித்து ஸகலவேதங்களையும் உபதேசித்தருளினாய், தன் திருவடிகளில் வந்தடைந்த கருடனுக்கு அநுக்ரஹம் செய்து அவனைக் கொடியாகவும் உயர்த்தினாய், உனக்குப் பாதுகையும் பாயலுமாய்நின்று கைங்கர்யம் செய்யும் திருவனந்தாழ்வான் உன் திருவடி

களை வணஙகிநிறக, அதனுல மகிழநது அவனுககு அருளபுரிநதாய , பூமி தேவிககுப பாரமாகவுளள பாபிகளைக கொனறு சுமையைக குறைததற்காக அவள வணஙகிநிறகபபெறருய , இததகைய பெருமை வாயநத உனனை நாஙகள எவவாறு புகழநதுபேசவலலோம?—எனறவாறு

இபபாசுரததில நானகாம அடியில பரஹமா, கருடன, ஆதிசேஷன, பூமிதேவி ஆகிய நாலவரையும குறிததிருபபது இநத க்ஷேததரததைபபறறிய புராணவரலாறறை ஸூசிபபிககினறது அதன விளககம பினவருமாறு—

இநத க்ஷேததரததில நானகு புணயதீாததஙகள உள அவையாவன—

1 ப்ரஹ்மதீர்த்தம்— இநத ஸதலததில முன பரஹமா ஒரு புணய தீாததததை ஸருஷடிகக, தெயவநாயகனுடைய ஸமபநதததால அநதத தீாததம விரஜாநதியைபபோல பெருமைபெறறது அதன கரையில பகவா னைக குறிததுத தவமபுரிநத பிரமனுககு அவன வரம கொடுததருளினுன

2 கருடதீர்த்தம்— கருடன ஒருகால் தன அலகினுல பூமியைக கீற, அதிலிருநது பெருகிய மஹாநதியே கருடநதியெனப பெயாபெறறுப புணய நதியாயத திகழகினறது

3 சேஷதீர்த்தம்— ஆதிசேஷன முன ஒருகால தெயவநாயகனுககு எதிரில ஒரு புணயதீாததததைப படைததான அமுதமபோனற இதன நீரைக கணடு அடியவாககுமெயயனும மிக மகிழநதான இநதத தீாததம கிணறுவடிவுகொணடு இனறும சேஷதீாததமென வழஙகுகினறது

4 பூமிதீர்த்தம்— முன அசுராகளின பாரம தாஙகாது வருநதிய பூமிதேவி எமபெருமானைச சரணமடைய, அவனும அவளது வேணடுகோ ளுககிணஙகி அசுராகளை ஒழிததுப பூமியின பாரததைத தீாததருளினுன அவனைத துதிகக இநத க்ஷேததிரததிறகு வநத பூமிதேவி எமபெருமான அஸுராகளுடன போாசெயததால சறறுக களைபபுறறிருபபதாயக கணடு அவனது சிரமததைப போககப புஷபஙகள நிறைநத ஒரு தீாததததைப படைததாள பின எமபெருமானும அதன நீரால களைபபு நீஙகபபெறருன இதுவே பூமிதீாததமென வழஙகுகினறது

இநத நானகு தீாததஙகளிலும எமபெருமான நீராடிப பருகி மகிழநது அவாகள நாலவரையும நோககி ‘நீஙகள நாலவரும படைதத இநதத தீாததஙகளின கரையில தெயவநாயகன எனற பெயருடன எப பொழுதும வஸிககினறேன இநதத தீாததஙகளில ஒருகால் நீராடுபவன கஙகாஸநாநமசெயத பலனைப பெறுவான’ எனறு வரம கொடுததருளினுன

இவவரலாறே நானகாமடியால குறிககபபடடது

**பின்னும் அவனுடைய திவ்யசேஷ்டிதங்கள் பேசப்படுகின்றன—**

359 *எழுசீராசிரியச்சந்தவிருத்தம்*

புரமு யர்த்த வசுரர் கட்கோர் புறமு ரைத்த பொய்யினன்
வரையெ டுத்து மழைத டுத்த மழையொ டொத்த மெய்யினன்
றிரைநி ரைத்த கடலெ ரித்த சிலைவ ளைத்த கையினு
னருள்கொ டுத்து வினைத விர்க்கு மடிய வர்க்கு மெய்யனே

உரை — புரம் உயர்த்த — *நகரங்களை மேலே பறக்கும்படி கொண்ட*, அசுரர்கட்கு — *அஸுரர்களுக்கு*, ஓர் புறம் உரைத்த பொய்யினன் — *(வேதவிபரீதமான) ஒரு பிறமதக்கொள்கையை உபதேசித்த பொய்யினனும்*, வரை எடுத்து — *(கோவர்த்தன) மலையை (க் கைவிரலால்) எடுத்து*, மழை தடுத்த — *(இந்திரன் பெய்த கல்) மழையைத் தடுத்த*, மழையோடு ஒத்த மெய்யினன் — *மேகம்போன்ற (நிறமுள்ள) திருமேனியையுடையவனும்*, திரை நிரைத்த — *அலைகளை வரிசையாக வீசுகின்ற*, கடல் எரித்த — *கடலை எரித்த*, சிலை வளைத்த கையினன் — *வில்லை வளைத்த கையையுடையவனும்*, அருள் கொடுத்து — *கருணையைப் பொழிந்து*, வினை தவிர்க்கும் — *பாபங்களைப் போக்குகின்ற*, அடியவர்க்கு மெய்யனே — *அடியவர்க்கு மெய்யனே* (ஆவன்)

*முன்னொருகால் சிவனைக் குறித்துத் தவம்புரிந்து வரம்பெற்ற மூன்று அஸுரர்கள் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் மூன்று பட்டினங்களைக்கொண்டு தாம் நினைத்த இடங்களிலெல்லாம் திரிந்து யாகம் முதலிய கர்மங்களைக் கெடுத்து அந்தணர்களுக்கும் தேவர்களுக்கும் யாவருக்கும் இன்னல் விளைத்துவந்தனர் பின் தேவர்கள் எம்பெருமானைச் சரணமடைந்தனர் அவன் தேவர்களுக்கு அபயம் கொடுத்துத் தான் ஒரு பௌத்தனுடைய வேடம் பூண்டு அவ்வஸுரர் இருப்பிடம் சென்று தன்னைத் தார்மிகனென்று கண்டவர் கருதுமாறு தர்மங்களை உபதேசித்துக்கொண்டிருந்தான் அவ்வஸுரர்களும் அவனை நம்பி அவனது உபதேசத்தைக் கேட்க முற்பட்டுவிட்டுக, அவன் அவர்களுக்குத் தர்மத்தில் உள்ள சிரத்தையைக் குலைத்து அதனால் வலியழிந்து தொழிந்து நரகில் வீழச்செய்தான் இவ்வரலாறு முதலடியால் கூறப்பட்டது*

*கண்ணன், கோகுலத்தில் இடையர் வழக்கமாய் இந்த்ரனுக்குச் செய்யும் பூஜையைக் கோவர்த்தனமலைக்குச் செய்வித்ததனால் சினங்கொண்ட இந்திரன் கல்மழை பொழிந்தான் அதனால் அனைத்தும் படும் துன்பத்தைக் கண்டு கண்ணன் தன்கைச் சுண்டுவிரலால் அம்மலையைக் குடையாகப் பிடித்து அனைத்தையும் காத்தருளினன் இவ்வரலாறு இரண்டாமடியால் கூறப்பட்டது*

*ஸ்ரீராமாவதாரததில ஸ்ரீராமன கடலில அணைகட்ட இடம கொடுககுமாறு ஸமுதரராஜனைச சரணமடைநதான அறபஞன கடலரசன ஸ்ரீராமனது பெருமையை அறியாது அவனது வேணடுகோளுககுச செவிசாயககவிலலை அதனால சினஙகொணட ஸ்ரீராமன தன விலலை நாணேறறிக கடலை வறறசசெயய முறபடடான பின கடலரசன நடுநடுஙகிவநது அவன கட்டளைககுக கீழபபடிநதுநடநதான இவவரலாறு மூனறுமடியாற கூறபபடடது*

*இததகைய பெருமைவாயநத தெயவநாயகன நமமீது கருணை கொணடு நம பாபஙகளைப போககியருளவான—எனறவாறு* 3

**தெய்வநாயகனது மாசிமகஉத்ஸவம் பேசப்படுகின்றது—**

*கலிவிருததம*

360 தேசோத்தா ரிலலை யெனுநதெயவ நாயகனா
வாசக குழன்மா மலராண மணவாளா
வாசித தெழுமன மதனா மணறசோபபின
மாசிக கடலாடி மகிழ்ந்து வருவாரே 4

உரை — வாசக குழல — *நறுமணமுளள கூநதலையுடைய*, மா மலராள — *பெரிய தாமரையில உதிதத பிராட்டியின*, மணவாளா — *நாயகராகிய*, தேசு ஒததாா இலலை எனும — *தேஜஸஸில (தமமை) ஒததவா இலலை எனறுசொலலததகக*, தெயவநாயகனா — *தெயவநாயகா*, மாசிக கடல் ஆடி — *மாசிமகததனறு கடலில நீராடி*, வாசித்து — *மணமமிகுநது*, எழும் — *எழுகினற*, மன் மதன ஆா — *மிகக வளம நிறைநத*, மணல தோபபில — *மணல (நிறைநத கடறகரைச) சோலையில*, மகிழநது வருவாா — (*உலாவி*) *மகிழநது எழுநதருளவாா*

*திருமேனியின பரகாசததில நிகரிலலாதுய நறுமணம வீசும கூநதலையுடைய பெரியபிராட்டியின நாயகனாயிருககும தெயவநாயகன மாசி மாததது மகததிருநக்ஷததிரததனறு கடலுககெழுநதருளி நீராடித தீாததம பிரஸாதிததுக கடறகரையில மணமவீசும வளமநிறைநத சோலையில பததி யுலாவி எழுநதருளகிறான—எனறு அநுஸநதிததவாறு*

*'வாசிததொழு மனமதனா மணததோபபில' எனறு பாடஙகொணடு 'மனமதனா வாசிததொழு மணததோபபில' எனறு அநவயம கொணடு, மனமதனா வாசித தொழு—மனமதனுடைய குதிரைக(ளாகிய கிளிக)ளின்*

உறைவிடமாகிய, மணத்தோப்பில்—மணம்வீசும் தோப்பில் என்றும் பொருள் கொள்ளலாம் இனியை மன்மதனுக்குக் குதிரையாகக்கூறுவது தமிழர் வழக்கு

'வாசித்தொழு மன்மதன்' என்று பாடங்கொண்டு, வாசித் தொழும்— குதிரைநம்பிரானில் தொழத்தக்க, மன்மதன் – மன்மதஸ்வரூபனாக என்று பொருள்கொண்டு இத்தொடர், முற்காலத்தில் நடந்துவந்த பரஹமோதஸ வத்தின் அவப்ருதத்தினமாகிய மாசிமகத்தில் தெய்வநாயகன் கடலில் தீர்த்தம் ப்ரஸாதித்துக் கடற்கரைச்சோலையில் பத்தியுலாவும்போது குதிரைநம்பிரா னில் எழுந்தருளியுள்ள அழகைக் குறிக்குமென்றும் பெரியோர் பணிப்பர்

'மன்மதனோ வாசித்தொழும்' என்று அந்வயங்கொண்டு, இத்தொட ரைத் தெய்வநாயகனுக்கு விசேஷணமாக்கி மன்மதனோ வாசித்தொழும் தெய்வநாயகனோ – மன்மதன் அழகில் தனக்கும் தெய்வநாயகனுக்கும் உள்ள தாரதம்யத்தைக் கண்டு தோற்றுத் தொழப்பெற்ற தெய்வநாயகனோ என்று பழையவுரை கூறும்

[ இப்பொழுதும் இவ்வுத்ஸவம் சிறப்புடன் நடந்துவருகின்றது ] 4

தெய்வநாயகன்விஷயமான அந்திமஸ்ம்ருதி வேண்டப்படுகின்றது-

அறுசீராசிரியவிருத்தம்

361 உருளுஞ் சகட மொன்றுதைத்தா
யுலக மேழுண் டுமிழ்ந்தளந்தாய
பொருளு மழலு மிறையாகப
பூண்டே னடிமை யினின்மீண்டே
னிருளு மருளுந் தருமந்நா
ளேழிலா ராழி சங்கேந்தி
யருளுந் தெருளுந் தரவேன்பா
லடியோர் மெய்ய வந்தருளே 5

உரை — உருளும் – (தன்னைக் கொல்ல) உருண்டுவந்த, ஒன்று சகடம் – (அஸுரனாகிய) ஒரு சகடத்தை, உதைத்தாய — உதைத்துக்கொன்றவனே!, ஏழுஉலகம்-ஏழுலோகங்களையும், உண்டு— வயிற்றிற்கொண்டு, உமிழ்ந்து – படைத்து, அளந்தாய – அளந்த வனே!, அடியோர்மெய்ய – அடியவர்க்குமெய்யனே!, பொருளும் – செல்வத்தையும், அழலும் – அக்னிபோல மனிதனை எரிக்கவல்ல காமத்தையும், மிறையாகப பூண்டேன் – குற்றமுள்ளனவாகக

கொண்டேன்; அடிமையினில மீண்டேன் — (உன) கைங்கர்யத்தில திரும்பினேன; இருளும் — (அஜ்ஞானமாகிய) இருளையும, மருளும — விபரீதஜ்ஞானத்தையும, தரும் — தருகின்ற, அந்நாள— அந்த (மரண) ஸமயத்தில, எழில ஆர — அழகு நிறைந்த, ஆழி சங்கு — திருவாழியையும திருச்சங்கையும, ஏந்தி — (திருக்கையால) தாங்கி, அருளும் — கிருபையையும, தெருளும்—ஜ்ஞானத்தையும, தர — (எனக்கு) அளிப்பதறகாக, எனபால் வந்தருள — என்பக்கத்தில வந்தருள்க

இளமபருவத்தே தொட்டிலிற பள்ளிகொண்டிருந்தகாலையில தன்னை நலியவந்த சகடாஸுரனைத திருவடியால உதைத்து ஒழித்தவனே! ஏழுலகங்களையும பரளயகாலத்தில் அழித்து ஸருஷ்டிகாலத்தில படைத்து தரிவிக்ரமாவதாரத்தில அளந்தவனே! அடியவர்க்குமெய்யனுடைய திருவயிந்திரபுரத்தில அவதரித்த தெய்வநாயகனே! ஆத்தத்தாலும காமத்தாலும வரும தீங்குகளை நினைத்து அவை எனக்கு ஏறபடலாகாதென்று கண்டு புறக்கணித்தேன, இப்பொழுது உனக்குப பணிசெய்வதையே சிறந்த பயனாகக் கொண்டேன, அஜ்ஞானமும விபரீதஜ்ஞானமும நிரமபியிருக்கப்பெறும என அந்திமகாலத்தில நான உன்னை நினையாவிடினும இப்பொழுது நான பராத்திபபதையேகொண்டு, அஜ்ஞானமாகிய எதிரியை அழிக்கவல்ல திருவாழியாழ்வானையும ஜ்ஞானத்தைத் தரவல்ல திருச்சங்கையும ஏந்திவந்து எனக்கு அருளபுரியவேண்டும—என்றவாறு

'அழல்' எனும சொல அகனியைக் கூறும இங்கு இது உவமவாகுபெயராயநின்று அகனியைபபோலத தீங்குதரும காமத்தைக் கூறியதாம 5

**தெய்வநாயகன் வடிவழகை மறவாதார் முக்தராவர் என்கின்றது-**

எண்சீராசிரியவிருத்தம

362 வஞ்சனைசெய பூதனையை மலியுஞ் சாட்டை
மலலரையோர மதகளிறறை வானோ ரஞ்சுங்
கஞ்சனைமுன் கடிந்தவனி பாரந் தீர்த்த
காவலனே கோவலனாய் நின்ற கோவே
யஞ்சனமுங் காயாவு மனைய மேனி
யடியவர்க்கு மெய்யனே யயிந்தை வாழு
மஞ்சனைய யருள்பொழியும் வள்ள லேநின்
வடிவழகு மறவாதார பிறவா தாரே. 6

உரை:— வஞ்சனை செய பூதனையை — (தாயவேடம்பூண்டு) வஞ்சனை செய்யமுற்பட்ட பூதனையையும், மலியும் சாட்டை — ஹிம்ஸித்தலில் மூண்டுவந்த சகடாஸுரனையும், மல்லரை — (கம்ஸன் ஏவிய) மல்லரையும், ஓர் மதகளிற்றை — நிகரற்ற மதயானையாகிய குவலயாபீடத்தையும், வானோர் அஞ்சும் கஞ்சனை — தேவர்களும் அஞ்சும் (வீரமுடைய) கம்ஸனையும், முன் கடிந்து — முன்(ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில்) கொன்று, அவனி பாரம் தீர்த்த—பூமியின் பாரத்தை ஒழித்த, காவலனே-(ஸாது)ரக்ஷகனே!, கோவலனாய் நின்ற கோவே-இடைச்சிறுவனாய் நின்ற ஸ்வாமியே!, அஞ்சனமும் காயாவும் அனைய மேனி — மையையும் காயாம்பூவையும்போன்ற (நிறமுடைய) திருமேனியையுடைய, அடியவர்க்குமெய்யனே—அடியவர்க்குமெய்யனே!, அயிந்தை வாழும் மஞ்சு எனவே — திருவயிந்திரபுரத்தில் நித்ய வாஸம்செய்யும் மேகம் என்னலாம்படி, அருள் பொழியும் வள்ளலே — கருணை (யாகிய நீரைப்) பொழியும் கொடையாளனே!, நின் வடிவு அழகு — உன் திருமேனியின் அழகை, மறவாதார் — மறவாத மஹான்கள், பிறவாதாரே — மறுபிறவியொழியப்பெறுவர்

அடியவர்க்குமெய்யனே! முன் கிருஷ்ணாவதாரத்தில் பூதனை, சகடாஸுரன், மல்லர், குவலயாபீடம், கம்ஸன் ஆகிய இவர்களைக் கொன்று பூமிக்கு இந்தப் பாபிகளால் நேர்ந்த பாரத்தை ஒழித்து ஸாதுக்களைக் காத்தருளினாய்; இத்தனைப் பெருமையுடையனாயிருந்தும் இடைச்சேரியில் கோபாலனாய்நின்று நின் எளிமையை உலகுக்குக் காட்டியருளினாய்; திருவயிந்திரபுரத்தில் நித்யவாஸம்செய்யும் ஒரு காளமேகம் என்று வியந்து பேசும்படி அடியார்மீது கருணையெனும் நீரைப் பொழிந்துநிற்கும் உன் வண்மைக்குணத்தை என்னென்று உரைப்பேன்!!! மைமலையையும் காயாம்பூவையும் போன்ற நிறமுடைய உன் திருமேனியழகை மறவாது அநுபவிப்பவர் காமபந்தம் நீங்கப்பெறுவர்—என்றவாறு 6

**இனி 2-பாசுரங்களால் யமவாதனையில்லாது காத்தல் வேண்டப்படுகின்றது—**

*எழுசீராசிரியவிருத்தம்*

363 மையுமா கடலு மயிலுமா மழையு
மணிகளுங் குவளையுங் கொண்ட
மெய்யனே யடியோர் மெய்யனே விண்ணோ
ரீசனே நீசனே னடைந்தேன்

கையுமா ழியுமாயக களிறுகாத் தவனே
காலனூ தமரேனைக கவரா
தையனே வநதன் றஞ்சலேன் றருடேன்
னயிநதைமா நகரமாந தானே. 7

உரை·— மையும்—(கணணுககு இடும)மையும, மா கடலும்—பெரிய கடலும, மயிலும்—(பலநிறஙகொணட)மயிலும, மா மழையும்—பெருமைபெறற மேகமும, மணிகளும்— நீலமணிகளும, குவளையும்—கருநெயதலும (ஆகிய இவறறின தனமையை), கொணட—உடைய, மெயயனே — திருமேனியையுடையவனே!, அடியோாமெயயனே — அடியவாககுமெயயனே!, விணணோா ஈசனே — நிதயஸூரிகளுககுத தலைவனே!, நீசனேன் — அறபனான அடியேன, அடைநதேன் — (உனனைச சரணமாக) அடைநதேன கையும் ஆழியுமாய — கையில ஏநதிய சககரததுடன், களிறு காததவனே — கஜேநதரனை ரக்ஷிதத வனே!, தேன் அயிநதைமாநகா அமாநதானே— அழகிய திருவயிநதை எனனும பெரிய நகரததில நிதயவாஸமசெயதருளுமவனே!, ஐயனே — ஸவாமியே!, காலனூ தமா — யமனுடைய படாகள, எ(ன)னைக கவராது—எனனைக கொணடுபோகாதவாறு, அனறு வநது—(நான மரிககும) அநநாள எழுநதருளி, அஞசல என்று அருள — அஞசாதே எனறு அருளவாயாக.

மைககுவியல, கமபீரமான கடல, பலநிறஙகலநத மேனியையுடைய மயில, நீரைப பொழியும மேகம, நீலரததினஙகள, கருநெயதறபூ ஆகிய இவையனைததினையும போனற திருமேனியையுடைய தெயவநாயகனே! உனனைச சரணமடைநதேன முன திருககையிலுளள திருவாழியால முதலைவாயபபட்ட கஜேநதரனைக காததததுபோல, என அநதிமகாலததில யமதூதாகள வநது எனனை இழுததுசசெனறு வேதனைசெயயாதபடி நீ எனககு அபயமகொடுதது காததருளவாயாக—எனறவாறு 7

364 பதினனகுசீாசசநதவிருததம

மஞசு லாவு சோலை சூழ யிந்தை மன்னு மன்னுசீா
வரையெ டுத்து நிரைய ளித்த மாசில வாசு தேவனே
செஞ்சொ லன்பா சிந்தை கொண்டு தீதி லாத தூதனுயத்
தேரு மூாநது தேசு யாநத செல்வ தெயவ நாயக

வெஞ்சொ லாளர் கால தூதர் வீசு பாசம் வந்தென்மேல்
விழுந்த ழுந்தி யான யர்ந்து வீழ்வ தற்கு முன்னநீ
யஞ்ச லஞ்ச லஞ்ச லென்ற ளிக்க வேண்டு மச்சுதா
வடிய வார்க்கு மருளி யக்கு மடிய வார்க்கு மெய்யனே

உரை — மஞ்சு உலாவு— மேகங்கள் ஸஞ்சரிக்கின்ற, சோலை சூழ — சோலைகள் சூழப்பெற்ற, அயிந்தை மன்னும் — திருவயிந்திர புரத்தில் நித்யவாஸம்செய்தருளுமவனும், மன்னு சீர் — நிலைபெற்ற திருக்கல்யாணகுணங்களையுடையவனும், வரை எடுத்து — (கோவர்த்தன) மலையை எடுத்து, நிரை அளித்த — பசுநிரையைக் காத்தவனும், மாசு இல் — குற்றம் அற்றவனும், வாசுதேவனே — வஸுதேவ குமாரனும் ஆனவனே!, செம் சொல் அன்பர் — செம்மையுள்ள வார்த்தைகளையுடைய அன்பர்களான பாண்டவர்களின், சிந்தை கொண்டு — எண்ணத்தை ஏற்றுக்கொண்டு, தீது இலாத தூதனாய் — குற்றமற்ற தூதனாகி, தேரும் ஊர்ந்து — (அர்ஜுநனுக்குச் சாரதியாயநின்று) தேரையும் செலுத்தி, தேசு உயர்ந்த—(அதனால்) தேஜஸ் மிக்க, செல்வ — செல்வ (மாயநிற்பவ) னே!, தெய்வநாயக — தெய்வ நாயகனே!, அச்சுதா—(அடியவரைக்)கைவிடாதவனே!, அடியவர்க்கு — பாகவதர்களுக்கு, மருள் இயக்கும் — அஜ்ஞானத்தை ஓட்டுகின்ற, அடியவர்க்குமெய்யனே — அடியவர்மெய்யனே!, வெம் சொலாளர் — கொடிய சொற்களையுடைய, காலதூதர்—யமதூதர்களால், வீசு பாசம்— வீசப்படுகின்ற பாசம், என் மேல் வந்து விழுந்து அழுந்தி—என்மீது வந்து விழுந்து அழுந்திநிற்க, யான அயர்ந்து வீழ்வதற்கு முன்னம்— (அதனால்) நான் தளர்ந்து விழுவதற்கு முன்னமே, நீ — நீ, அஞ்சல் அஞ்சல் அஞ்சல் என்று — அஞ்சாதே அஞ்சாதே அஞ்சாதே என்று (முக்காலும் கூறி), அளிக்கவேண்டும் — காத்தருளவேண்டும்.

மேகங்கள் வந்து தங்கி உலாவும்படி மிக உயர்ந்துநிற்கும் சோலைகளாலே சூழப்பெற்ற திருவயிந்திரபுரத்தில் நித்யவாஸம்செய்து அடியார்களின் அஜ்ஞானத்தைப் போக்கியருளும் அடியவர்க்குமெய்யனே! முன் இந்திரன் பெய்த கல்மாரியால் வருந்திய பசுக்களைக் காக்கக் கோவர்த்தன மலையைக் கையினால் தாங்கியருளினாய், உண்மையே பேசுகின்ற பாண்டவர்களின் விருப்பத்தை ஏற்றுக்கொண்டு அவர்களுக்காகத் தூதுசென்று காத்தருளினாய், போர்க்களத்தில் அர்ஜுநன் போரை நடத்தமுடியாமல் தவித்து நிற்கும்போது அவன்தேரிலே பாகனாயிருந்து அவனை நல்வழிப்

படுததியதால் உன பெருமை மிகுதியாயசிறககபபெறறனே, இவவாறு உன அடியாாகளான பலரை ஆபததுக காலததில வநது காததருளினுய, இவறறை நினைநது உனனைச சரணமடைநத அடியேன யமதூதா வநது பாசததை வீச அதனல தளாநது வீழவதறகு முனனமே நீ வநது முககாலும அபய பரதானமசெயது அடியேனைக காததருளவேணடுமஎனறவாறு 8

ஸ்ரீதேசிகன் தம்மைத் திருவடிகளில் சேர்த்துக்கொள்ளுமாறு தெய்வநாயகனைப் பிரார்த்திக்கின்றர்—

365 கடடளைககலிததுறை

பொருததம் பொருந்தலும போகுந தவற்றுடன் பொயமமதிமேல்
விருததங கலிததுறை மேவு மழன்மதம் வேறினியேன்
றிருத்த மனததினிற சேரா வெமைததெய்வ நாயகநின்
வருத்தம பொறுவரு ளான்மன் னடைககலங் கொணடருளே

உரை:— தேயவநாயக – தெயவநாயகனே!, பொருத்தம் பொருநதலும் – (உன திருவுளளததோடு) பொருததம் (சேதநனிடதது) உணடானவளவில, தவறறுடன்–அபராதஙகளுடன, பொய்ம் மதி – அஜஞாநமும, மேல – மேலும, விருத்தம்–விபரீதஜஞாநமும, கலிதது உறை மேவும் – கிளாநது தஙகுதலைப பொருநதிய, அழல் – அகனிபோனற காமமும, மதம் – செருககும, போகும் – விலகிப் போகும. மனத்தினில திருத்தம் சேரா எ(ம்)மை – மனததில திருத் தம அடையாத எமமை, வருததம் பொறு– (பிறா) துககம (காணப) பொறுத, நின் அருளால் – உன கருணையால, மன் அடைககலம் கொண்டருள் – ஸதிரமாய ரக்ஷிககபபடவேணடிய வஸதுவாக ஏறறுககொணடருளவாயாக. இனி வேறு என் – இனி (இதினும) வேருக (யாம) வேணடககிடபபது என ?

தெயவநாயகனே! உன திருவுளளததிறகு ஏறற காரியத்தையே செயவதாய உறுதிகொணட சேதநனுககு அவன செயத அபராதஙகள, அஜஞாநம, விபரீதஜஞாநம, மேனமேலும அகனிபோல்வளாநதுவரும காமம, காவம ஆகிய அனைததும ஒழிநதுபோம என மனமோ அததகையபரிபககுவ நிலையைப பெறறிருககினறது ஆயினும பிறருடைய வருததம காணசகி யாத உன கருணையால எனனைக காககவேணடிய வஸதுவாககொணடு உன திருவடியில சோததுககொளளவேணடும இதுவனறி அடியேன வேணடு வதறகு வேறு யாது உளது? ஒனறுமிலலைஎனறு பிரார்ததிததவாறு

அழல் = அக்னி இங்கு உவமவாகுபெயராய்நின்று தீயைப்போலத் தீங்குதரும் காமத்தைச் சுட்டிநின்றது

[இப்பாசுரத்திற்குப் பல பெரியோரிடம் பணிந்துகேட்டும் ஏற்ற பொருள் காண இயலவில்லை, பழையவுரைகளும் பயன் தரவில்லை எனினும் ஒருவாறு பொருள் பொருந்துமவண்ணம் வரையப்பட்டுளது இதனினும் சிறந்த பொருள் கிடைப்பின் மறுபதிப்பிற் சேர்க்கப்பெறும்] 9

முடிவுரை கூறப்படுகின்றது—

எண்சீராசிரியவிருத்தம்

366 அந்தமிலசீ ரயிந்தைநக ரமாந்த நாத
னடியிணைமே லடியுரையா லைம்ப தேத்திச்
சிந்தைகவா பிராகிருத நூறு கூறிச்
செழுந்தமிழமும் மணிக்கோவை செறியச் சோத்துப்
பந்துகழ லம்மானை யூச லேசல
பரவுநவ மணிமாலை யிவையுஞ் சொன்னேன்
முந்தைமறை மொழியவழி மொழிநீ யென்று
முகுந்தனரு டந்தபயன் பெற்றே னேனே 1

உரை.— அந்தம் இல சீர்—எல்லையற்ற பெருமையையுடைய அயிந்தைநகர் — திருவயிந்திரபுரத்தில், அமர்ந்த நாதன்— நித்யவாஸம் செய்கின்ற தெய்வநாயகனுடைய, அடியிணை மேல — இரண்டு திருவடிகளின்மீது, அடி உரையால — (எல்லாப் பாஷைகளுக்கும் மூலமாயுள்ள வடமொழியால, ஐம்பது ஏத்தி— (தேவநாயகபஞ்சாசத் எனனும) ஐம்பது சுலோகங்களை (இயற்றி)ப் புகழ்ந்து, சிந்தை கவர் — மனத்தைக் கவருகின்ற, பிராகிருதம் நூறு கூறி — பிராகருத பாஷையால(அச்யுதசதகம் எனனும) நூறு (சுலோகங்களைக்)கூறி, செழும தமிழ்— வளமமிக்க தமிழ்ப்பாஷையால, மும்மணிக்கோவை மும்மணிக்கோவை எனனும பிரபந்தத்தை, செறியச் சேர்த்து பொருள்பொருந்துமாறு சேர்த்து, பந்து கழல் அம்மானை ஊசல் ஏசல் பரவு நவமணிமாலை—பந்து கழல அம்மானை ஊசல ஏசல(அவைவரும) கொண்டாடும நவமணிமாலை ஆகிய, இவையும் சொன்னேன்—இந்தப் பிரபந்தங்களையும பாடினேன முந்தை மறை மொழிய — ப்ராசீனமான வேதங்கள கூற, நீ வழி மொழி என்று — நீ அவ்வாறு

களையே ப்ரபந்தங்களின் வாயிலாகக் கூறுக என்று, முகுந்தன் அருள் தந்த பயன் — அடியவர்க்குமெய்யன் அருளுடன் நியமித்ததன் பலனை, நான் பெற்றேன் — நான் அடைந்தேன்.

பெருமையில் நிகரற்றிருக்கும் திருவயிந்திரபுரத்தில் எழுந்தருளியுள்ள தெய்வநாயகன் வேதங்கள் கூறும் அர்த்தங்களை ஸ்தோத்ரரூபமாகப் பாடும்படி அடியேனை நியமித்தான் அதைச் சிரமேற்கொண்டு அவன் திருவடிகளின்மீது எல்லாப் பாஷைகளுக்கும் தாய்ப்பாஷையாகிய ஸம்ஸ்க்ருதத்தில் தேவநாயகபஞ்சாசத் என்னும் ஸ்தோத்ரத்தையும், ஸரஸ்வதிதேவியின் மழலைச்சொல்லாதலின் மனத்தைக் கவரக்கூடிய ப்ராக்ருதபாஷையில் அச்யுத சதகம் என்னும் ஸ்தோத்ரத்தையும், செழுமையுள்ள தமிழ்ப்பாஷையில் மும்மணிக்கோவை, பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல், நவமணிமாலை ஆகிய ப்ரபந்தங்களையும் பாடி அவனது கட்டளையைத் தலைக்கட்டப்பெற்றேன் [இவ்வாறு தெய்வநாயகன் பாடுவித்த இப்ப்ரபந்தங்கள் அனைத்தும் ஸாத்விகர்களுக்கு அநுஸந்திக்க உரியனவாகும்]—என்றவாறு

[முகுந்தன் என்ற திருநாமம் போகமோக்ஷங்களையளிப்பவன் என்னும் பொருளைத் தரும் மோக்ஷத்தில் பெறக்கடவ பரிபூர்ணாநுபவத்தை அடியவர்க்குமெய்யன் தமக்கு இவ்வுலகிலேயே அருளியதைக் கருதி ஸ்ரீதேசிகன் இத்திருநாமத்தை இங்கு அநுஸந்தித்ததாகப் பெரியோர் பணிப்பர்] 10

பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல் ஆகிய ப்ரபந்தங்கள் ஐந்தும் அகப்படவில்லை

## நவமணிமாலை — உரை முற்றிற்று

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம:

ஸ்ரீ:

ஸ்ரீமாந்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

# ப்ரபந்தஸாரம் - உரை

பொதுத்தனியன்

ராமாநுஜதயாபாத்ரம் .. .... .... .... ஜெயஸிம்ஹமு||

ஸ்ரீரோனது .. .. .. . .. வாழவு.

சிறப்புத்தனியன்—உரை

எண்சீராசிரியவிருத்தம்

ஆரணநான் கின்பொருளை யாழ்வார்க ளாய்ந்தடைவே
யன்புடனே யம்புவியோ ரனைவருமீ டேறவென்று
நாரணனார் தாள்களிலே நாலாயி ரந்தமிழா
லெண்ணியுரை செய்தவற்றை நாடிவகை தொகைசெய்தாய்
பூரணமா ஞானியர்சேர் பொங்குபுகழ்த் தூப்புல்வரும்
புனிதனென்றும் பிள்ளையென்றும் புவியோர்புகழ் வேங்கடவா
தாரணியோ ரிங்குகக்கச் சாற்றியநற் ப்ரபந்தசாரந்
தனையுரைத்து வாழுமன்ந் தந்தருளா யென்றனக்கே 1

உரை.— அம் புவியோர் அனைவரும்—*அழகிய இவ்வுலகிலுள்ளவர் அனைவரும*, நாரணனார் தாள்களில் நண்ணி — *ஸ்ரீமந்நாராயணனின் திருவடிகளில் அடைந்து*, ஈடேற என்று — *உஜ்ஜீவிக்கவேண்டும் என்று*, ஆழ்வார்கள் — *ஆழ்வார்கள்*, அன்புடனே — *கிருபையுடனே*, ஆரணம்நான்கின் பொருளை—*நான்கு வேதங்களின் தாத்பர்யத்தை*, அடைவே ஆய்ந்து—*முறையாக ஆராய்ச்சிசெய்து*, நாலாயிரம் — *நாலாயிரம் பாசுரங்களையும்*, தமிழால் — *தமிழ்ப்பாஷையால்*, உரைசெய்தவற்றை நாடி—*அருளிச்செய்த வற்றை ஆராய்ந்து*, வகை தொகை செய்தாய் — *வகுப்பாகப்பிரித்து எண்ணிக்கை செய்தவனே!*, பூரண மா ஞானியர் சேர் — *பரிபூரணமான ஜ்ஞானமுடைய பெரியோர்கள் நித்யவாஸம்செய்யப்பெற்றதும*, பொங்கு புகழ் — *(மேன்மேலும்)வளர்கின்ற புகழையுடையதுமான*, தூப்புல் வரும்—*தூப்புலில் அவதரித்த*, புனிதன் என்றும் — *பரிசுத்தன் என்றும்*, பிள்ளை என்றும் — *பிள்ளை என்றும்*, புவியோர் புகழ் வேங்கடவா — *உலகிலுள்ளவரால் புகழப்படுகின்ற (தூப்புல்) திருவேங்கடமுடையானே!*, தாரணியோர் — *பூமியிலுள்ளோர்*, இங்கு உகக்க — *இவ்வுலகிலேயே மகிழ்ச்சிபெறும்படி*, சாற்றிய —

(நீ) *அருளிச்செய்த*, **நல் ப்ரபந்தசாரந்தனை** — *சிறந்த ப்ரபந்தஸாரத்தை*, **உரைத்து வாழும் மனம்**—*அநுஸந்தித்து உஜ்ஜீவிக்கும்படியுள்ள மனத்தை*, **என்றனக்குத் தந்தருளாய்** — *எனக்குக் கொடுத்தருள்வாயாக* 1

*எண்சீராசிரியவிருத்தம்*

ஆதிமறை யோதிமகி ழயக்கிரிவர் தம்மருளா
லன்புடனே தூப்புனக ரவதரித்தே யிங்குவந்த
வாதியரை வென்றுவந்து வன்புவிமே லெதிராசர்
வாழ்வுறுநற் றெரிசனத்தை வண்மையுட னேவளர்த்து
நீதிநெறி தவறும னிறுத்தியிடும் வேங்கடவா
நேசமுட னாழ்வார்க ணிலைகளையெல் லாமுணர்ந்து
சாதுசனம் வாழவென்று சாற்றியநற் ப்ரபந்தசாரந்
தனையுரைத்து வாழமனந் தந்தருளா யென்றனக்கே 2

உரை.— **ஆதி மறை** — *பழமையான வேதத்தை*, **ஓதி மகிழ்** — (*ப்ரஹ்மாவுக்கு*) *உபதேசித்து மகிழ்ந்த*, **அயக்கிரிவர்தம் அருளால்**—*ஹயக்ரீவனுடைய கிருபையால்*, **அன்புடனே** — (*மானிடாமீது*) *அன்புடன்*, **தூப்புல் நகர் அவதரித்து**—*தூப்புல் நகரத்தில் அவதரித்து*, **இங்கு வந்த**—*இப்பூமியில் வந்த*, **வாதியரை வென்று உவந்து** — *வாதம்செய்த பிறமதத்தினரைக் கண்டித்து மகிழ்ந்து*, **வன் புவிமேல்** — *வலிமைவாய்ந்த பூமியின்மேல்*, **வாழ்வுறு** — *நிலைபெற்றுநிற்கின்ற*, **எதிராசர்** — *ஸ்ரீபாஷ்யகாரருடைய*, **நல் தெரிசனத்தை** — *சிறந்த ஸித்தாந்தத்தை*, **வண்மையுடனே வளர்த்து** — (*அனைவரும் வாழவேண்டுமென்ற*) *கொடைக்குணத்தோடு வளர்த்து*, **நீதி நெறி தவறுமல்** — *வேதமார்க்கம் தவறாமல்*, **நிறுத்தியிடும் வேங்கடவா** — *ஸ்தாபித்த* (*தூப்புல்*) *திருவேங்கடமுடையானே*, **ஆழ்வார்கள் நிலைகளை எல்லாம் உணர்ந்து** — *ஆழ்வார்களின் தன்மைகளை எல்லாம் அறிந்து*, **சாது சனம் வாழ என்று** — *ஸாதுஜநங்கள் உஜ்ஜீவிக்கவேண்டும் என்று கருதி*, **நேசமுடன் சாற்றிய**—*அன்புடன் அருளிச்செய்த*, **நல் ப்ரபந்தசாரந்தனை**—*சிறந்த ப்ரபந்தஸாரத்தை*, **உரைத்து வாழும் மனம்** — *அநுஸந்தித்து உஜ்ஜீவிக்கும்படியுள்ள மனத்தை*, **என்றனக்குத் தந்தருளாய்** — *எனக்கு அருள்புரிவாயாக* 2

---

[ விஷயச்சுருக்கம் ]

*ஸ்ரீதேசிகன், நாலாயிரதிவ்யப்ரபந்தத்தின்மீது தமக்குள்ள ஈடுபாட்டின் மிகுதியால் இப்பிரபந்தத்தில் ஆழ்வார்கள் அவதரித்த திவ்யஸ்தலம், மாஸம், திருநக்ஷத்திரம், அவர்கள் பெருமை, அருளிச்செய்த ப்ரபந்தங்களின்*

*பெயர், அவற்றின் பாசுர எண், அப்பிரபந்தங்களின் உயிர்நிலையான ஸாரார்த்தம் ஆகிய இவற்றை வெளியிட்டுத் தம்முடைய அநுஸந்தானத்திற்காக அந்தப் பிரபந்தங்களைத் தமக்கு அருளிச்செய்யுமாறு அந்த அந்த ஆழ்வார்களைப் பிரார்த்தித்துக் கடைசியில் 2-பாசுரங்களில் ஆழ்வார்கள் திருநாமத்தையும் அவர்கள் அருளிச்செய்த பாசுர எண்களையும் கூறி, ஒரு பாசுரத்தில் ஒரே கோஷ்டியாக அவர்களை அநுபவித்து, அவர்களின் பிரபந்தமே தமக்கு உஜ்ஜீவிக்க ஸாதநமென்று மொழிந்து, திவ்யபிரபந்தத்தில் தமக்குள்ள பக்தியின் மிகுதியால்* **தமிழ்மறையோன்** *என்று தம்மைப் பெருமையுடன் பேசிக் கொண்டு, இந்த ப்ரபந்தஸாரத்தை அநுஸந்திப்பவருக்கு எம்பெருமான் கருணையால் ஸகல க்ஷேமமுமுண்டாமென்று முடித்தருள்கிறார் ஆழ்வார்கள் அருளிய* **ப்ரபந்தங்களின் ஸாரமான பொருளை** *இதிலே (சிறிய வாக்யத்தில் அடக்கிக்) கூறியபடியால் இதற்கு இப்பெயர் வந்தது.*

*[ ஒரு வேண்டுகோள் — ஸந்நிதியிலும் திருமாளிகையிலும் திவ்ய ப்ரபந்தத்தை ஸேவிக்கும்போது அந்த அந்த ப்ரபந்தத்தின் தனியனை அநுஸந்தித்தவுடன் அந்த அந்த ஆழ்வார் விஷயமாய இப் பிரபந்தத்தில் தேசிகன் அருளிய பாசுரத்தையும் தனியனாக அநுஸந்திப்பது மிகவும் உசிதமாகும். புதியதாய ஒரு வழக்கத்தைக் கைக்கொள்ளச் சிலர் கூசக்கூடும் பல புதிய சிறந்த வழக்கங்கள் கைக்கொள்ளப்பட்டிருப்பதையும் ஔசித்யத்தையும் கருதி இதையும் கொள்ளலாம். பெரியோர் ஆராய்ந்து நிர்ணயிக்க ]*

---

**பிரபந்தம் இடையூறின்றி முடிவதற்காக ஆசார்யவந்தநம் செய்யப்படுகின்றது—**

*இப்பிரபந்தம் முழுவதும் எண்சீராசிரியவிருத்தத்தால் அமைந்தது.*

367 ஆழ்வார்க ளவதரித்த நாளூர் திங்க
ளடைவுதிரு நாமங்க ளவர்தாஞ் செய்த
வாழ்வான திருமொழிக ளவற்றுட் பாட்டின்
வகையான தொகையிலக்க மற்று மெல்லாம்
வீழ்வாக மேதினிமேல் விளங்க நாளும்
விரித்துரைக்குங் கருத்துடனே மிக்கோர் தங்க
ணீள்பாத நிரந்தரமுந் தொழுது வாழ்த்து
நேசமுட னடியேன்றன் னெஞ்சு தானே. 1

உரை :—ஆழ்வார்கள் அவதரித்த – ஆழ்வார்கள் (இப்பூமியில்) அவதாரஞ்செய்தருளிய, நாள் – திருநக்ஷத்திரம், ஊர் – திவ்யதேசம், திங்கள் – மாஸம், அடைவு – (முன் பின் என்ற) க்ரமம், திருநாமங்கள் – (அவர்களின்) திருநாமங்கள், அவர்தாம் செய்த – அவர்கள் அருளிச்செய்த, வாழ்வான – (உலகிலுள்ளோர்) உஜ்ஜீவிக்கக்காரணமான, திருமொழிகள் – திவ்யப்ரபந்தங்கள், அவற்றுள் – அந்த ப்ரபந்தங்களுள், பாட்டின் வகையான தொகை– பாட்டின் வகுப்பின்படி எண்கள், இலக்கம் – (அவரவர் அருளிச்செய்த பாசுரத்தின்) கூட்டிய எண், மற்றும் எல்லாம் – (அந்த அந்த ப்ரபந்தங்களில் வெளியாகும் ஸாரார்த்தம் ஆகிய) பிற எல்லாம், வீழ்வாக – (அனைவரும்) விரும்புமாறு, நாளும் – எந்நாளும், மேதினி மேல் விளங்க – பூமியில் ப்ரகாசிக்கும்படி, விரித்து உரைக்கும் கருத்துடன் – விளக்கிக் கூறவேண்டுமென்ற நோக்கத்துடன், அடியேன்றன் நெஞ்சு – அடியேனுடைய மனம், மிக்கோர்தங்கள் – பெரியோர்களான ஆசார்யர்களுடைய, நீள் பாதம் – நீண்ட திருவடிகளை, நேசமுடன் – அன்புடன், நிரந்தரமும் – இடைவிடாது (எப்பொழுதும்), தொழுது வாழ்த்தும் – வணங்கி வாழ்த்தும்.

*ஆழ்வார்கள் அவதரித்த மாஸம், திருநக்ஷத்திரம், திவ்யதேசம், திருநாமங்கள், ப்ரபந்தம், பாசுரம், இவற்றின் எண்முதலியவற்றை உலகிலுள்ளோர் எந்நாளும் அநுஸந்தித்து உஜ்ஜீவிக்கவேண்டுமென்பதற்காக இயற்றப்படும் இப்பிரபந்தஸாரம் தடையின்றி முடிவுபெறுவதற்காகப் பூர்வாசாரியர்களின் திருவடிகளைத் தொழுகின்றேன்—என்று மங்களமிட்டவாறு* 1

---

### பொய்கையாழ்வார்

368 அருண்மிகுத்த தொருவடிவாய்க் கச்சி தன்னி
 லைப்பசிமா தத்திருவோ ணத்து நாளிற்
பொருண்மிகுத்த மறைவிளங்கப் புவியோ ருய்யப்
 பொய்கைதனில் வந்துதித்த புனிதா முன்னு
ளிருளதனிற் றணகோவ லிடைக ழிச்சென்
 றிருவருட னிற்கவுமா லிடைநே ருக்கத்
திருவிளக்கா மெனும்வையந் தகளி நூறுஞ்
 செழும்பொருளா வெனக்கருள்செய் திருந்த நீயே. 2

உரை.— பொருள் மிகுத்த – ஸாரார்த்தங்கள் மிகுந்துகிற கின்ற, மறை விளங்க – வேத (ாந்த)ம் (உலகில்) பரகாசிக்கவும், புவியோர் உய்ய – உலகிலுள்ளோர் உஜ்ஜீவிக்கவும், ஐப்பசிமாதத் திருவோணத்து நாளில் – ஐப்பசிமாதத்தில் திருவோணம் என்ற நாளில், கச்சிதன்னில் – காஞ்சீபுரத்தில், பொய்கைதனில் – திருத் தாமரைப்பொய்கையில், மிகுத்தது அருள் ஒரு வடிவாய் – (சேதநர் களமீது) மிகவளர்ந்த கருணையே ஒரு வடிவுகொண்டதெனனுமபடி, வந்து உதித்த – வந்து அவதாரம்செய்த, புனிதா – பரிசுத்த ஸ்வ ரூபனான பொய்கையாழ்வாரே !, முன்னாள் – முன் ஒருநாள், இரு ளதனில் – இருளில், தண் கோவல் – குளிர்ந்த திருக்கோவலூரில், இடைகழிச் சென்று – (ஒரு திருமாளிகையின்) இடைகழிக்குச் சென்று, இருவருடன் நிறகவும் – (நீ பூததத்தாழ்வார் பேயாழ்வார் ஆகிய) இருவருடன் நிற்கவும், மால் இடை நெருக்க – (அப்போது) எம்பெருமான் நடுவில் (புகுந்து) நெருக்க, திரு விளக்கு ஆம் எனும்— (இருளைப் போக்குகின்ற) சிறந்த விளக்காக ஆகும் என்று அருளிச் செய்த, வையம்தகளி – 'வையந்தகளி' என்று தொடங்குகின்ற, நூறும் — (முதல் திருவந்தாதியாகிய) நூறு பாசுரங்களையும், செழும் பொருளா – சிறந்த செல்வமாக, நீ எனக்குத் திருந்த அருள்செய் – நீ எனக்குக் குறைதீர அருள்புரியவேண்டும்

பொய்கையாழ்வார் ஐப்பசிமாதத்துத் திருவோணத்திருநக்ஷத்திரத் தில் பெருமாள்கோயிலில் விளக்கொளியெம்பெருமான்ஸந்நிதிக்கு வட புறத்தேயுள்ள ஓர் உயர்தரப் பொய்கையில் தெய்வீகமான ஒரு பொற் றாமரையின் நடுவே அயோநிஜராய் அவதரித்தருளினார் பொய்கையில் அவதரித்ததுபற்றிப் பொய்கையாழ்வார் என்ற திருநாமம் வந்தது இவ ருடைய அவதாரத்தால் வேதார்த்தங்கள் உலகில் நன்கு விளங்கவும் அதனால் அனைவரும் உஜ்ஜீவிக்கவும் வழி ஏற்பட்டது. இவ்வாழ்வார் ஒருகால் திருக் கோவலூருக்கு எழுந்தருளியிருந்தபோது அங்குள்ள மிருகண்டுமுனிவர் திருமாளிகையின் இடைகழியில் தங்கினார் பின் பூதத்தாழ்வாரும் பேயாழ் வாரும் அங்கு எழுந்தருள, மூவரும் அச்சிறிய இடைகழியில் ஒன்றுகூடி நின்றனர் இவர்களின் திருமேனிஸம்பந்தத்தையும் திருவந்தாதிகளின் திருவவதாரத்தையும் விரும்பிய எம்பெருமானும் அங்கு வந்து இவர்களின் நடுவே புகுந்து இவர்களை நெருக்கினன் இவர்களும் அறிவுச்சுடர்பெற்று அவனை நன்கு அநுபவித்து ஒவ்வொருவரும் ஒவ்வோர் அந்தாதியைப் பாடி

யருளினா அவறறில உலகுககே வழிகாட்டும விளககாய அமைநத "வையநதகளியா" எனறு தொடஙகபபெறறு 100 பாசுரஙகள கொண டுள்ள முதறறிருவநதாதியைத தமது நெஞசிற பதியுமாறு அருளபுரிய வேணடுமெனறு ஸ்ரீதேசிகன பொயகையாழவாரைப பிராாததிததவாறு. 2

---

## பூதத்தாழ்வார்

369 கடன்மலலைக காவலனே பூத வேந்தே
காசினிமே லைபபசியி லவிட்ட நாள்வந
திடாகடியுந தணகோவ லிடைக ழிசசென
றிணையிலலா மூவருமா யிசைநதே நிறக
நடுவிலிவ ரொருவருமென் றறியா வணண
நளளிருளின மாலனெருகக நநதா ஞானச்
சுடாவிளககேற றியவனபே தகளி யான
தொடைநூறு மெனககருளசெய துலங்க நீயே 3

உரை — கடனமல்லைக காவலனே — திருககடனமலலைககு நாதனே!, பூதவேநதே — பூததததாழவாா எனனும ஸவாமியே!, காசினிமேல — இபபூவுலகினகண, ஐபபசியில — ஐபபசிமாதததில, அவிட்டநாள வநது — அவிட்டமெனனும திருநக்ஷததிரததில அவ தரிதது, இடா கடியும —(வஸிபபவரின) துனபததைப போககவலல, தண—குளிாநத, கோவல— திருககோவலூாில, இடைகழிச சென்று— (ஒரு திருமாளிகையின) இடைகழியிற சென்று, இணையிலலா மூவருமாய — ஒபபறற (நீஙகள) மூவரும, இசைநதே நிறக — ஒனறு கூடிநிறகுமபோது, நளளிருளில — மிகக இருளில, நடுவில ஒருவ ரும இவா என்று — (இவாகளின) நடுவில ஒருவரும இனனாா எனறு, அறியாவணணம் — அறியாதவாறு, மால் நெருகக — எமபெருமான (வநதுகூடி) நெருகக (அவனைக காணுமபொருட்டு), நநதா ஞானச சுடா விளககு ஏறறிய — அழியாத ஜ்ஞாநமாகிய பரகாசம நிறைநத தீபததைத ஏறறிய, அன்பேதகளியான — 'அனபே தகளியா' எனறு தொடஙகிய, தொடை நூறும் — (இரணடாம திருவநதாதி யாகிய) நூறு பாசுரஙகளையும, நீ எனககுத துலங்க அருளசெய் — எனககு விளஙகுமாறு அநுகரஹிபபாயாக

பூததத்தாழ்வார், ஐப்பசிமாதத்து அவிட்டத்திருநக்ஷத்திரத்தில் திருக்கடன்மல்லையிலே குருக்கத்திப்பூவின் நடுவே அயோநிஜராய் அவதரித்தருளினார் அவர் 'அன்பேதகளியா' என்று தொடங்கி அருளிச்செய்த 100பாசுரங்கொண்ட இரண்டாந்திருவந்தாதியைத் தம்முடைய அநுஸந்தாநத்திற்கு உரியதாகுமாறு ஸ்ரீதேசிகன் பூததத்தாழ்வாரைப் பிரார்த்தித்தவாறு

(சரிதவிவரம் 368-வது பாசுரவுரையிற் காண்க) 3

---

## பேயாழ்வார்

370 மாமயிலைப் பதியதனிற் றுலாமா தத்தில்
வருஞ்சதயத் தவதரித்துக் கோவ லூரிற்
றூமுனிவ ரிருவருடன் றுலங்க நின்று
துன்னியபே ரிருணீங்கச் சோதி தோன்றச்
சேமமுட னெடுமாலைக் காணப் புகுந்த
திருக்கண்டே னெனவுரைத்த தேவே யுன்றன்
பாமருவு தமிழ்மாலை நூறு பாட்டும்
பழவடியே னுக்கருள்செய் பரம நீயே. 4

உரை :—மா மயிலைப் பதியதனில் – பெருமைபெற்ற திருமயிலையென்னும் க்ஷேத்ரத்தில், துலாமாதத்தில் வரும் – ஐப்பசி மாதத்தில் வந்த, சதயத்து அவதரித்து – சதயநக்ஷத்திரத்தில் அவதரித்து, கோவலூரில்– திருக்கோவலூரில், தூ முனிவர் இருவருடன்— பரிசுத்தர்களான (பொய்கையாழ்வார் பூததத்தாழ்வார் என்ற) இருமுனிவருடன், துலங்க நின்று—விளங்க நின்று, துன்னிய பேர் இருள் நீங்க— (உலகில்) பொருந்திய பெரிய (அஜ்ஞாநமாகிய) இருள் நீங்கும்படி, சோதி தோன்ற—(தெய்வீகமான) தேஜஸ் உண்டாக, சேமமுடன்— இன்பத்தோடு, நெடுமாலைக் காணப்புகுந்து – எம்பெருமானை (ப்ரத்யக்ஷத்தால்) காணத்தொடங்கி, திருக்கண்டேன்என உரைத்ததேவே— 'திருக்கண்டேன்' என்று(தொடங்கும் ப்ரபந்தத்தை) அருளிச்செய்த ஸ்வாமீ!, பரம – (எல்லோரினும்) சிறந்தவனே!, உன்தன் — உன்னுடைய, பா மருவு தமிழ்மாலை – பாக்கள் நிறைந்த தமிழ்மாலையாகிய (மூன்றும் திருவந்தாதியென்னும்), நூறு பாட்டும் – நூறு பாசுரங்களையும், பழவடியேனுக்கு – தலைமுறைதலைமுறையாக உன் தாஸனாகிய அடியேனுக்கு, நீ அருள்செய் – நீ அருள்புரிவாயாக.

பேயாழ்வார் ஐப்பசிமாதத்துச் சதயத்திருநக்ஷத்திரத்திலே திருமயிலையில் ஆதிகேசவப்பெருமாள்ஸந்நிதிக்கு ஸமீபத்திலுள்ள ஒரு கிணற்றில் மலர்ந்த ஒரு செவ்வல்லிப்பூவில், அயோநிஜராய் அவதரித்தருளினார் அவர் பெரியபிராட்டியை முன்னிட்டே எம்பெருமானை அநுபவித்தபடியால் 'திருக்கண்டேன்' என்று தொடங்கி அருளிச்செய்த 100 பாசுரங்கொண்ட மூன்றாந்திருவந்தாதியைத் தமக்கு அருளுமாறு ஸ்ரீதேசிகன் பேயாழ்வாரைப் பிரார்த்தித்தவாறு

(சரித்விவரம் 368-வது பாசுரவுரையிற் காண்க)

இவ்வாழ்வார் காணப்புகுந்தது நெடுமாலை, ஆனால் (முதலில்) கண்டது திருவை என்று அருளிச்செய்த ஸ்வாரஸ்யம் காண்க 4

---

**திருமழிசையாழ்வார்**

371 தைம்மகத்தில் வருமழிசைப் பரனே மற்றைச்
சமயங்கள் பலதெரிந்து மாயோ னல்லாற்
றெய்வம்மற் றில்லையென வுரைத்த வேதச்
செழும்பொருணான் முகன்றொண்ணூற் றுறு பாட்டு
மெய்ம்மிகுத்த திருச்சந்த விருத்தப் பாடல்
விளங்கியநூற் றிருபதுந்தப் பாமன் மெய்யே
வையகத்து மறவாம லுரைத்து வாழும்
வகையடியே னுக்கருள்செய் மகிழ்ந்து நீயே 5

உரை — தை மகத்தில் வரும் — தைமாதத்து மகத்திருநக்ஷத்திரத்தில் அவதரித்த, மழிசைப்பரனே — திருமழிசையாழ்வாரே!, மற்றைப் பல சமயங்கள் தெரிந்து — மற்றப் பல மதங்களையும் (நன்கு) அறிந்து, மாயோன் அல்லால் — ஆச்சர்யச்செய்கையையுடைய ஸர்வேச்வரனையன்றி, தெய்வம் மற்று இல்லை—(உபாஸிக்கத்தக்க) தெய்வம் வேறு இல்லை, என உரைத்த — என்று வெளியிட்ட, வேதச் செழும் பொருள் — வேதத்தின் சிறந்த ஸாரார்த்தமாகிய, நான்முகன் தொண்ணூற்றுறு பாட்டும் — நான்முகன்திருவந்தாதியாகிய தொண்ணூற்றாறு பாசுரங்களையும், மெய் மிகுத்த — தத்துவார்த்தங்கள் நிறைந்த, திருச்சந்தவிருத்தப் பாடல் — திருச்சந்த

விருததப பாடடுககளாக, விளஙகிய — பரகாசிககினற, நூறறிருப துமம — நூறறிருபதுபாசுரஙகளையும, தபபாமல — தவறுமல, மெயயே — உளளவாறே, வையகதது — உலகததில, மறவாமல — மறவாது, உரைதது வாழும்வகை — அநுஸநிதது உஜஜீவிககும வணணம, நீ மகிழநது — நீ மகிழசசிகொணடு, அடியேனுககு — தாஸனுகிய எனககு, அருளசெய — அருளபுரிவாயாக.

திருமழிசையாழவார தைமாததது மகததிருநக்ஷததிரததில மஹீஸாரக்ஷேததிரமாகிய திருமழிசையில அவதரிததருளினா இவா பிற மதஙகள பலவறறிலும புகுநது ஆராயநது அவறறின குறறஙகளை உணாநது 96-பாசுரஙகளகொணட நானமுகன திருவநதாதியின வாயிலாக 'ஸாவேசுவரனே உபாஸிககததகக தெயவம' எனறு வேதததின ஸாராரததததை ஸதாபிததருளினா மேலும திருசசநதவிருததம எனற 120-பாசுரஙகளகொணட பிரபநததால 'ஸகலவஸதுககளும எமபெருமானுககுச சரீரமாயகிறபவை' எனற உணமைபபொருளை விளககியருளினா இவவிரணடு பிரபநதஙகளையும தவறுது மறவாது உளளவாறே அநுஸநிதது உஜஜீவிககசசெயயுமாறு இபபாசுரததால ஸ்ரீதேசிகன திருமழிசையாழவாரைப பிராரததிததபடி 5

---

### நம்மாழ்வார்

372 முன்னுரைத்த திருவிருதத நூறு பாட்டு
முறையின்வரு மாசிரிய மேழு பாட்டு
மன்னியநற பொருடபெரிய திருவந தாதி
மறவாத படியெணபத தேழு பாடடும்
பின்னுரைதத தோதிருவாய மொழியெப போதும்
பிழையறவா யிரத்தொருநூற் றிரணடு பாடடு
மிநநிலததில வைகாசி விசாகந தன்னி
லெழிறகுருகை வருமாறு விரஙகு நீயே. 6

உரை — வைகாசி விசாகநதன்னில்—வைகாசிமாதததுத திருவிசாகததிருநக்ஷததிரததில, இநநிலததில் — இவ்வுலகில, எழில் குருகை வரும் — அழகுபொருநதிய திருககுருகூரில அவதரிதத, மாறு—சடகோபனே!, முன் உரைதத—(நீ) முதலில அருளிசசெயத, திருவிருததம் நூறு பாடடும்—திருவிருததம எனனும பிரபநதததின நூறு பாசுரஙகளையும, முறையின் வரும்—முறையோடு அவதரிதத,

ஆசிரியம் ஏழுபாட்டும் — *திருவாசிரியம் என்னும் பிரபந்தத்தின் ஏழுபாசுரங்களையும்,* மறவாதபடி — *(எந்நாளும்) மறக்கமுடியாதவாறு,* நல பொருள மன்னிய — *சிறந்த ஸாரார்த்தம் பொருந்திய,* பெரியதிருவந்தாதி — *பெரியதிருவந்தாதியின்,* எண்பத்தேழு பாட்டும் — *எண்பத்தேழுபாசுரங்களையும்,* பின் உரைத்தது — *அதன்பின் அருளிச்செய்த,* ஓர் திருவாய்மொழி — (*எனக்கு*) *அநுஸந்திக்கத்தக்க திருவாய்மொழியின்,* ஆயிரத்தோரு நூற்றிரண்டுபாட்டும் — *ஆயிரத்து நூற்றிரண்டுபாசுரங்களையும்,* எப்போதும் பிழை அற — *எந்நாளும் பிழைநீங்க (அநுஸந்திக்கும்படி),* நீ இரங்கு — *நீ அருளபுரிவாயாக.*

*நம்மாழ்வார், வைகாசித்திருவிசாகத்திருநக்ஷத்திரத்தில் பாண்டி நாட்டில் திருக்குருகூர் (ஆழ்வார்திருநகரி) என்னும் திவ்யதேசத்தில் திருவவதரித்தருளினார்*

*இவ்வாழ்வார் உலகவிஷயங்களிலே சிறிதும் நாட்டமின்றித் திருப்புளியாழ்வாரின் அடியிலேயே எழுந்தருளியிருந்து எம்பெருமானுடைய அநுபவத்திலேயே ஆழ்ந்துகிடந்த நிலைமையிலே பற்பல திவ்யதேசத்து எம்பெருமான்களும் இவர் முன்பே எழுந்தருளிக் காட்சிதந்தனர். அப்பொழுது வாய்த்த இவருடைய பகவதநுபவமே 100 பாசுரங்கொண்ட திருவிருத்தமாகவும், 7 பாசுரங்கொண்ட திருவாசிரியமாகவும், 87 பாசுரங்கொண்ட பெரியதிருவந்தாதியாகவும், 1102 பாசுரங்கொண்ட திருவாய்மொழியாகவும் அவதரித்தது. இந்தப் பிரபந்தங்கள் நான்கையும் தமக்கு அருளுமாறு ஸ்ரீதேசிகன் நம்மாழ்வாரைப் பிரார்த்தித்தவாறு*

*இவ்வாழ்வார் அருளிய பிரபந்தம் நான்கினுள் முதலாவதாகிய திருவிருத்தத்தில் ஆழ்வார் தம் ஞானக்கண்ணாலே எம்பெருமானைக் கண்டு அவனைப் பகல இந்த ஸம்ஸாரத்தின் இழிவையும் பொறுக்கமுடியாமையையும் விண்ணப்பித்து ஸம்ஸாரத்தை ஒழித்தருளும்படி பிரார்த்தித்தார். பகவதநுபவத்திற்கு முக்கியவிரோதியாயுள்ள ப்ரக்ருதிஸம்பந்தம் நீங்குகையே முதலில் வேண்டப்பட்டமைபற்றி* ' முன்னுரைத்த ' *என்னலாயிற்று*

*இரண்டாவதான திருவாசிரியத்தில்—இவர்வேண்டுகோளைச் செவி சாய்த்த எம்பெருமான் பரமபதத்தில் பெறக்கடவதான தன் அநுபவத்தை இங்கேயே பெறும்படி தன் ஸ்வரூபம் திருமேனி குணம் விபூதி ஆகிய அனைத்தையும் இவருக்குக் காட்டிக்கொடுக்க, இவரும் அவற்றை அநுபவித்து*

